கற்குடி
செங்காட்டங்குடி
செம்பொன்பள்ளி
சேறை
துருத்தி
நனிபள்ளி
நெல்வாயிலரத்துறை
பருப்பதம்
பாசூர்
பாண்டிக்கொடுமுடி
புள்ளிருக்குவேளூர்
புறம்பயம்
புன்கூர்
பூந்துருத்தி
பைஞ்ஞீலி
மயிலாடுதுறை
மருகல்
வாஞ்சியம்
வாய்மூர்
வாளொளிபுற்றூர்
வான்மியூர்
வெண்ணியூர் 81

2-பதிகமுள்ளன:

73. அவளிவணல்லூர்
அன்பிலாலந்துறை
அன்னியூர்
ஆக்கூர்
ஆரூரறநெறி
எழும்பியூர்
ஓமாம்புலியூர்
கச்சிமேற்றளி
கண்டியூர்
கருகாவூர்
கருப்பறியலூர்
காட்டுப்பள்ளி-மேலை
காவிரிப்பூம்பட்டினம்
கானப்பேர்
கானூர்
கீழ்வேளூர்
குடமூக்கு
குடவாயில்
குரங்காடுதுறை-தென்
குருகாவூர்
குறுக்கை
குற்றாலம்
கேதாரம்
கேதீச்சுரம்
கொண்டீச்சுரம்
கோகர்ணம்
கோட்டாறு
கோலக்கா
கோவலூர்
கோழம்பம்
சிராப்பள்ளி
தேவூர்
நல்லம்
பந்தணைநல்லூர்
பரங்குன்று
பராய்த்துறை
பனையூர்
பாச்சிலாச்சிராமம்
பாதிரிப்புலியூர்
புத்தூர்
புனவாயில்
பெண்ணாகடம்
பெருவேளூர்
மங்கலக்குடி
மணஞ்சேரி
விஜயமங்கை
வேட்களம்
வேதிகுடி
வேள்விக்குடி (121). 98

இந்நூற்றிருபத்தொரு (121) தலங்கள் நீங்க, ஏனைய நூற்றைம்பத்துமூன்று (153) தலங்களும் ஒரே பதிகம் பெற்றனவாம். 749

## திருஞானசம்பந்த ஸ்வாமிகள் பதிகத்தொகைப்படி ஸ்தலவரிசை.

1. ஸ்ரீகாழி-பதிகத்தொகை 67
2. திருவீழிமிழலை „ 15
3. ஆலவாய் „ 9
4. முதுகுன்றம் „ 7
5. இடைமருது „ 6
6. ஆரூர் „ 5
ஐயாறு „ 5

4-பதிகமுள்ளன:

8. கச்சியேகம்பம்
நள்ளாறு
மறைக்காடு

3-பதிகமுள்ளன:

11. அம்பர்மாகாளம்
ஆனைக்கா
சிவபுரம்
நல்லூர்
நறையூர்
நாரையூர்
மழபாடி
வலஞ்சுழி
வெண்காடு

2-பதிகமுள்ளன:

20. அண்ணாமலை
ஆமாத்தூர்
இராமேசுரம்
கயிலாயம்
கழிப்பாலை
காளத்தி
காவிரிப்பூம்பட்டினம்
குடவாயில்
குற்றாலம்
கோட்டாறு
கோயில்
சாய்க்காடு
செங்காட்டங்குடி
தேவூர்
நாகேச்சுரம்
நாகைக்காரோணம்
புகலூர்
பூவணம்
மயிலாடுதுறை
மருகல்
மாற்பேறு
வலிவலம்
வாளொளிபுற்றூர்
வான்மியூர் (43).

ஓரே பதிகமுள்ளன:

ஸ்தல அகராதியில்

1, 2, 5, 6, 8, 9-11, 13-20, 26, 29, 30, 32, 33, 36, 37, 39-45, 47, 49, 51, 53, 54, 57, 62-65, 67-69, 71-74, 76, 78, 80-83, 85, 86, 90, 91, 93-95, 97, 100-103, 107-111, 114-116, 118, 120, 121, 123-127, 129, 131, 132, 134, 135, 138-145, 147, 148, 150, 152-154, 156, 157, 159, 162, 168, 170, 173-181, 183-188, 191, 193-200, 202, 204-211, 215-218, 220-222, 225, 226, 230-232, 234, 240-243, 245, 246, 248, 250, 252, 255-260, 264, 265, 268-274 ஆகிய எண்களுள்ள நூற்றெழுபத்தாறு (176) தலங்களாம்.

ஆகத் திருஞானசம்பந்த ஸ்வாமிகள் தேவாரம் பெற்ற ஸ்தலங்கள் (43+176=) 219

## திருநாவுக்கரசு ஸ்வாமிகள் பதிகத்தொகைப்படி ஸ்தலவரிசை.

1. ஆரூர் - பதிகத்தொகை 21
2. அதிகை ,, 16
3. ஐயாறு ,, 13
4. கோயில் ,, 8
வீழிமிழலை ,, 8
6. கச்சியேகம்பம் ,, 7

5-பதிகமுள்ளன:

7. ஆவடுதுறை
இடைமருது
ஒற்றியூர்
கழிப்பாலை
நெய்த்தானம்
பழனம்
புகலூர்
மறைக்காடு

4-பதிகமுள்ளன:

15. இன்னம்பர்
கயிலாயம்
சோற்றுத்துறை
நாகைக்காரோணம்
மாற்பேறு

3-பதிகமுள்ளன:

20. அண்ணாமலை
ஆனைக்கா
கடவூர்
ஸ்ரீகாழி
கோடிகா
நாகேச்சுரம்
பூந்துருத்தி

2-பதிகமுள்ளன:

27. ஆமாத்தூர்
ஆரூரறநெறி
ஆலங்காடு
ஆலவாய்
எறும்பியூர்
கடம்பூர்
குறுக்கை
கொண்டீச்சுரம்
கோளிலி
சாய்க்காடு
செம்பொன்பள்ளி
சேறை
நல்லூர்
நள்ளாறு
நாரையூர்
பாசூர்
புள்ளிருக்குவேளூர்
மழபாடி
வலஞ்சுழி
வலம்புரம்
வாய்மூர்
வெண்காடு
வெண்ணியூர் (49)

ஒரே பதிகமுள்ளன:

ஸ்தல அகராதியில்

10, 11, 16-18, 21, 27, 38, 54, 58, 60, 61, 64, 66, 68, 72, 75, 80, 83, 84, 86, 89, 93, 94, 96, 97, 99, 102, 112, 116, 124, 125, 128, 132, 133, 137, 146, 150, 157, 162, 170, 172, 177, 181, 182, 184, 186, 189, 190, 197, 199, 201, 205, 208, 211, 213-215, 217, 219-222, 224, 227, 235-237, 247, 249-251, 254, 255, 268, 270 ஆகிய எண்களுள்ள எழுபத்தாறு (76) தலங்களாம்.

ஆகத் திருநாவுக்கரசு ஸ்வாமிகள் தேவாரம்பெற்ற ஸ்தலங்கள் (49+76=) 125.

---

## சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பதிகத்தொகைப்படி ஸ்தலவரிசை.

---

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | ஆரூர் - பதிகத்தொகை | 8 | 3. | ஆவடுதுறை-பதிகத்தொகை | 2 |
| 2. | முதுகுன்றம் ,, | 3 | | ஒற்றியூர் ,, | 2 |
| | | | | நின்றியூர் ,, | 2 |

ஸ்தல அகராதியில்

3, 5, 10, 12, 22, 25, 26, 31, 34, 35, 46, 50, 52, 55, 56, 58, 59, 63, 64, 70, 74, 77, 79, 80, 83, 88, 89, 91, 92, 103, 106-108, 117, 122, 123, 126, 136, 142, 149-151, 160-166, 169, 171, 177, 183, 186, 192, 194, 196, 197, 203, 208, 210, 211, 213, 220, 223, 228, 229, 238, 239, 245, 247, 250, 253, 261-263, 266, 267 ஆகிய எண்களுள்ள எழுபத்தெட்டு (78) தலங்கள் ஒரேபாடல் பெற்றனவாம்.

ஆகச் சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் தேவாரம்பெற்ற ஸ்தலங்கள் (5+78=) 83.



ஸ்தல அகராதியில்

4-7, 12, 19, 22, 23, 26, 28, 29, 31, 34, 38, 47, 50, 51, 53, 56, 61-63, 70, 76, 80, 83, 88, 89, 97, 98, 101, 102, 105, 106, 110, 111, 121, 122, 124, 127, 128, 131, 132, 133, 137, 148, 151, 159, 160, 164, 165, 169, 173, 174, 176, 177, 181, 183, 184, 186, 188, 189, 193, 197, 199, 205, 207, 212, 216, 225, 226, 229, 231, 232, 237-239, 242-244, 246-248, 250, 251, 254, 261, 262, 266, 268, 272; * [18, 68, 112, 142, 179, 187, 224, 270] ஆகிய எண்களுள்ள 99 ஸ்தலங்கள் திருப்புகழ்ப் பாடலும் உடையனவாம்.

---

* இவ் வெண்களுள்ள தலங்களின் பாடல்கள் இனி அச்சிடப்படும் திருப்புகழ் மூன்றும் பாகத்தில் வருவனவாம்.



சிவமயம்.

# சிவஸ்தல மஞ்சரி.

## 1. அகத்தியான்பள்ளி:

வேதாரணியத்துக்குத் தெற்கு 1-மைல் தூரத்திலுள்ளது. திருமறைக்காட்டுக்குச் (229) சொல்லியிருக்கும் வழியைப்பார்க்க.

சுவாமியின் திருக்கலியாண கோலத்தைத் தரிசிக்கும் பொருட்டு அகஸ்தியர் தங்கியிருந்து வழிபட்ட ஸ்தலம். அகஸ்தியர் விக்கிரகம் கோயிலி லிருக்கிறது. கோயிலுக்கெதிரில் அக்கினி தீர்த்தமிருக்கிறது.

தெரிந்ததுவுங்கணையொன் றுமுப்புரஞ்சென் றுட
னெரிந்ததுவுமுன்னெழிலார்மலருறைவான் றலை
யரிந்ததுவும்பொழில்சூழகத்தியான்பள்ளியான்
புரிந்ததுவும்முமையாளொர்பாகம்புனைதலே.

## 2. அச்சிறுபாக்கம்:

ரெயில் ஸ்டேஷன் ; சென்னபட்டணத்துக்குத் தெற்கே 59-மைல் தூரம்.

சிவபெருமான் திரிபுரதகனஞ் செய்யும்பொருட்டுத் தேவர்கள் சமைத்த தேரில் எழுந்தருளினபோது அத்தேவர்கள் விநாயக மூர்த்தியை நினையாத காரணத்தால் தேரின் அச்சு இற்றது, (முறிந்தது) அந்தக்காரணத்தால் இந்த ஸ்தலத்துக்கு அச்சிறுபாக்கம் எனப்பெயருண்டாயிற்று.

மைம்மலர்க் கோதை மார்பின ரெனவு
　　மலைமக ளவளொடு மருவின ரெனவுஞ்
செம்மலர்ப் பிறையுஞ் சிறையணி புனலுஞ்
　　சென்னிமே லுடையரெஞ் சென்னிமே லுறைவார்
தம்மல ரடியொன் றடியவர் பரவத்
　　தமிழ்ச்சொலும் வடசொலுந் தாணிழற் சேர
வம்மலர்க் கொன்றை யணிந்தவெம் மடிகள்
　　அச்சிறு பாக்கம தாட்சி கொண் டாரே.

## 3. திரு அஞ்சைக்களம்:

சென்னபட்டணத்துக்குத் தென்மேற்கே 360-மைல் தூரமுள்ள சோரனூர் என்னும் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, தென்மேற்கில் 35-மைல் தூரஞ்சென்று இருஞாலக்குடை என்னும் ரெயில் ஸ்டேஷனை யடைந்து, அங்கிருந்து மேற்கே 4-மைல் தூரஞ்சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்; நல்லபாதை.

சுந்தரமூர்த்திநாயனார் வெள்ளையானையின்மீதும் அவருடைய தோழராகிய சேரமான்பெருமாணாயனார் குதிரையின்மீதும் ஏறிக் கைலாயத்துக்குச்சென்ற ஸ்தலம்*.

பரசுராமர், தாயைக்கொன்ற பாவம் நீங்கும் பொருட்டுப் பூசித்த ஸ்தலம்.

வெறுத்தேன்மனை வாழ்க்கையை விட்டொழிந்தேன்
விளங்குங்குழைக் காதுடை வேதியனே
யிறுத்தாயிலங் கைக்கிறை யாயவனைத்
தலைபத்தொடு தோள்பல விற்றுவிழக்
கறுத்தாய்கட னஞ்சமு துண்டு கண்டங்
கடுகப்பிர மன்றலை யைந்திலுமொன்
றறுத்தாய்கட லங்கரை மேன் மகோதை
யணியார்பொழி லஞ்சைக் களத்தப்பனே.

## 4. திருஅண்ணாமலை:

விழுப்புரத்துக்கு மேற்கே 42-மைல் தூரமுள்ளது; ரெயில் ஸ்டேஷன்.

இது பஞ்சபூத ஸ்தலங்களில் தேயு ஸ்தலம். நினைக்க முத்தி யளிக்கும் நிர்மல க்ஷேத்திரம். சிவபெருமான் வல்லாள மகாராசனுக் குப் புத்திரராய்த் தோன்றி அநுக்கிரகித்த ஸ்தலம். 'யான்பரம்' 'யான்பரம்' என்று தர்க்கித்த பிரம விஷ்ணுக்களுக்குமுன் சிவபெரு மான் அக்கினிமலையாய்த்தோன்றி, அவர்கள் அன்னமாயும் பன்றியா யும் சென்று முடியையும் அடியையும் தேடிக்காணாமல் அகந்தை தீர்ந்து திகைத்துநிற்க, தாமே பரம்பொருள் என்று ஸ்தாபித்தருளிய ஸ்தலம்†. இந்த ஐதிஹ்யத்தைக்கொண்டு இப்போதும் பிரதிவருஷ மும் கார்த்திகைமாத கிர்த்திகையில் உலகப்பிரசித்தமான தீபதரிசன உற்சவம் நடந்துவருகிறது.

பேலைக்கோபுரம் பேய்க்கோபுரம் எனப்படுகிறது. மலைப் பிரதக்ஷிணம் 8-மைல்தூரம். வழியில் அநேக தீர்த்தங்களும் அணி அண்ணாமலை என்னுந் தலமும், குகைநமசிவாயரது கோயிலும் உள்ளன.

பார்வதிதேவியார் தவஞ்செய்து சிவபெருமானுடைய இடப் பாகம் பெற்ற ஸ்தலம்.

திருப்புகழ் பாடிய அருணகிரிநாத சுவாமிகளுடைய ஜனன பூமி. அவர் அடக்கமான இடம் இருக்கிறது. அங்கே அவருடைய உருவம் ஒன்று சிறிதாகச்செய்து வைத்திருக்கிறது. அவருக்கு அநுக்கிரகஞ் செய்த முருகக் கடவுளினுருவம் கோயிலுக்குக் கிழக்கே ஒரு ஸ்தம்பத்திலிருக்கிறது. அவருக்குக் 'கம்பத்திளையனார்' என்று பெயர்.

† விளையார்கனி படநூறிய கடல்வண்ணனும் வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புக ழோனும்
அளவாவணம் அழலாகிய அண்ணாமலை அண்ணல்
தளராமுலை முறுவல்லுமை தலைவன்னடி சரணே.

## 5. திருஅதிகை:

பண்ணுருட்டி என்னும் ரெயில் ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு ஒருநாழிகைவழி தூரத்திற் கெடிலநதியின் வடகரையிலிருக்கிறது. 'வீசுங்கெடில வடகரைத்தே யெந்தை வீரட்டமே' என்பது தேவாரம்.

அஷ்டவீரட்டத்திலொன்று. திரிபுரதகனஞ் செய்த ஸ்தலம் *. திருநாவுக்கரசு நாயனாருடைய தமக்கையாராகிய திலகவதியார் சிவ பெருமானை வழிபட்ட திருப்பதி. அந்நாயனார் சைநமதத்தைவிட்டுச் சைவராய், "கூற்றாயினவாறு விலக்ககிலீர்" என்னும் திருப்பதிகம் பாடி, சூலைநோய்தீர்ந்த நகரம். காடவன் என்னும் சமணராஜன் சைவசமயம் மெய்யெனத் தெளிந்தபின், பாடலிபுத்திரத்திலிருந்த சமணருடைய பள்ளிகளையும் பாழிகளையும் இடித்து அவைகளின் கற்களைக்கொண்டு கட்டிய "குணதரவீச்சுரம்" என்னும் ஆலயமும் இந்தத் தலத்திலிருக்கிறது.

* முற்றா வெண்மதி சூடு முதல்வனார்
செற்றார் வாழுந் திரிபுரந் தீயெழ
விற்றான் கொண்டெயி லெய்தவர் வீரட்டம்
கற்றா லல்லதென் கண்டுயில் கொள்ளுமே.

## 6. அம்பர்:

இஃது அம்பர்மாகாளத்துக்குக் கிழக்கே முக்கால்மைல் தூரம். அம்பர்மாகாளத்துக்குச்(7)சொல்லியிருக்கும் வழியைப்பார்க்க.

சோமாசிமாறநாயனுர் முத்தியடைந்த ஸ்தலம்.

சுவாமி சந்நிதி கட்டுமலைமேல் இருக்கிறது. சுவாமிக்குப் பின்புறத்திற் பார்வதி பரமேசுவரருடைய உருவங்கள் இருக்கின்றன. இங்குள்ள ஆலயத்துக்குப் பெருந்திருக்கோயில் என்று பெயர். 'அம்பர் நகர்ப் பெருங்கோயி லமர்கின்றுன்காண்' என்பது தேவாரம். இத்தலத்திலுள்ள ஆலயம் கோச்செங்கட் சோழராஜாவாற் கட்டப்பட்டது*. இவர் திருவானைக்காமுதல் அம்பர்ப் பெருந்திருக் கோயிலீருகவுள்ள 64-மாடக்கோயில்கள் கட்டுவித்தார்.

'மாடக்கோயில்' என்பது கட்டுமலையையும் யானைகள் செல்லக்கூடாதிருக்குஞ் சந்நிதியையும் உடைய ஸ்தலம்.

*எரிதர அனல்கையி லேந்தி யெல்லியி
னரிதிரி கானிடை நட்டம் ஆடுவார்
அரிசிலம் பொருபுனல் அம்பர் மாநகர்க்
குரிசில்செங் கண்ணவன் கோயில் சேர்வரே.

## 7. அம்பர்மாகாளம்:

இது கோயில் திருமாகாளம் என்று வழங்குகிறது. அம்பர் (6) என்னும் ஸ்தலத்துக்கு மேற்கே $\frac{3}{4}$-மைல் தூரத்திலுள்ளது. திருவாரூரிலிருந்து பேரளம்வரையில் (14-மைல்) ரெயில் மார்க்கமாய்ச் சென்று அங்கிறங்கி, தென்கிழக்காய் $3\frac{3}{4}$-மைல் தூரஞ் சென்ருல் இந்த ஸ்தலத்தை அடையலாம். அம்பரிலிருந்து அம்பர்மாகாளம் வரும் வழியில் சோமாசிமாற நாயனுர் யாகம் செய்த மண்டபம் இருக்கிறது. யாக உற்சவம் வைகாசி மாதத்தில் நடந்து வருகிறது. உற்சவம் வெகு வேடிக்கையாயிருக்குமாம்.

அம்பன், அம்பாசுரன் என்னும் இராக்ஷதர்களைக் கொன்ற பாவந்தீரக் காளி பூஜைசெய்த ஸ்தலம்†. பாணலிங்கம். உருவம் சிறிது. குவளை சாத்தியிருக்கிறது.

காளிகோயில் வெளிப்பிராகாரத்தில் தென்பக்கம் இருக்கிறது. மஹாகாள ருஷியும் பூஜை செய்த ஸ்தலம்.

† பழகமா மலர்பறித் திண்டைகொண் டிறைஞ்சுவார் பாற்செறிந்த
குழகனுர் குணம்புகழ்ந் தேத்துவா ரவர்பலர் கூடநின்ற
கழகனுர் கரியுரித் தாடுகங் காளர்நங் காளியேத்தும்
அழகனுர் அரிவையோ டிருப்பிடம் அம்பர்மாகாளந் தானே.

**8. அரசிலி என்பது ஒழுந்தியாப்பட்டு.**

புதுச்சேரி ரெயில்ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 5—மைல் தூரஞ்சென்று இரும்பை மாகாளம் என்னும் ஸ்தலத்தைச்சேர்ந்து அங்கிருந்து வடமேற்கு 2-மைல் தூரஞ் சென்றால் அரசிலியை அடையலாம்.

வாமதேவமுநிவர் பூசித்த ஸ்தலம்.

மிக்க காலனை வீட்டி மெய்கெடக் காமனை விழித்துப்
புக்க வூரிடு பிச்சை யுண்பது பொன்றிகழ் கொன்றை
தக்க நூறிகழ் மார்பிற் றவளவெண் ணீறணிந் தாமை
யக்கி னாரமும் பூண்ட வடிகளுக் கிடமரா சிலியே.

**9. அரதைப்பெரும்பாழி என்பது அரித்துவாரமங்கலம்.**

தஞ்சாவூருக்குக்கிழக்கே 9-மைல் தூரமுள்ள சாலியமங்கலம் ரெயில்ஸ்டேஷனிலிறங்கி, வடக்கே $2\frac{1}{2}$-மைல் தூரஞ்சென்று, அங்கே கிழக்கே திரும்பி 4-மைல் சென்று அவளிவணல்லூரைச்சேர்ந்து பின்னும் 1-மைல் கிழக்கே சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

சிவபெருமான், வராக அவதாரங்கொண்ட விஷ்ணுவினுடைய கொம்பை முறித்துத் தம்முடைய மார்பிலணிந்தருளிய ஸ்தலம்.

கண்ணார்நீ றார லார்மலி காலினார்
விண்ணார்வே தம்விரித் தோதுவார் மெய்ப்பொருள்
பண்ணார்பா டலுடை யாரொரு பாகமும்
பெண்ணார்கோ யில்லரா தைப்பெரும் பாழியே.

**10. அரிசிற்கரைப்புத்தூர்:**

இஃது அழகார்புத்தூர் என வழங்கிவருகிறது. "அலைக்கும் புனல்சேர் அரிசிற் றென்கரை அழகார் திருப்புத்தூ ரழகனீரே" எனத் தேவாரத்திலேயே கூறப்பட்டிருக்கிறது. கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு $4\frac{1}{2}$-மைல் தூரம்; நல்லபாதை. இதே பாதையில் இன்னும் 1-மைல் தூரஞ்சென்றால் திருநறையூர்ச் சித்தீச்சுரம் (161) என்னும் ஸ்தல மிருக்கிறது.

உபமன்யுமுநிவர் பூசித்த ஸ்தலம். புகழ்த்துணைநாயனார் சிவபெருமானைப் பூசித்து முத்தியடைந்த க்ஷேத்திரம்*.

* "அகத்தடிமை செய்யு மந்தணன்றா னரிசிற் புனல்
 கொண்டு வந்தாட்டு கின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தையு முடிமேல்
 விழுத்திட்டு நடுங்குதலும்
வகுத்தவனுக்கு நித்தற் படியும் வருமென் றொரு
 காசினை நின்ற நன்றிப்
புகழ்த்துணை கைபுகச் செய்துகந்தீர் பொழிலார்
 திருப்புத்தூர்ப் புனித னீரே".

* நிலந்த ணீரோ டனல்கால் விசும்பி னீர்மையான்
சிலந்தி செங்கட் சோழ னாகச் செய்தானூ
ரலந்த வடியா னற்றைக் கன்றோர் காசெய்திப்
புலர்ந்த காலை மாலை போற்றும் புத்தூரே.

## 11. அவளிவணல்லூர்:

சாலியமங்கலம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு $6\frac{1}{2}$-மைல் தூரம். அரித்துவாரமங்கலமாகிய அரதைப்பெரும்பாழிக்குச் (9) சொல்லியிருக்கும் பாதையைப்பார்க்க.

வராக அவதாரத்திற் சிவபெருமானாற் கொம்பு முறியப்பெற்ற விஷ்ணுமூர்த்தி பூசித்தஸ்தலம். காசிபருஷி முதலியோர் பூசித்த திருப்பதி.

பிணியுமிலர் கேடிலர் தோற்றமில ரென்றுலகு பேணிப்
பணியுமடி யார்களன பாவமற வின்னருள் பயந்து
துணியுடைய தோலுமுடை கோவணமு நாகமுட னொருங்க
வணியுமழ காகவுடை யானுறைவ தவளிவணல் லூரே.

## 12. அவிநாசி:

ஈரோட்டிலிருந்து ரெயில் மார்க்கமாய் மேற்கே திருப்பூர்வரையில் (32-மைல்) சென்று, அந்த ஸ்டேஷனிலிறங்கி வடக்கே 8-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். நல்ல பாதை. திருப்பூருக்கு அடுத்த ஸ்டேஷனாகிய மங்கலத்தில் இறங்கினால் அவிநாசி 5—மைல் தூரந்தான், மங்கலத்துக்கு நேர் வடக்கில் அவிநாசி இருக்கிறது.

அவிநாசி என்றால் விநாசமில்லாத ஸ்தலம் என்று பொருள்.

† சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் முதலைவாயினின்றும் பிராமணப் பிள்ளையை மீட்டுக்கொடுத்தருளிய ஏரியும் இருக்கிறது. அதன் தெற்கில்தான் திருப்புக்கொளியூர் இருந்ததாம். அங்கே யிப்போது வீடுகள் ஒன்றுமில்லை, கொல்லைவெளியா யிருக்கிறது. ஏரி

கரையின்கீழ் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் கோயில் இருக்கிறது. அக் கோயிலில் முதலை வாயினின்றும் பிள்ளையை அழைப்பித்த பாவனை காட்டப்பட்டிருக்கிறது.

கோயிலில் ஒரு பழைய பாதிரி விருக்ஷத்தின் கீழ் ஒரு அம்மன் இருக்கிறது. அம்மன் அங்கே தவஞ்செய்ததாகச் சொல்லுகிறார்கள். 63-நாயன்மார்களுடைய விக்கிரகங்கள் செப்பில் செய்யப்பட்டிருக் கின்றன. நந்தி பெரிய உருவம்.

† உரைப்பா ருரையுகந் துள்கவல் லார்தங்க ளுச்சியா
யரைக்கா டரவா வாதியு மந்தமு மாயினுய்
புரைக்காடு சோலைப் புக்கொளி யூராவி நாசியே
கரைக்கான் முதலையைப் பிள்ளை தரச்சொல்லு காலனையே.

## 13. திருவழுந்தூர் என்பது தேரழுந்தூர்.

மாயூரத்துக்குத் தென்மேற்கு $5\frac{1}{2}$-மைல் தூரத்திலுள்ள குற்றாலம் என்னும் ரெயில்ஸ்டேஷனிலிறங்கித் தென்கிழக்கு 3-மைல் தூரஞ்சென்றால் இந்தத்தலத்தை அடையலாம்.

வேதங்களும், விண்ணவர்களும், அஷ்டதிக்குப்பாலகர்களும் பூசித்த ஸ்தலம். அழுந்தை மறையவரின் பெருமையைத் திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகள் "அழுந்தை மறையோர் வழிபாடுசெய் மாமட மன்னினையே" என விசேடித்துப் பதிகச் செய்யுள்தோறும் கூறியிருத்தல் காண்க*.

*தொழுமா றுவல்லார் துயர்தீ ரநினைந்
தெழுமா றுவல்லா ரிசைபா டவிம்மி
யழுமா றுவல்லா ரழுந்தை மறையோர்
வழிபா டுசெய்மா மடமன் னினையே.

## 14. அறையணிநல்லூர் :

விழுப்புரத்திலிருந்து திருவண்ணாமலைக்குச் செல்லும் ரெயில் மார்க்கத்தில் திருக்கோவலூர் என்னும் ஸ்டேஷனி லிறங்கித் தென் கிழக்காக அரைக்கால் மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை யடையலாம். பெண்ணையாற்றின் வடகரையிலிருக்கிறது. கோயில் ஒரு சிறு குன்றின்மேற் கட்டப்பட்டிருக்கிறது, சந்நிதி மேற்குப் பார்த்தது. பெரிய கோபுரம். கோயிலுக்குக் கிழக்கிலுந் தெற்கிலும் பாறையில் ஒரு பெருங்குளம் இருக்கிறது. பிரசண்டருஷி பூசித்த ஸ்தலம். இதற்கெதிரில், பெண்ணையாற்றின் தென்கரையில், திருக் கோவல் வீரட்டம் (124) இருக்கிறது.

தக்க னூர்பெரு வேள்வியைத் தகர்த் துகந்தவன் றாழ்சடை
முக்க ணன்மறை பாடிய முறைமை யான்முனி வர்தொழ
வக்கி னேடெழி லாமைபூ ணண்ண லாரறை யணிநல்லூர்
நக்க னூரவர் சார்வலால் நல்கு சார்விலோ நாங்களே.

## 15. அனேகதங்காபதம்:

இது வடநாட்டு ஸ்தலங்கள் ஐந்தினில்ஒன்று. இஃது அம்பிகை தவஞ்செய்த ஸ்தலமாகிய கௌரிகுண்டம் என்று சொல்லப்படுகிறது. இதற்கு வழி சரியாய்த் தெரியவில்லை.

சூரியனும் சந்திரனும் பூசித்த ஸ்தலம்.

தந்தத் திந்தத் தட மென்றரு வித்திரள் பாய்ந்துபோய்ச்
சிந்த வெந்த கதி ரோனொடு மாசறு திங்களா
ரந்த மில்ல வளவில்ல வனேகதங் காபத
மெந்தை வெந்தபொடி நீறணி வார்க்கிட மாவதே.

## 16. அன்பிலாலந்துறை:

தஞ்சாவூருக்கு மேற்கே 11-மைல் தூரமுள்ள பூதலூர் ரெயில் ஸ்டேஷனி லிறங்கி வடக்கே 5-மைல் தூரஞ்சென்று திருக்காட்டுப் பள்ளியைச்சேர்ந்து, அங்கிருந்துமேற்கே காவிரிக்கு வடகரையே 5-மைல் தூரஞ்சென்று கோவிலடி என்னும் ஊரைச்சேர்ந்து, அப்பால் வடக்கே 2-மைல் தூரஞ்சென்றால் அன்பிலாலந்துறை யிருக்கிறது. இந்த ஸ்தலம் கொள்ளிடத்துக்கு வடகரையில் உள்ளது. ஆற்றைப் பரிசிலாற் கடக்கவேண்டும்.

பிரமன் முதலியோரும் வாகீசமுனிவரும் பூசித்த ஸ்தலம்.

வானஞ் சேர்மதி சூடிய மைந்தனை
நீனெஞ் சேகெடு வாய்நினை கிற்கிலை
ஆனஞ் சாடியை யன்பிலா லந்துறைக்
கோனெஞ் செல்வனைக் கூறிடக் கிற்றியே.

## 17. திருஅன்னியூர் என்பது பொன்னூர்.

மாயூரத்துக்கு வடக்கே 4-மைல்தூரத்திலுள்ள ஆநந்ததாண்டவபுரம் என்னும் ரெயில்ஸ்டேஷனிலிறங்கி, தென்மேற்கே ஒருமைல் தூரஞ்சென்று திருநீடூர் என்னும் ஸ்தலத்தை யடைந்து, அங்கிருந்து மேற்கே 3-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

வருணன் பூசித்த ஸ்தலம்.

இதற்கு மேற்கு 2½-மைல் தூரத்தில் திருவேள்விக்குடி (271) இருக்கிறது.

பாறலைத்த படுவெண் டலையினன்
நீறலைத்தசெம் மேனிய னேரிழை
கூறலைத்தமெய் கோளரா வாட்டிய
ஆறலைத்த சடையன்னி யூரரே.

## 18. ஆக்கூர்:

மாயூரத்திலிருந்து கிழக்கே தரங்கம்பாடிக்குப் போகும் பாதையில் 10-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இந்த ஸ்தலத்திலுள்ள ஆலயத்துக்குத் தான்தோன்றிமாடம், என்று பெயர். அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவராகிய சிறப்புலிநாயனாருடைய ஸ்தலம். இத்தலத்து வேளாளர்களைத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் சிறப்பித்துக்கூறியிருக்கின்றார்*.

ஒரு ராஜா 1000 பிராமணர்களுக்கு, சுவாமியின் கட்டளைப்படி சந்தர்ப்பணை செய்வித்ததாகவும், அவர்களில் சுவாமியும் ஒருவராய் யாருக்குந் தெரியாமல் வந்து புசித்ததாகவும், பின்பு அரசனுக்கு வெளிப்பட்டதாகவுஞ் சொல்லுகிறார்கள். ஒரு தனி சந்நிதியில் "ஆயிரத்தி லொருவ"ருடைய உற்சவ விக்கிரகம் இருக்கிறது.

ஆக்கூரிலிருந்து பின்னும் 3-மைல் தூரங் கிழக்கே சென்றால் திருக்கடவூர் (63) இருக்கிறது.

* வாளார்கண் செந்துவர்வாய் மாமலையான் றன்மடந்தை
தோளாகம் பாகமாப் புல்கினான் றொல்கோயில்
வேளாள ரென்றவர்கள் வள்ளன்மையான் மிக்கிருக்கும்
தாளாள ராக்கூரிற் றான்றோன்றி மாடமே.

## 19. திருஆடானை:

மானாமதுரை ரெயில் ஸ்டேஷனிலிருந்து 44-மைல் தூரம். சிவகங்கை, காளையார்கோயில் என்னும் ஊர்களின் வழியாகப் போக வேண்டும். காளையார்கோயிலுக்குக் கிழக்கு 21-மைல் தூரம்; நல்ல பாதை; திருக்கானப்பேருக்குச் (91) சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

பரமகுடி ரெயில் ஸ்டேஷனிலிருந்து 32-மைல். இராமநாதபுரத்திலிருந்தும் 32-மைல். அறந்தாங்கியிலிருந்து 30-மைல். ஆனால் இம்மூன்றில் ஒன்றாவது சரியான பாதையன்று.

கோயில் பெரிது. நீலரத்தினத்தாற் சிவலிங்கஞ்செய்து சூரியன் பூசித்த ஸ்தலம். அதனால் சுவாமிக்கு ஆதிரத்தினேசுரர் என்று

பெயர். துர்வாசர் வந்தபோது பிருகு முநிவர் அவருக்கு மரியாதை செய்யாமையால் துர்வாசர் அவரை ஆட்டுத்தலையும் ஆனையின் உடலும் உள்ள உருவெய்தும்படி சபித்தார் அந்தச் சாபம் இந்தத்தலத்தில் நிவாரணமாயிற்று. சாபத்தோடு பிருகு முநிவர் வழிபட்டபடியால் இந்தத்தலத்துக்கு ஆடானை என்றும், சுவாமிக்கு ஆடானைநாதர் (அஜகஜேஸ்வரர்) என்றும் பெயருண்டாயிற்று.

மாதோர் கூறுகந் தேற தேறிய, வாதியா னுறையாடானைப்
போதினொற்புனைந் தேத்து வார்தமை, வாதியா வினை மாயுமே.

## 20. திருஆப்பனூர் என்பது திருஆப்புடையார் கோவில்.

மதுரை ஸ்ரீ மீநாக்ஷியம்மைகோயிலுக்கு வடக்கு 1-மைல் தூரத்திலுள்ளது. மதுரைக்கும் இதற்கும் மத்தியில் வையையாறு ஓடுகிறது.

சோழாந்தகன் என்னும் பாண்டியராஜன் நிமித்தம் சிவபெருமான் ஓர் ஆப்பினிடத்தில் தோன்றியருளிய ஸ்தலம். நடேசர் விக்கிரகமும் சிவகாமியம்மை விக்கிரகமும் சிலையிலும் செப்பிலும் நன்றாயமைந்திருக்கின்றன.

அரவங் கமழ் குழலாள் குடிகொண்டு நின்று விண்ணோர்
விரவுந் திரு மேனி விளங்கும் வளை யெயிற்றி
னரவ மணிந்தானை யணி யாப்பனூ ரானைப்
பரவு மன முடையார் வினைபற் றறுப்பாரே.

## 21. திருஆப்பாடி:

கும்பகோணம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி வடகிழக்காக 10-மைல் தூரஞ்சென்று திருப்பனந்தாளை யடைந்து, அங்கிருந்து தென்மேற்கில் 1-மைல் தூரஞ்சென்றால் இந்தஸ்தலத்தை அடையலாம்.

மண்ணி ஆறு கோயிலுக்கு வடக்கே சமீபத்திலிருக்கிறது. க்ஷீரபுஷ்கரணி தீர்த்தம். சண்டேசுர நாயனார் பூஜைசெய்த ஸ்தலம்*

இங்கிருந்த இடையன் ஒருவன் பாலைக்கறந்து வீட்டுக்குக் கொண்டு போம்போது வழியில் தினந்தோறும் கால் தடுக்கிப் பால் கவிழ்ந்துகொண்டு வருதலையுணர்ந்து, கையிலிருந்த கொடுவாளால் அவ்விடத்திலோச்ச, அங்கிருந்து இரத்தம் வெளிப்பட்டதைக்கண்டு, மனமிரங்கிப், "பாலுகந்தநாதரோ" என்றுதொழ, சுவாமி அவனுக்கு அநுக்கிரகஞ் செய்த ஸ்தலம்.

* அண்டமா ரமரர் கோமா னாதியெம் மண்ணல்பாதங்
கொண்டவன் குறிப்பி னாலே கூப்பிடுஞ் சொரூபத்தைக்
கண்டவன் றாதை பாய்வான் காலற வெறியக் கண்டு
தண்டியார்க் கருள்கள் செய்த தலைவராப் பாடி யாரே.

## 22. திருஆமாத்தூர்:

விழுப்புரம் ரெயில்ஸ்டேஷனுக்கு வடமேற்கே 4-மைல்தூரத்தி லுள்ளது. 2-மைல் தூரம் செம்மையான பாதையிருக்கிறது; மற்ற 2-மைல் தூரம் வழி சற்று சங்கடமாக இருக்கிறது. இது பம்பை என்னும் ஒரு சிற்றாற்றின் வடகரையி லுள்ளது.

பசுக்களுக்குத் தாயகமான ஸ்தலம். இராமர் பூசித்த ஸ்தலம்†. இந்த ஸ்தலத்துக்கு இரட்டைப் புலவர்கள் கலம்பகம் ஒன்று பாடி யிருக்கிறார்கள்.

† தூராம னுங்குழ லாளொரு கூறனா
அராம னுஞ்சடை யான்திரு வாமாத்தூர்
இராம னும்வழி பாடுசெ யீசனை
நிராம யன்றனை நாளு நினைமினே.

## 23. திருஆரூர்:

ரெயில்ஸ்டேஷன்; நாகபட்டினத்துக்கு மேற்கு 14-மைல். "நிறை செல்வத் திருவாரூர்" எனப்படும் இவ்வூர் ஆலயத்துக்குத் திருமூலட்டானம் என்று பெயர். "பூங்கோயில்" என்றும் பெயர். "தேங்காவினூ றுந் திருவாரூர்த் தொன்னகரிற், பூங்கோயி லுண்மகிழ்ந்து போகா திருந்தாரே"-தேவாரம்.

இலக்குமி பூசித்த ஸ்தலம். பிறக்க முத்தியளிக்கும் பெரும்பதி. மநுநீதிகண்ட சோழருடைய ராஜதானி. சிதம்பரத்தில் இருந்த தேவாரப் பதிகங்களைக் கண்டெடுத்து அவைகளை ஏழு திருமுறைக ளாக்கி அவற்றையும், எட்டாந் திருமுறையாகிய திருவாசகம் திருக் கோவையாரையும், ஒன்பதாந் திருமுறையாகிய திருவிசைப்பா திருப் பல்லாண்டையும், பத்தாந் திருமுறையாகிய திருமந்திரத்தையும், திரு ஆலவாயுடையார், காரைக்காலம்மையார், சேரமான் பெருமாள்நாயனார், நக்கீரர், பட்டணத்துப் பிள்ளையார், நம்பி யாண்டார் நம்பி முதலிய பன்னிருவர் செய்த பிரபந்தங்களாகிய பதினோராந் திருமுறையையும், செப்பேடுசெய்து தியாகேசர்

சந்நிதியில் ஏற்றுவித்த அபயகுலசேகர சோழ மகாராஜரும், அதற்குப்பின் சேக்கிழார் நாயனார் அருளிச்செய்த பெரிய புராணத்தைப் பன்னிரண்டாந் திருமுறை யென வகுத்து அதனையும் செப்பேடுசெய்து தியாகேசர் சந்நிதியில் ஏற்றுவித்த அநபாய சோழ மகாராஜரும், அரசாட்சி செய்த அரும்பதி. சுந்தரமூர்த்திநாயனார் திருத்தொண்டத் தொகை அருளிச்செய்த 'தேவாசிரியன்' என்னும் ஆயிரக்கால் மண்டபத்தையும், அந்நாயனார் விருத்தாசலத்தில் மணிமுத்தநதியில் இட்டபொன்னைப் பரவையாருக்கு எடுத்துக்கொடுத்த 'கமலாலயம்' என்னுந் திருக்குளத்தையும் உடைய ஸ்தலம். சுந்தரமூர்த்தி நாயனார் பொருட்டுத் தியாகேசர் நள்ளிருளிற் பரவையாரிடம் தூது சென்ற பழம்பதி. "அடியேற் கெளிவந்த தூதனை" [சுந்தரர் தேவாரம்]

காஞ்சிபுரத்தில் ஒருகண் பார்வை பெற்ற சுந்தரமூர்த்தி நாயனார் "மீளா அடிமை" என்னுந் திருப்பதிகம்பாடி மற்றொரு கண்பார்வையும் பெற்ற ஸ்தலம்.

சேரமான் பெருமாள் நாயனார் வந்து சுந்தரமூர்த்தி நாயனாருடன் சிநேகமான திருப்பதி.

விறன்மிண்டநாயனார், நமிநந்தியடிகள் நாயனார், செருத்துணை நாயனார், தண்டியடிகள்நாயனார், கழற்சிங்கநாயனார், முதலிய அடியார்கள் முத்திபெற்ற முதுநகர்.

சப்தவிடங்கத் தலங்களுள் முதன்மையான ஸ்தலம்*.

"திருவாரூர்த் தேரழகு" என ஒருலகவழக்குள்ளது. திருவாரூரில், கோயில், குளம், செங்கழுநீர் ரோடை இவை ஒவ்வொன்றும் ஐயைந்து வேலிகளென்பர்.

'அஞ்சணை வேலியாரூர் ஆதரித் திடங்கொண்டாரே' என்பது தேவாரம்.

ஆடகேச்சுரம் என்னும் ஆலயம் கோயிலுக்குள் இருக்கிறது. அதில் பிலம் ஒன்று கல்லினால் மூடப்பட்டிருக்கிறது. பிலம் புற்றிடங் கொண்டார் கோயிலுக்குத் தென்கீழ்த்திசையிலிருக்கிறது. நாகபிலம் என்று பெயர். அதில் எழுந்தருளியுள்ள ஆடகேசரைத் தரிசித்துப் பூமியிலுள்ளார் எல்லோரும் சுவர்க்கத்தை அடைந்தமையால் அவ்வுலகம் இடமில்லாமற் போனதை யுணர்ந்த இந்திரன்

அரதனசிருங்கம் என்கிற மலையொன்றால் மேற்கூறிய பிலத்தை அடைந்தனன் என்பது வரலாறு. இதனைத் திருவாரூர்ப் புராணத்தாலறியலாகும்.

கமலாம்பாள் சந்நிதி பிரத்தியேகமா யிருக்கிறது. நீலோற்பலாம்பாள் அல்லது அல்லியங்கோதை என்னும் அம்மை சந்நிதி வேறே இருக்கிறது. மேற்குக் கோபுரத்துக்கு எதிரில் மாற்றுரைத்த பிள்ளையார் ஆலயம் இருக்கிறது. தெற்குக் கோபுரத்துக் கருகாமையில் பரவை நாச்சியார் கோயிலிருக்கிறது. மநுச்சோழன் மகன் தேர் ஏறிச் சென்றதும், பசுவின் கன்று இறந்ததும், தன் மகன்மீது சோழன் தேரை ஊர்ந்ததும் ஆன ஐதிஹ்யங்களைக் காட்டக் கல்லினால் தேர் முதலிய செய்யப்பட்டிருக்கின்றன. இவைகளைக் கீழைக் கோபுரத்துக் கருகாமையிற் காணலாகும்.

கமலாலயம் அதிக பெரிய திருக்குளம், அதன் மத்தியில் ஒரு சிறு கோயிலிருக்கிறது.

* உயிரா வணமிருந் துற்றுநோக்கி யுள்ளக் கிழியி னுருவெழுதி
உயிரா வணஞ்செய்திட் டுன்கைத் தந்தா லுணரப் படுவாரோ டொட்டிவாழ்தி
அயிரா வணமேறா தானே றேறி யமரர்நா டாளாதே யாரூராண்ட
அயிரா வணமேயென் னம்மானே நின்னருட்கண்ணா னோக்காதா ரல்லாதாரே.

## 24. திருஆரூர் அரநெறி:

இச்சந்நிதி திருவாரூர் திருமூலட்டானம் (23) என்னும் பெரிய ஆலயத்தின் இரண்டாம் பிராகாரத்தில் மேற்கு முகமாயுள்ளது.

நமிநந்தியடிகளுயனார் தண்ணீரால் திருவிளக்கேற்றி வைத்த ஸ்தலம். இதனைத் திருநாவுக்கரசு சுவாமிகள் தாமருளிச்செய்த திருவாரூ ரரநெறித் திருத்தாண்டகத்தில் "நந்திபணி கொண்டருளு நம்பன்" எனவும், திருவாரூர்த் திருவிருத்தத்தில்,

"ஆராய்ந் தடித்தொண்ட ராணிப்பொ னாரூ ரகத்தடக்கிப்
பாரூர் பரிப்பத்தம் பங்குனி யுத்திரம் பாற்படுத்தான்
நாரூர் நறுமலர் நாத னடித்தொண்ட னம்பிநந்தி
நீரால் திருவிளக் கிட்டமை நீணா டறியுமன்றே."—எனவுஞ்

சிறப்பித்துப் பாராட்டிக் கூறியுள்ளார்.

† பாலை நகுபனி வெண்மதி பைங்கொன்றை
மாலையுங் கண்ணியு மாவன சேவடி
காலையு மாலையுங் கைதொழு வார்மனம்
ஆலைய மாரூ ரரநெறி யார்க்கே.

## 25. திருஆரூர்ப் பரவையுண்மண்டளி:

இவ்வாலயம் திருவாரூர்ப் பெரியகோயிலின் மஹாரத நிலைக்குச் சமீபத்தில் தென்மேற்கில் உள்ளது. இது துலாநாயனார் (தூவாய் நாயனார்) கோயில் என்று சொல்லப்படுகிறது. வருணன் ஒருகாலத்து இந்நகரமீது அனுப்பிய கடலை உண்டமைபற்றி இத்தலத்துக்குப் பரவையுண் மண்டளி என்னும் பெயரெய்தியது.

தூருவாச மாமுனி பூசித்த ஸ்தலம். சுவாமியின் உருவம் மிகவும் பளபளப்பாயிருக்கிறது. தீபாராதனை செய்யும்போது கண்ணாடியில் தெரிவதுபோல் ஒளி தெரிகிறது. தூர்வாசருடைய உருவம் விநாயகர் பக்கத்திலிருக்கிறது.

> தூவாயா தொண்டுசெய் வார்படு துக்கங்கள்
> காவாயே கண்டுகொண் டாரைவர் காக்கிலு
> நாவாயா லுன்னையே நல்லன சொல்லுவேற்
> காவாவென் பரவையுண் மண்டளி யம்மானே.

## 26. திருஆலங்காடு: (பழையனூர்—ஆலங்காடு).

சென்னபட்டணத்துக்கு மேற்கே 37-மைல்தூரமுள்ள திரு ஆலங்காடு என்னும் ரெயில ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 3-மைல் தூரம்.

பஞ்ச சபைகளில் ஒன்றாகிய ரத்நசபையை யுடைய ஸ்தலம். சிவபெருமான் காளியுடன் நிருத்தஞ் செய்தருளியஸ்தலம். 'ஆழ்ஞர் காளிகாண ஆலங்காட் டடிக ளாரே' என்பது தேவாரம்.

காரைக்காலம்மையார் கைலாசகிரியிலிருந்து தலையாலே நடந்து வந்து சுவாமியைத் தரிசித்து அவருடைய குஞ்சிதபாதத்தின் கீழ்ச் சிவாநந்தத்தை யநுபவித்துக்கொண்டிருக்கும் ஸ்தலம்.

ஒரு செட்டிப்பிள்ளைக்குத் தாங்கள் கொடுத்த வாக்கைக் காப்பாற்றும் நிமித்தம் தங்கள் உயிரைக்கொடுத்த மேன்மையாளர்களாகிய வேளாளகுலத்தார் வசிக்கும் பழையனூர் இதற்குக் கிழக்கு 1-மைல் தூரத்திலிருக்கிறது. இங்கும் ஒரு சிவாலயம் உண்டு. இங்ஙனம் 'பழையனூரார் இயம்புமொழிகாத்த கதை' யினைத் திருஞானசம்பந்தர் 'துஞ்சவருவாரும்' என்னும் திருவாலங்காட்டுப் பதிகத்திற் சிறப்பித் தோதியுள்ளார்*.

* துஞ்ச வருவாருந் தொழுவிப் பாரும் வழுவிப்போய்
நெஞ்சம் புகுந்தென்னை நினைவிப் பாரு முனைநட்பாய்
வஞ்சப் படுத்தொருத்தி வாணாள் கொள்ளும் வகைகேட்
டஞ்சும் பழையனூ ராலங் காட்டெம் மடிகளே.

## 27. திரு ஆலம்பொழில்:

தஞ்சாவூரிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் போகும் பாதையில் 6-மைல் தூரஞ்சென்று திருக்கண்டியூரை யடைந்து, அங்கிருந்து மேற்கே 2-மைல் தூரஞ்சென்று, திருப்பூந்துருத்தியை யடைந்து, பின்னும் 1-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

அஷ்டவசுக்கள் பூஜித்த ஸ்தலம். மேற்குப் பார்த்த சந்நிதி. கோயிலுக் கெதிரில் பெரிய தாமரைத் தடாகம் இருக்கிறது.

பாருமுழுதாய் விசும்பாகிப் பாதாளமாம்
பரம்பரனைச் சுரும்பமருங் குழலாள் பாகத்
தாரமுதா மணிதில்லைக் கூத்தன் றன்னை
வாட்போக்கி யம்மானை யெம்மா னென்று
வாரமதா மடியார்க்கு வார மாகி
வஞ்சனைசெய் வார்க்கென்றும் வஞ்ச னாகுஞ்
சீரரசைத் தென்பரம்பைக் குடியின் மேய
திருவாலம் பொழிலானைச் சிந்தி நெஞ்சே.

## 28. திரு ஆலவாய் என்பது மதுரை. ரெயில்ஸ்டேஷன்.

பாண்டிநாட்டின் இராசதானி. சோமசுந்தரக்கடவுள் 64-திருவிளையாடல்களைச் செய்தருளிய ஸ்தலம். கபிலர், பரணர், நக்கீரர் முதலிய பொய்யடிமையில்லாத புலவர்களாகிய சங்கத்தார் இருந்த இடம். விபூதி, ருத்திராக்ஷம், சடைமுடி என்னும் மூன்றையுந் தரித்து மூர்த்திநாயனர் அரசாட்சிசெய்த க்ஷேத்திரம் அரிமர்த்தன பாண்டியராஜன் காலத்தில் ஸ்ரீமன்-மாணிக்கவாசக ஸ்வாமிகள் 'தென்னவன் பிரமராயன்'என்னும் பெயருடன் மந்திரியாயிருந்த பட்டணம். திருஞானசம்பந்த மூர்த்திநாயனர், சமணசமயத்திற் பிரவேசித்திருந்த கூன் பாண்டியருடைய சுரநோயை "மந்திர மாவதுநீறு" என்னுந் திருநீற்றுப்பதிகம் ஓதித் தீர்த்தருளியும், "போகமார்த்த பூண்முலையாள்" என்னுந் திருநள்ளாற்றுப்பதிகம் எழுதியிருந்த ஏட்டைக் கனலிலிட்டு வேகாம லெடுத்தும், "வாழ்க அந்தணர்" என்னும் திருப்பாசுரம் எழுதியஏட்டை வையையாற்றிலே

விட்டு நீரை யெதிர்த்துக்கொண்டு செல்லும்படியாகச் செய்தும், இவ்வாறு சமணர்களைவென்று, பாண்டியருடைய கூனையும் நீக்கி, அவரையும் சைவராக்கிப் பாண்டியநாடு முழுவதும் பரவியிருந்த சமண் இருளைப்போக்கிச் சைவஜோதியைப் பரப்பிய திருப்பதி. மேற்சொன்ன கூன்பாண்டியர் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரால் திருநீறுசாத்தப்பட்டு, கூன்நிமிரப்பெற்று, நெடுமாறநாயனார் என்னும் பெயருடன் அரசாண்ட நகரம். அவருடைய மனைவியாரும் சைவசிரோமணியு மாகிய மங்கையர்க்கரசியாரும், மந்திரியாராகிய குலச்சிறைநாயனாரும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனாராலே "மங்கையர்க்கரசி" என்னும் தேவாரத்திருப்பதிகத்திலே சிறப்பித்துப் பாடப்படும்படியான பெரும்பாக்கியத்தைப்பெற்று வாழ்ந்திருந்த ஊர்*. பஞ்ச சபைகளில் ஒன்றாகிய ரஜதசபையை (வெள்ளியம்பலத்தை) உடைய ஸ்தானம்.

எல்லாம் வல்ல சித்தருடைய திருவுருவம் சுவாமி கோயிலில் இருக்கிறது. மீனாக்ஷியம்மன் சந்நிதிக்கெதிரிலுள்ள கிளிமண்டபத்தில் ஸ்தலவிநாயகராகிய சித்திவிநாயகர், சுப்ரமண்யசுவாமி இவர்கள் சந்நிதானங்கள் இருக்கின்றன. பொற்றாமரை தீர்த்தம் கோயிலுக்குள் இருக்கிறது.

* மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மட மானி
பங்கயச் செல்வி பாண்டிமா தேவி பணிசெய்து நாடொறும் பரவப்
பொங்கழ லுருவன் பூதநா யகனால் வேதமும் பொருள்களு மருளி
யங்கயற் கண்ணி தன்னொடு மமர்ந்த வாலவா யாவது மிதுவே.

## 29. திரு ஆவடுதுறை:

மாயூரத்துக்கு மேற்கு 10–மைல் தூரத்திலுள்ள நரசிங்கன்பேட்டை ரெயில்ஸ்டேஷனிலிறங்கி கிழக்கே $1\frac{1}{2}$–மைல்தூரஞ் சென்றால் இந்தத்தலத்தை அடையலாம்.

திருமூலநாயனார் வருஷத்துக்கு ஒவ்வொருபாடலாக மூவாயிரந் திருப்பாடல்களால் 'திருமந்திரம்' என்னும் அருமையான நூலைச் செய்தருளிய ஸ்தலம். கோயிலில் மேலண்டை பிராகாரத்தில் அவர் சந்நிதி இருக்கிறது.

திருஞான சம்பந்தமூர்த்திநாயனார், தம்முடைய பிதா யாகஞ் செய்யும் பொருட்டு "இதுவோ வெமை யாளுமா றீவதொன்றெமக் கில்லையேல், லதுவோ வுனதின்னரு ளாவடு துறையானே"—எனவரும்

பதிகம்பாடிப் பொற்கிழி பெற்றஸ்தலம். இவ்விஷயத்தை அப்பர் சுவாமிகள் திருவாவடுதுறை-திருநேரிசைப் பதிகத்தில், "காயிரும் பொழில்கள் சூழ்ந்த கழுமல வூரர்க்கம்பொன், ஆயிரம் கொடுப்பர் போலும் ஆவடு துறைய னாரே" என்று பாராட்டியுள்ளார். விநாயகருக்கு அழகிய விநாயகர் என்று பெயர்.

ஒப்பி லாமுலை யாளொரு பாகா வுத்தமா மத்த மார்தரு சடையாய்
மூப்பு ரங்களைத் தீவளைத் தங்கே மூவ ருக்கருள் செய்யவல் லானே
செப்ப வானிழற் கீழிருந் தருளுஞ் செல்வ னேதிரு வாவடு துறையு
ளப்ப னேயெனை யஞ்சலென் றருளா யாரெ னக்குற வமரர்களேறே.

## 30. ஆலூர்:

கும்பகோணத்துக்குத் தென்மேற்கு 4-மைல் தூரஞ்சென்று பட்டீச்சுரத்தை யடைந்து, அங்கிருந்து மறுபடி தென்மேற்கே $4\frac{1}{2}$-மைல் தூரஞ்சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

இந்தத் தலத்திலுள்ள ஆலயத்துக்குப் பசுபதீச்சுரம் என்று பெயர். இது பசுக்கள் பூசித்த ஸ்தலம்.

புண்ணியர் பூதியர் பூத நாதர் புடைபடு வார்தம்ம னத்தார் திங்கட்
கண்ணிய ரென்றென்று காத லாளர் கைதொழு தேத்தவி ருந்தவூராம்
விண்ணுயர் மாளிகை மாட வீதி விரைகமழ் சோலைசு லாவியெங்கும்
பண்ணியல் பாடல றாத வாவூர்ப் பசுப தீச்சுரம் பாடு நாவே.

## 31. திருஆனைக்கா என்பது ஜம்புகேஸ்வரம்.

திரிசிராப்பள்ளிக்கு வடக்கு $2\frac{1}{2}$-மைல் தூரம். இடையிற் காவிரியாற்றைக் கடக்கவேண்டும். ஆற்றுக்குப் பாலங்கட்டி யிருக்கிறது.

வெள்ளையானை வழிபட்ட ஸ்தலமாதலால் இதற்கு "ஆனைக்கா" (=யானைவனம்) என்றும், ஜம்புநாவல் (வெள்ளைநாவல்) மரத்தடியில் சுவாமி எழுந்தருளி யிருப்பதால் "ஜம்புகேஸ்வரம்" என்றும் பெயர் உண்டாயிற்று. "சிறன்மிக்க கரிக்கருள்செய்தவனே," "வெண்ணாவலின் மேவிய எம்மழகா" என்பன தேவாரம். ஜம்பு நாவல்மரம் சுவாமிக்குச் சமீபத்திற் கருப்ப கிரஹத்துக்கு வெளியிலிருக்கிறது.

பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றாகிய அப்புஸ்தலம். கோயிலின் மூலஸ்தானத்தில் எப்போதும் ஜலம் நிரம்பியிருப்பதால் அதை இறைத்துவிட்டுச் சுவாமிக்குப் பூஜை செய்யும் விநோதமான ஸ்தலம். "செழுநீர்த்திரளைச் சென்றாடினேனே" என்னும் தேவாரம் இங்கு உணரற்

பாலது. முன்ஜன்மத்திற் சிலந்தியாயிருந்து சிவபெருமானை வழிபட்டு, அப்பெரும் புண்ணியத்தினால் அரசராய்ப்பிறந்த * கோச்செங்கட் சோழ நாயனாராலே கட்டுவிக்கப்பட்ட ஆலயத்தையும், அவ்வாலயத்திலே சிவபெருமான் சித்தரா யெழுந்தருளிவந்து திருநீற்றையே கூலியாகக் கொடுத்துக்கட்டுவித்தகாரணத்தால் "நீறிட்டான்மதில்" என்று சொல்லப்படும் திருமதிலையும், உடைய விசேஷமான ஸ்தலம்.

*சிலந்தியு மானைக்காவிற் றிருநிழற் பந்தர் செய்து*
*உலந்தவ ணிறந்த போதே கோச்செங்க ணனு மாகக்*
*கலந்தநீர்க் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர்தங்கள்*
*குலந்தனிற் பிறப்பித் திட்டார் குறுக்கைவீ ரட்டனாரே.*

"ஆழித்தேர் மறுகிற்பயில் மெய்த்திரு நீறிட்டான்மதிள் சுற்றிய பொற்றிரு ஆனைக்கா" எனவரும் தேவாரமும் திருப்புகழும் இங்கு உணரலாகும்.

சுவாமியை அம்மன் பூஜித்த ஐதிஹ்யத்தைக்காட்ட, இன்றும் உச்சிக்காலத்தில் அம்மன் கோயில் குருக்கள் அம்மனைப்போல வேஷம்போட்டுக்கொண்டு சுவாமி கோயிலுக்குவந்து அர்ச்சனை செய்துவிட்டுப் போகிறார்.

உறையூர்ச் சோழ மகாராஜா பதக்கந் தரித்துக்கொண்டு காவிரியில் ஸ்நானஞ் செய்தபோது அது நதியில் விழுந்துவிட, ராஜா 'சிவபெருமானே கொண்டருளும்' என்று பிரார்த்திக்க, அந்தப்பதக்கம் திருமஞ்சனக்குடத்திலே அகப்பட்டு அபிஷேகஞ் செய்யப்படும் பொழுது சுவாமி மேல்விழ அதனை சுவாமி அணிந்து அரசருக்குத் திருவருள்புரிந்த ஸ்தலம். இதனைச் சுந்தரமூர்த்திநாயனார் இத்தலத் தேவாரப்பதிகத்தில்,

*"தார மாகிய பொன்னித் தண்டுறை யாடி விழுத்து*
*நீரி னின்றடி போற்றி நின்மல கொள்ளென வாங்கே*
*ஆரங் கொண்டவெம் மானைக் காவுடை யாதியை நாளு*
*மீர முள்ளவர் நாளு மெம்மையு மாளுடை யாரே."*

என்று ஏழாம் பாசுரத்திற் சிறப்பித்துப் பாடியிருக்கிறார். "ஆரநீரோ டேந்தினு ஞானைக் காவு சேர்மினே" என்பது ஸ்ரீ சம்பந்த சுவாமிகள்தேவாரம். கோயில் மிகப் பெரிது. இலிங்கம் பள்ளத்தில் இருக்கிறது.

திருஆனைக்காவுக்கு மேற்கு 1-மைல் தூரத்தில் ஸ்ரீரங்கம் என்னும் விஷ்ணுக்ஷேத்திரம் இருக்கிறது.

* செங்கட்பெயர் கொண்டவன் செம்பியர்கோ
னங்கட்கரு ணைபெரி தாயவனே
வெங்கண்விடை யாமெம்வேண் ணைவனுளா
யங்கத் தயர் வாயின ளாயிழையே.

## 32. இடும்பாவனம்:

திருத்தருப்பூண்டி ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு 10-மைல் தூரம். இதற்குக் கிழக்கு ஒருமைல் தூரத்திற் கடிக்குளமாகிய கற்பகனூர் கோயில் (65) இருக்கிறது.

இடும்பன் பூசித்த ஸ்தலம். விநாயகர் வெண்மைநிறமா யிருக்கிறார். வெள்ளை விநாயகர் என்று பெயர். வேதாரணியத்தி லிருப்பது போல இங்கும் சுவாமிக்குப் பின்புறத்திற் பார்வதி பரமேசுரர்கள் மணவாள கோலமா யிருக்கிறார்கள். கோயிலுக்குக் கிழக்கிற் சீத புஷ்கரணி என்ற திருக்குள மிருக்கிறது.

நீறேறிய திருமேனியர் நிலவும்முல கெல்லாம்
பாறேறிய படுவெண்டலை கையிற்பலி வாங்காக்
கூறேறிய மடவாளொரு பாகம்மகிழ் வெய்தி
யேறேறிய விறைவர்க்கிட மிடும்பாவன மிதுவே.

## 33. திருஇடைச்சுரம்:

செங்கற்பட்டிலிருந்து கிழக்கே திருப்போரூருக்குப் போகும் பாதையில் 5-மைல் தூரஞ்சென்றால், பாதைக்கு வடக்கே $\frac{1}{2}$-மைல் தூரத்தில் இந்த ஸ்தல மிருக்கிறது.

சனற்குமாரமுனிவர் பூசித்த ஸ்தலம்.

வரிவள ரவிரொளி யரவரை தாழ வார்சடை முடிமிசை வளர்மதிசூடிக்
கரிவளர் தருகழல் கால்வல னேந்திக் கனலெரி யாடுவர் காடரங் காக
விரிவளர்தருபொழிலிளமயிலால வெண்ணிறத் தருவிகடிண்ணென வீழு
மெரிவளரினமணிபுனமணிசாரலிடைச்சுரமேவியவிவர்வணமென்னே.

## 34. திருவிடைமருதூர்:

ரெயில்ஸ்டேஷன். கும்பகோணத்துக்கு வடகிழக்கு 5-மைல் தூரம். ஸம்ஸ்கிருதத்தில் இதற்கு மத்தியார்ஜுனம் என்று பெயர்.

காவிரியின் தென்கரையிலுள்ளது. திருவிடைமருதூர்க் காவிரித் துறையில், தைப்பூசத்தில், ஸ்நானஞ் செய்வதுமிகவும் விசேஷம். * இதனைத்திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் "ஓடேகலன்" என்னும்

தேவாரத்தில் "வாசங்கமழ்" என்னும் 5-ஆவது திருப்பாட்டிலும், "பொங்குநூன் மார்பினீர்" என்னும் தேவாரத்தில் "வருந்திய மாதவத்தோர்" என்னும் 5-ஆவது திருப்பாட்டிலும் சிறப்பித்திருக்கின்றார். திருநாவுக்கரசுநாயனாரும் "பாசமொன்றிலராய்" என்னுந் திருக்குறுந்தொகையில் பூசஸ்நானத்தைச் சிறப்பித்துப் பாடியிருக்கிறார். வரகுண பாண்டியருடைய பிரமஹத்தியைப் போக்கியருளிய ஸ்தலம். அவர் அநேகம் தொண்டுசெய்து முத்திபெற்ற அரும்பதி. உருத்திரர், உமையம்மை, விநாயகர், முருகர், பிரமா, விஷ்ணு முதலியோர் பூசித்த ஸ்தலம். மூகாம்பிகையம்மன் சந்நிதி பிரத்தியேகமாயிருக்கிறது. மவுனமாயிருந்து தபசுசெய்தபடியால் இப்பெயருண்டாயிற்று. 'திருவிடைமருதூர்த் தெரு வழகு' என உலகவழக்கு ஒன்றுளது.

* வருந்திய மாதவத்தோர் வானோ ரேனோர் வந்தீண்டிப்
பொருந்திய தைப்பூச மாடி யுலகம் பொலிவெய்தத்
திருந்திய நான்மறையோர் சீரா லேத்த விடைமருதிற்
பொருந்திய கோயிலே கோயி லாகப் புக்கீரே.

## 35. இடையாறு:

திருவெண்ணெய்நல்லூருக்கு மேற்கு 3-மைல் தூரம். அத்தலத்துக்குச் (266) சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

சுகர் பூசித்த ஸ்தலம்.

கருக்க நஞ்சமு துண்டகல் லாலன்கொல் லேற்றன்
தருக்க ருக்கனைச் செற்றுகந் தான்றன் முடிமேல்
எருக்க நாண்மல ரிண்டையு மத்தமுஞ் சூடி
யிருக்கு மூரெய்த மாரிடை யாறிடை மருதே.

## 36. இந்திரநீலபருப்பதம்:

இது வடநாட்டுத்தலங்கள் ஐந்தனுள் ஒன்று. தேவேந்திரனாற் பூசிக்கப்பட்ட ஸ்தலம். இதனைத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் இத்தலத் தேவாரத்தின் திருக்கடைக்காப்பிலே "இந்திரன் தொழு நீல பர்ப்பதம்" என்று கூறியிருத்தலாலறிக. இதற்குச் சரியான மார்க்கந் தெரியவில்லை.

பூவி னானொடு மாலும் போற்றுறுந், தேவ னிந்திர நீல பர்ப்பதம்
பாவியாவெழுவாரைத்தம்வினை, கோவியாவருங்கொல்லுங்கூற்றமே.

## 37. இராமனதீச்சுரம்:

நன்னிலம் ரெயில் ஸ்டேஷனில் இறங்கி, கிழக்கே $\frac{3}{4}$-மைல் தூரஞ்சென்று திருப்புகலூர் என்னும் க்ஷேத்திரத்தை அடைந்து, அங்கிருந்து தெற்கே திரும்பி முடிகொண்டான் என்னும் ஆற்றைக் கடந்து, 1-மைல் தூரஞ் சென்றால், இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இராமனதீச்சுரத்துக்கு மேற்கே திருக்கண்ணபுரம் என்னும் விஷ்ணுஸ்தலம் இருக்கிறது. இராமனதீச்சுரமும் கண்ணபுரமும் சேர்ந்திருக்கின்றன.

இராமர் பூசித்த ஸ்தலம்.

இதற்குக் கிழக்கு 1-மைல் தூரத்தில் திருச்செங்காட்டங்குடி (137) இருக்கிறது.

தாழ்ந்த குழற்சடை முடியதன்மேற்
றோய்ந்த இளம்பிறை துளங்குசென்னிப்
பாய்ந்தகங் கையொடு படவரவம்
எய்ந்தவ னிராமன தீச்சுரமே

## 38. இராமேசுரம்:

ரெயில் ஸ்டேஷன். மதுரைக்குத் தென்கிழக்கு 90-மைல் தூரமுள்ள மண்டபம் என்னும் ரெயில் ஸ்டேஷனில் இறங்கி, 3-மைல் விஸ்தீரணமுள்ள பாம்பனாற்றைத் தோணியிற் கடந்து, அக்கரையிலிருக்கும் பாம்பன் என்னும் கடற்றுறைப் பட்டணத்தைச் சேர்ந்து அங்கு ரெயில் ஏறி 8-மைல் தூரஞ்சென்றால் இராமேசுரத்தை அடையலாம்.

வேறுவழி: மதுரைக்குத் தென்கிழக்கு 68-மைல் தூரத்திலுள்ள இராமநாதபுரம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, அங்கிருந்து தென்கிழக்காய் 9-மைல் தூரஞ்சென்று தேவிபட்டணத்தைச் சேர்ந்து, அங்கே தோணியேறிக் கடல்வழியாய்த் தெற்கே 30-மைல் தூரஞ்சென்று பாம்பனைச் சேர்ந்து, மேலே சொல்லியிருக்கிறபடி கிழக்கே 8-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இராமேசுரத்திலிருந்து தெற்கே 18-மைல் தூரஞ்சென்றால் தநுகோடி என்று சொல்லப்படும் ஸ்நானகட்டம் இருக்கிறது. அங்கேதான் ஸ்நானஞ் செய்யவேண்டும். 18-மைல் தூரமுங் கடற்கரை

யோரமாய்ப் போகவேண்டும். 15-வது மைலண்டை நாட்டுக் கோட்டையாருடைய சத்திரமிருக்கிறது. அவ்விடத்திற் சமையலுக்கு வேண்டிய சாமான்கள் விலையின்றிக் கொடுக்கப்படுகின்றன. இராமேசுரத்திலிருந்து தோணியேறிச் சென்றால் 2-மணி நேரத்தில் தநுகோடியைச் சேரலாம். இராமேசுரத்திலிருந்து தநுகோடி வரையும் ரெயிலும் போகிறது.

இராவணன் முதலியோரைக் கொன்றதால் உண்டான பிரமஹத்திதோஷம் நீங்கும்பொருட்டு ஸ்ரீராமர் சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து பூசித்த ஸ்தலம்*. சகலபாவமும் தீரும்படியான க்ஷேத்திரம்.

கோயில் மிகவும் பெரிது. பிராகாரங்கள் சொக்கட்டான் சாரியாய் வெகு அழகாயும் ஒழுங்காயும் இருக்கின்றன. சேதுமாதவர் சந்நிதி பிரத்தியேகமாய் இருக்கிறது. அநுமார் கொண்டுவந்த லிங்கத்துக்குக் 'காசி விசுவநாதர்' என்றுபெயர். இதற்குத்தான் முதலில் பூஜை ஆகிறது. சீதை தாபித்து இராமர் பூசித்த லிங்கம் 'இராமலிங்கம்'.

* தேவியை வெளவிய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்றுவித் தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல் செய்தவிரா மேச்சுர
மேவிய சிந்தையி னார்கடம் மேல்வினை வீடுமே.

## 39. திரு இரும்பூளை என்பது ஆலங்குடி.

தஞ்சாவூருக்குக் கிழக்கே $18\frac{1}{2}$-மைல் தூரத்திலுள்ள நீடாமங்கலம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து வடமேற்கே கும்பகோணம் போகும் பாதையில் 4-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

விசுவாமித்திரர் முதலியோர் பூசித்த ஸ்தலம்.

நச்சித்தொழு வீர்கண மக்கிது சொல்லீர்
கச்சிப்பொலி காமக் கொடியுடன் கூடி
யிச்சித்திரும் பூளை யிடங்கொண்ட ஈசன்
உச்சித்தலை யிற்பலி கொண்டுழ லூணே.

## 40. இரும்பைமாகாளம்:

புதுச்சேரி ரெயில் ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 5-மைல் தூரம். இதற்கு வடமேற்கு 2-மைல் தூரத்தில் அரசிலி (8) என்னும் ஸ்தலமிருக்கிறது.

மாகாளர் பூசித்த ஸ்தலம்.

நட்டத்தோடு நரியாடுகா னத்தெரி யாடுவான்
அட்டமூர்த்தி யழல்போ லுருவன்னழ காகவே
யிட்டமாக விருக்குமிடம் போலிநும் மைசனுள்
வட்டஞ்சூழ்ந்து பணிவார் பிணிதீர்க்குமா யாரமே

## 41. இலம்பையங்கோட்டூர்:

கூவத்துக்குத் தென்மேற்கு $1\frac{1}{4}$-மைல் தூரம். கூவத்து ஏரியில் ஜலமில்லாதிருக்கும்பொழுது அதிலிறங்கிப்போனால் இவ்வளவு சமீபத்திலிருக்கிறது. ஏரியில் ஜலமிருந்தால் ஏரிக்கரையின் மேலே 1-மைல் தூரம் மேற்கே சென்று, பின்பு தெற்கே திரும்பி, ஏரியின் மேற்புறமாகவே $1\frac{1}{2}$-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். செம்மையான பாதையில்லை. திருவிற்கோலமாகிய (260) கூவத்துக்குச் சொல்லியிருக்கும் வழியைப்பார்க்க.

அரம்பையர் பூசித்த ஸ்தலம்.

இலம்பையங்கோட்டூர் முழுமையும் இப்போது கிறித்தவக் கிராமமாயிருக்கிறது. பிரதிதினமும் கூவத்திலிருந்து குருக்கள் வந்து ஒருவேளை பூசை செய்துவிட்டுப் போகிறார்.

நீருளான் றீயுளா னந்தரத் துள்ளான்
நினைப்பவர் மனத்துளா னித்தமா வேத்தும்
ஊருளா னெனதுரை தனதுரை யாக
ஒற்றைவெள் ளேறுகந் தேறிய வொருவன்
பாருளார் பாடலோ டாடல றாத
பண்முரான் றஞ்சிறை வண்டினம் பாடும்
ஏருளார் பைம்பொழி லிலம்பையங் கோட்டூர்
இருக்கையாப் பேணியென் னெழில்கொள்வ தியல்பே

## 42. இன்னம்பர்:

கும்பகோணத்திலிருந்து மேற்கே 3-மைல் சென்று புளியங்குடியென்னும் ஊரைச்சேர்ந்து, அங்கிருந்து வடக்கே 1-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். சாதாரணமான பாதை.

அகஸ்தியர் பூசித்து இலக்கணம் உபதேசிக்கப்பெற்ற ஸ்தலம். ஐராவதம் பூஜை செய்த தலம். கருப்பகிருஹத்தின்மேல் யானை போலச் செய்திருக்கிறது. கோயிலுக்கெதிரில் ஐராவததீர்த்தம் இருக்கிறது. பலாமரமும் சண்பகமரமும் கோயிலுக்குள் இருக்கின்றன.

தொழுது தாமலர் தூவித் துதித்துநின்
றழுது காமுற் றரற்றுகின் றாரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப் பாரையும்
எழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப ரீசனே.

## 43. திரு ஈங்கோய்மலை:

இது இப்போது திருவிங்கநாதமலையென வழங்கிவருகிறது. திரிசிராப்பள்ளிக்கு மேற்கே 20-மைல் தூரத்திலுள்ள குழித்தலை யென்னும் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, வடமேற்கில் 1-மைல் தூரஞ் சென்று திருக்கடம்பந்துறையைச் சேர்ந்து, அங்கே 1-மைல் விஸ்தீரணமுள்ள அகன்ற காவிரியைக் கடந்துசென்றால் அக்கரையில் திருஈங்கோய்மலை யிருக்கிறது. மழைநாளில் ஆற்றில் அதிக ஜல மிருக்குமாதலால் அதைத் தோணியாற் கடக்கவேண்டும். மற்ற நாளிற் சாதாரணமாய் இறங்கிப் போகலாம்.

அகஸ்தியமுனிவர் ஈ ரூபமாய்ச் சென்று சுவாமியைத் தரிசித்த ஸ்தலம். கோயில் சிறிய குன்றின்மேல் இருக்கிறது. 500-படி கட்டுகள் இருக்கும்.

ஒரே தினத்திற் காலையிற் கடம்பர்கோயிலையும் (61), மத்தியானத்தில் இரத்தினகிரியையும் (251), மாலையில் திருஈங்கோய்மலையையும் தரிசித்தால் விசேஷ பலன் உண்டென்றும், கார்த்திகை சோம வாரத்தில் இந்தப்படி தரிசிப்பது அதிக விசேஷமென்றுங் கொள்ளப்படுகிறது.

வானத் துயர்தண் மதிதோய் சடைமேல் மத்த மலர்சூடித்
தேனொத் தனமென் மொழிமான் விழியாள் தேவி பாகமாக்
கானத் திரவி லெரிகொண் டாடுங் கடவு ளுலகேத்த
வேனத் திரள்வந் திழியுஞ் சார லீங்கோய் மலையாரே.

## 44. திரு உசாத்தானம் என்பது கோயிலூர்.

திருத்தருப்பூண்டியிலிருந்து தெற்கே முத்துப்பேட்டை வரையில் (15-மைல்) ரெயில் மார்க்கமாய்ச் சென்று, அங்கிருந்து வடக்கு 2-மைல் தூரஞ்சென்றால் இந்தத்தலத்தை யடையலாம்.

கோயில்பெரிது. கோபுரம் உயரம். மதில்கள் கருங்கல் கட்டடம். ஸ்ரீராமர், லக்ஷ்மணர், ஜாம்புவான், சுக்கிரீவன், அநுமார் முதலியோர் பூசித்த ஸ்தலம்*.

இராமர் இலங்கைக்குப் போவதன் முன் இங்கு உபதேசம்பெற்றனர். அதனால்தான் சுவாமிக்கு 'மந்த்ரபுரீசுரர்' என்று பெயர். சுவாமி வெண்மைநிறம். சுயம்பு மூர்த்தி. காக்ஷி கொடுத்த நாதரும் இருக்கிறார். கோபுரவாசலில் அதிகாரநந்தி இருக்கிறார். இந்த இடம் முன் மாமரக் காடாக இருந்ததாம். தலத்துக்குச் சூதவநம் என்றும் பெயர். விநாயகருக்குச் சூதவநப்பிள்ளையார் என்று பெயர்.

*"நீரிடைத் துயின்றவன் றம்பிநீள் சாம்புவான்
பேருடைச் சுக்கிரீ வன்னநு மன்றொழுக்
காருடை நஞ்சுண்டு காத்தருள் செய்தவெஞ்
சீருடைச் சேடர்வாழ் திருவுசாத் தானமே."

## 45. திரு ஊறல் என்பது தக்கோலம்.

அரக்கோணம் ரெயில்ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே 7-மைல் தூரம். நந்திதேவரது வாயிலிருந்து ஜலம் எப்போதும் விழுந்துகொண்டிருக்கும்படியான மகிமை உள்ள ஸ்தலம். இக்காரணத்தால் இவ்வூருக்குத் திருவூறல் என்னும் பெயர் எய்தியது.

நீரின் மிசைத்துயின்றோ னிறை நான் முகனு மறியா தன்று
தேரும் வகைநிமிர்ந்தா னவன் சேரு மிடம் வினவிற்
பாரின் மிசையடியார் பலர் வந்திறைஞ்ச மகிழ்ந் தாக
ஊரு மரவசைத்தான் றிரு வூறலை யுள்குதுமே.

## 46. எதிர்கொள்பாடி யென்பது மேலைத்திருமணஞ்சேரி.

குற்றாலம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி வடகிழக்கு 3-மைல் தூரஞ்சென்று திருவேள்விக்குடி என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து வடக்கு $1\frac{1}{2}$-மைல் தூரஞ்சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். எதிர்கொள்பாடிக்குக் கிழக்கு $\frac{1}{4}$-மைல் தூரத்திற் கீழைத் திருமணஞ்சேரி என வழங்குந் திருமணஞ்சேரி (222) யிருக்கிறது.

ஐராவதம் பூசித்த ஸ்தலம். வேள்விக்குடியில் திருமணஞ்செய்துகொண்ட இராசகுமாரன் மனைவியுடன், தன் நகர்செல்லும் போது, சிவபெருமான் அவனுடைய அம்மானைப்போல் இந்தத் தலத்திலிருந்து எதிர்கொண்டு அவனை அழைத்துக்கொண்டு போனதினாலே இதற்கு எதிர்கொள்பாடி என்னும் பெயர் உண்டாயிற்று.

கூச நீக்கிக் குற்ற நீக்கிச் செற்ற மனநீக்கி
வாச மல்கு குழலி னார்கள் வஞ்ச மனைவாழ்க்கை
யாசை நீக்கி யன்பு சேர்த்தி யென்பணிந் தேறேறு
மீசர் கோயி லெதிர்கொள் பாடி யென்ப தடைவோமே.

**47.** திருஎருக்கத்தம்புலியூர் என்பது ராஜேந்திரபட்டணம்.

விருத்தாசலத்துக்குத் தெற்கு 7-மைல் தூரம்; நல்லபாதை. திருமுதுகுன்றத்துக்குச் [237] சொல்லியிருக்கும் வழியைப்பார்க்க.

கோயிலுக்குள் வெள்ளெருக்கஞ்செடி யொன்றிருக்கிறது. திருஞான சம்பந்த சுவாமிகள் அருளிச்செய்த தேவாரத்திருப்பதிகங்களை யாழிலிட்டு வாசித்த திருநீலகண்டப்பெரும்பாணநாயனார் திருவவதாரஞ்செய்த ஸ்தலம். இதற்குக் கிழக்கு 4-மைல் தூரத்தில் ஸ்ரீமுஷ்ணம் என்னும் பிரபலமான விஷ்ணுக்ஷேத்திர மிருக்கிறது. ஸ்ரீமுஷ்ணம் சிதம்பரத்திலிருந்து 24-மைல் தூரம்.

விண்ணோர் பெருமானே விகிர்தா விடையூர்தி
பெண்ணா ணலியாகும் பித்தா பிறைசூடி
பெண்ணா ரெருக்கத்தம் புலியூ ருறைகின்ற
அண்ணா வெனவல்லார்க் கடையா வினைதானே.

**48.** திருஎறும்பியூர் என்பது திருவெறும்பூர்.

ரெயில்ஸ்டேஷன். திரிசிரபுரத்துக்கு (132) கிழக்கு $6\frac{1}{4}$-மைல்.

தேவர்கள் எறும்பு ரூபம் எடுத்துவந்து பூசித்த ஸ்தலம். கோயில் மலைமேலிருக்கிறது. மலை உயரமில்லை. லிங்கம் வடபுறமாய்ச் சாய்ந்திருக்கிறது. பழைய அம்மன் சிறிது பின்ன முற்றிருந்தலால் வெளியில் ஒரு புறத்திருக்கிறது. பிரமனும் நைமிச முனிவர்களும் பூசித்த தலம். 'நான்முகனை அல்லல் தீர்க்கும் அருமருந்தை'-; நிமிர்ந்து முனிக் கணங்களேத்துஞ் சீரெறும்பியூர்'-, என்பன தேவாரம்.

கார்முகிலாய்ப் பொழிவானைப் பொழிந்த முந்நீர்
  கரப்பானைக் கடியதொரு விடையொன் றேறி
யூர்பலவுந் திரிவானை யூர தாக
  வொற்றியூ ருடையனாய் முற்று மாண்டு
பேரெழுத்தொன் றுடையானைப் பிரம னோடு
  மாலவனு மிந்திரனு மந்திரத்தா லேத்துஞ்
சீரெறும்பி யூர்மலைமேல் மாணிக்கத்தைச்
  செழுஞ்சுடரைச் சென்றடையப் பெற்றேனே.

## 49. திருஏடகம்:

மதுரைக்கு வடமேற்கு 8-மைல்தூரம்; செம்மையானபாதை. மதுரைக்கு வடக்கு 13-மைல் தூரத்திலுள்ள சோழவந்தான் என்னும் ரெயில் ஸ்டேஷனி லிறங்கி அங்கிருந்து தெற்கே மதுரைக்குப் போகும் பாதையில் 3-மைல் சென்றாலும் இந்தத் தலத்தை அடையலாம்.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் சமணர்களுடன் வாது செய்தபோது "வாழ்க அந்தணர்" என்னும் திருப்பாசுரம் எழுதி விட்ட ஏடு வைகையாற்றின் நீரை யெதிர்த்துச்செல்ல, நாயனார் "வன்னியுமத்தமும்" என்னுந் திருப்பதிகம் பாடினவுடன் அவ்வேடு தனக்கருகாமையில் ஒதுங்கிநிற்கப் பெற்ற ஸ்தலம்.

கோடுசேர் தனமகில் கொண்டிழி வைகைநீ
ரேடுசென் றணைதரும் மேடகத் தொருவனே—,

என்பது தேவாரம்.

கோயில் பெரிது. கோயிலுக்குப் பின் பக்கம் வைகையாறு ஓடுகிறது. கோயிலுக் குள் வில்வமரங்கள் அதிகம்.

ஏலமார் தருகுழ லேழையோ டெழில்பெறுங்
கோலமார் தருவிடைக் கூர்கனூ ருறைவிடஞ்
சாலமா தவிகளுஞ் சந்தனஞ் சண்பகஞ்
சீலமா ரேடகஞ் சேர்தலாஞ் செல்வமே.

## 50. திருவையாறு:

தஞ்சாவூருக்கு வடக்கு 7-மைல் தூரம்; நல்ல பாதை. சுவாமி திருநாவுக்கரசு நாயனாருக்குக் கைலாசதரிசனம் கொடுத்தருளிய ஸ்தலம். இந்த ஐதிஹ்யத்தைக்காட்டும் உற்சவம் ஆடி அமாவாசை யில் நடக்கிறது. அங்ஙனம் தரிசனம் கொடுத்த மூர்த்தி தெற்கு பிராகாரத்தி லிருக்கிறார். அவருக்குத் தனி சந்நிதி. அப்பர் சுவாமிகளும் அங்கிருக்கிறார். அப்பர் சுவாமிகள் எழுந்துவந்ததாகச் சொல்லுங் குளம் கோயிலுக்கு வடமேற்கில் இருக்கிறது.

சப்தஸ்தானம் என்று வழங்கும் 7-தலங்களில் முதன்மை யானது. சுந்தரமூர்த்தி நாயனாருக்காகவும் சேரமான்பெருமா ணாயனாருக்காகவும் சுவாமி காவிரியின் பெருக்கைத் தவிர்க்க, நாயன்மா ரிருவரும் அடியார் கூட்டத்துடன் ஆற்றைக்கடந்து சென்று தரிசனஞ் செய்த ஸ்தலம். தலவிநாயகருக்கு ஆதிவிநாயகர் என்று பெயர். சுந்தரமூர்த்திசுவாமிகள் காவேரிக்குத் தென்கரையிலிருந்து ஆற்றில் மிகுந்த வெள்ளமாயிருந்ததால் "ஐயாறுடைய அடிகளோ"

என்றழைத்தபொழுது, இவ்விநாயகர் 'ஓலம் ஓலம்' என்று சொன்ன தாகச் சொல்லுகிறார்கள். இவ்விநாயகருக்குப் பக்கத்தில் ஆட் கொண்டார் சந்நிதி என்றொரு சந்நிதி இருக்கிறது. ஒரு பிராமணப் பிள்ளையை இயமன் தொடர்ந்து வந்ததாயும் அப்போது சுவாமி வெளிப்பட்டு இயமனை விலக்கி அப்பிள்ளையை ஆட்கொண்டதாயும், சோதி சொரூபமாய்த் தோன்றி சுவாமி ஆட்கொண்டபடியால் அவர் சந்நிதிக்கெதிரில் ஒரு சிறுகுழி ஒன்று உண்டாக்கி அதிற் குங்கிலியம் போட்டுக்கொண்டு வருவதாயும் சொல்லுகிறார்கள். அநேகர் பிரார்த்தனை செய்துகொண்டு அதிற் குங்கிலியம் போடுகிறார்கள்.

அம்மையார் அறம்வளர்த்த நாயகியின் திருவுருவம் அதிக கெம்பீரமா யிருக்கிறது. இந்திரன், வாலி முதலியோர் பூசித்ததலம். 'எண்ணிலி தேவர்கள் இந்திரன் வழிபட'—,'இந்திர னுணர்ந்துபணி எந்தையிடம்'—,'வாலியார் வணங்கியேத்தும் திருவையாறமர்ந்ததேன்' —,என்பன தேவாரம்.

எழுவா யிறுவா யிலாதன வெங்கள் பிணிதவிர்த்து
வழுவா மருத்துவ மாவன மாநர கக்குழிவாய்
விழுவா ரவர்தம்மை வீழ்ப்பன மீட்பன மிக்கவன்போ
டழுவார்க் கமுதங்கள் காண்க ஐயாற னடித்தலமே.

## 51. திருஒற்றியூர்:

ரெயில் ஸ்டேஷன். சென்னைக்கு வடக்கு 5-மைல். திருவிளக்குத் தொண்டு செய்துவந்த கலியநாயனாருடைய ஸ்தலம் சுந்தரமூர்த்தி நாயனார் சங்கிலிநாச்சியாரை மணம்புரிந்த ஸ்தலம். அவர் சங்கிலி யாருக்கு மகிழமரத்தின்கீழ்ப் பிரமாணஞ்செய்துகொடுத்த ஐதிஹ யத்தை முன்னிட்டு 'மகிழடி உற்சவம்' பிரபலமாக நடக்கும் ஸ்தலம். தியாகேசரது விசேஷ சந்நிதியையுடைய தலம். கோயில் பெரிது. கோயிலுக்குள் அநேக இலிங்கங்கள் இருக்கின்றன. புற்றிடங் கொண்டார் சந்நிதிக்கு வடக்கே ஆதி லிங்கம் இருக்கிறது. இவ் விலிங்கம் வெகு பளபளப்பாயிருக்கிறது. சுந்தரர், சங்கிலியார் இவர்க ளுடைய உற்சவ விக்கிரகங்கள் மணவாளகோலமாய் இருக்கின்றன. முற்றுந் துறந்தவராகிய பட்டினத்துப் பிள்ளையார் முத்தியடைந்த முதுநகர். பட்டினத்தாருக்கும் அப்பர் சுவாமிகளுக்கும் தனி ஆலயங்கள் இருக்கின்றன.

மண்ணல்லை விண்ணல்லை வலைய மல்லை மலையல்லை கடலல்லை வாயு வல்லை
எண்ணல்லை யெழுத்தல்லை யெரியு மல்லை யிரவல்லை பகலல்லை யாவு மல்லை
பெண்ணல்லை யாணல்லை பேடு மல்லை பிறிதல்லை யானாயும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயை யல்லை யுணர்வரிய வொற்றியூ ருடைய கோவே.

## 52. திருஓணகாந்தன்தளி:

இவ்வாலயம் காஞ்சீபுரத்துக்கு மேற்கிலுள்ள சர்வதீர்த்தத்துக்கு வடக்கே $\frac{3}{8}$-மைல் தூரத்தி லிருக்கிறது.

ஓணன், காந்தன் என்னும் இரண்டு அசுரர்கள் பூசித்த ஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனார் "நெய்யும் பாலும்" என்னுந் திருப்பதிகம் பாடித்துதித்துப் பொன் பெற்ற ஸ்தலம்.

கூடிக் கூடித் தொண்டர் தங்கள் கொண்ட பாணி குறைபடாமே
யாடிப் பாடி யழுது நெக்கங் கன்பு டையவர்க் கின்ப மோரீர்
தேடித் தேடித் திரிந்தெய்த் தாலுஞ் சித்த மென்பால் வைக்க மாட்டீர்
ஓடிப் போகீர் பற்றுந் தாரீ ரோண காந்தன் றளியு ளீரே.

## 53. திருவோத்தூர்:

காஞ்சீபுரத்துக்குத் தென்மேற்கு 19-மைல். மூன்றுவது மைலிற் பாலாற்றைக் கடக்கவேண்டும். நல்ல பாதை.

கோயிலுக்கு மேற்புறத்திற் சேயாறு ஓடுகிறது. கோயில் பெரிது. கோபுரம் பெரிது.

இந்த ஆண்பனை பெண்பனையான ஸ்தலம். இதனைக் "குரும்பை யாண்பனை யீன்குலை யோத்தூர்" என்னும் திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரத்தின் திருக்கடைக்காப்பால் அறிக. கல்லினால் ஒரு பனைமரம் செய்திருக்கிறது. அது பாதி ஆணும் பாதி பெண்ணுமாயிருக்கிறது.

சிவபெருமான் வேதத்தின் பொருளை முனிவர்களுக்குந் தேவர்களுக்கும் அருளிச்செய்த ஸ்தலம். இதனைப்பின்வருஞ்செய்யுளாலறிக.

இத்தகைய மாமறைநூன்முன்னளித் திருக்காஞ்சிவரைப்பிற்றென்சார்
தத்துநீ ரலைபுரட்டுஞ் சேயாற்றின் றடங்கரைக்க ணிமையோர்கட்கு
மெய்த்தவர்க்குமோதுவித்தோமாதலினான்மேவு திருவோத்தூரென்னும்
அத்தலத்தினைமைத்தொழுவோ ரருமறைநூன்முழுதுணர்ந்து வீடுசேர்வர்.
[காஞ்சிப்புராணம்–திருவேகம்பப்படலம்-௪௦.]

ஆதிகேசவப் பெருமாள் சந்நிதியும் உள்ளே இருக்கிறது.

பூத்தேர்ந் தாயன கொண்டுநின் பொன்னடி, யேத்தா தாரில்லை யெண்ணுங்கா
லோத்தூர் மேய வொளிமழு வாளங்கை, கூத்தீ ரும்ம குணங்களே.

## 54. ஓமாம்புலியூர்:

சிதம்பரத்திலிருந்து தென்மேற்கு 15-மைல் தூரஞ்சென்று மன்னார்குடிஎன்னும் ஊரை அடைந்து, அங்கிருந்து தெற்கு 4-மைல் தூரஞ்சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

புலிக்குப் பயந்து வில்வமரத்தி லேறிக்கொண்ட ஒரு வேடன் இரவு முழுதும் அவ்வில்வ இலைகளைப் பறித்துப் போட்டுக்கொண்டிருக்க, அவை மரத்தடியி லிருந்த சிவலிங்கத்தின் மேல்விழ, சிவபெருமான் மனமிரங்கி, காலையில் அவ்வேடனுக்குப் பிரத்தியக்ஷமாகி அவனுக்கு முத்தியளித்த தலம். இத்தலத்து அந்தணர்களின் பெருமையை அப்பர்சுவாமிகளும் சம்பந்தஸ்வாமிகளும் தேவாரத்திற் சிறப்பித்துள்ளார்கள். "நான்மறை தெரிந்து நலந்திகழ் மூன்றெரியோம்பும் ஒள்ளியார் வாழு மோமமாம் புலியூருடையவர் வடதளியதுவே."-"ஒன்றியசீரிருபிறப்பர் முத்தீயோம்பு முயர்புகழ்நான் மறையோமாம் புலியூர்நாளுந், தென்றன்மலி வடதளியெஞ் செல்வன்"--,என்பன தேவாரம்.

பாங்குடைய வெழிலங்கி யருச்சனைமுன் விரும்பப்
பரிந்தவனுக் கருள்செய்த பரமன் றன்னைப்
பாங்கிலா நரகதனிற் றொண்டராஞர்
பாராத வகைபண்ண வல்லான் றன்னை
யோங்குமதில் புடைதழுவு மெழிலோமாம் புலியூ
ருயர்புகழந் தணரேத்த வுலகர்க் கென்றுந்
தீங்கிடுரு வடதளியெஞ் செல்வன் றன்னைச்
சேராதே திகைத்துநாள் செலுத்தி னேனே.

## 55. திருக்கச்சி அநேகதங்காபதம்:

இவ்வாலயம் காஞ்சிபுரத்துக்கு வடமேற்கிலுள்ள புக்கேதரித் தெருவுக்கு மேற்கே கழனிவெளியின் மத்தியி லிருக்கிறது.

கணபதியும் குபேரனும் பூசித்த ஸ்தலம்.

கோடிக ளிடைக்குயில் கூவுமி டம்மயி லாலும் மிடமழு வாளுடைய
கடிகொள் புனற்சடை கொண்ட நுதற்கறைக் கண்ட னிடம்பிறைத்
துண்டமுடிச்
செடிகொள் வினைப்பகை தீரு மிடந்திரு வாகு மிடந்திரு மார்பகலத்
தடிக ளிடம்மழல் வண்ண னிடங்கலிக் கச்சி யநேகதங் காபதமே.

## 56. திருக்கச்சிஏகம்பம் (காஞ்சிபுரம்); ரெயில் ஸ்டேஷன்.

பஞ்சபூத ஸ்தலங்களிற் பிருதிவி ஸ்தலம். உமாதேவியார் சிவபெருமானைப் பூசித்து முப்பத்திரண்டறமும் வளர்த்தருளிய ஸ்தலம்.*

சிதம்பர முதலாகிய சிவஸ்தலங்கடோறுஞ் சென்று திருப்பணி செய்து, ஸ்தலத்துக்கு ஒவ்வொரு திருவெண்பா வீதம் க்ஷேத்திர வெண்பா பாடின ஐயடிகள் காடவர்கோனயனர் அரசாட்சி செய்திருந்த ஸ்தலம். திருவொற்றியூர் எல்லையைக் கடந்தவுடன் இரண்டு கண்ணின் பார்வையையும் இழந்த சுந்தரமூர்த்திநாயனர் ஒருகண் பார்வையைப் பெற்றஸ்தலம் *. திருக்குறிப்புத்தொண்ட நாயனர், சாக்கியநாயனர் இவர்கள் முத்தியடைந்த ஸ்தலம். முத்தி ஸ்தலங்கள் ஏழனுள் ஒன்றாகிய விசேஷஸ்தலம். காமாக்ஷியம்மையுடைய ஆலயமாகிய காமகோட்டம், முருகக்கடவுளின் ஆலயமாகிய குமர கோட்டம், விஷ்ணு ஆலயமாகிய அஸ்திகிரிமுதலிய அநேக ஆலயங்கள் நிறைந்த மகாக்ஷேத்திரம். 'நகரேஷு காஞ்சி' என்று நகரங்களுள் விசேஷமாகக் கொண்டாடப்படும் பெருமையையுடைய ஸ்தலம்.

> *ஆலந் தானுகந் தமுதுசெய் தானை யாதி யையம ரர்தொழு தேத்துஞ்
> சீலந் தான்பெரி தும்முடை யானைச் சிந்திப் பாரவர் சிந்தையு ளானை
> யேல வார்குழ லாளுமை நங்கை யென்று மேத்திவ ழிபடப் பெற்ற
> காலகாலனைக் கம்பனெம் மானைக் காணக் கண்ணடி யேன்பெற்ற வாறே.

## 57. கச்சிநெறிக்காரைக்காடு:

இது திருக்காலீசுரன்கோயில் என்று வழங்கி வருகிறது. இவ்வாலயம் காஞ்சீபுரத்தில் ஹாட்ஸன்பேட்டையிலிருக்கும் தேரடிக்கு வடகிழக்கில் $\frac{3}{4}$-மைல் தூரத்திற் கொல்லைவெளியி லிருக்கிறது. வேப்பங்குளம் என்று சொல்லப்படும் பிரபலமான நல்ல தண்ணீர்க் குளம் இந்த ஆலயத்துக்குத் தெற்கே 2-காணி குறிப்பிலிருக்கிறது. காரைவனம் இருத்தலினுற் காரைக்காடு என்று பெயர் எய்தியது.

இந்திரன் பூசித்த ஸ்தலம்.

> காரூரு மணிமிடற்றர் கரிகாட ருடைதலைகொண்
> டூரூரன் பலிக்குழல்வா ருழைமானி னுரியதளர்
> தேரூரு நெடுவீதிச் செழுங்கச்சி மாநகர்வாய்
> நீரூரு மலர்ப்பொய்கை நெறிக்காரைக் காட்டாரே.

## 58. திருக்கச்சிமேற்றளி என்பது திருமேற்றளி.

இந்த ஆலயம் காஞ்சீபுரத்தின் மேற்குப்பாசமாகிய பிள்ளைப் பாளையத்திலிருக்கிறது.

மகாவிஷ்ணு சிவசாரூபம் பெறும்பொருட்டுத் தவஞ்செய்து கொண்டிருந்து, திருஞானசம்பந்த சுவாமிகளின் திருப்பதிகத்தாற்

சிவஸ்வரூபம் பெற்ற ஸ்தலம். இரண்டு சந்நிதி; ஒன்று ஓதவுருகீசுரர் சந்நிதி. அவர் விஷ்ணுரூபமாயிருந்தவர். திருஞான சம்பந்தர் பாடலால் சிவலிங்க ரூபமாய் உருகினார். மற்றொன்று திருமேற்றளி யீசுரர் சந்நிதி. வீதி முனையில சம்பந்தர்கோயி லிருக்கிறது. அதற் கருகில் அவர் பாடலை உற்றுக்கேட்ட முத்தீசுரர் கோயிலிருக்கிறது.

> மாலிய மாயன் றன்னை மகிழ்ந்தனர் விருத்த ராகும்
> பாலனற் பசுப தியார் பால்வெள்ளை நீறு பூசிக்
> காலனைக் காலாற் செற்றார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
> ஏலநற் கடம்பன் றாதை யிலங்குமேற் றளிய னாரே.

## 59. திருக்கச்சூர்–ஆலக்கோயில்.

செங்கற்பட்டுக்கு வடக்கே 6-மைல் தூரத்திலுள்ள சிங்கப் பெருமாள்கோயில் ரெயில்ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து வடமேற்கில் 1½-மைல் தூரம் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் பசியால் வருந்தியிருந்தபோது சுவாமி பிராமணவேடங்கொண்டு அன்னம் யாசித்துக் கொண்டு வந்து அவருக்கு அளித்தருளிய ஸ்தலம். இலிங்கம் மிகவும் சிறிது. அமுதம் திரண்டபொழுது ஆதாரமாக விஷ்ணு கூர்மமாயிருந்து பூசித்தஸ்தலம். கூர்மதீர்த்தம். தியாகராஜர் சந்நிதி இருக்கிறது. அமுர்த தியாகர்.

இவ்வாலயத்துக்கு மேற்கு ½ மைல் தூரத்தில மலையடிவாரத் தில் மருந்தீசர் ஆலயமிருக்கிறது. தேவியார் இருள்நீக்கித்தாயார். அருகிலிருக்கும் மலைக்கு ஔஷதகிரி என்றுபெயர். இவ்வாலயத் துக்குப் போகும வழியில் தாலமூல விநாயகர் அல்லது கருக்கடி விநாயகர் இருக்கிறார்; அதற்கு மேற்கில் "இரந்திட்ட ஈசுரர்" வீற்றிருக்கும் ஒரு சிறு கோயிலிருக்கிறது. கச்சபேசுரர் ஆலயத்துப் பிராகாரத்தில் 'விருந்திட்ட ஈசுரர' என்ற இலிங்கம் இருக்கிறது.

> மேலை விதியே வினையின் பயனே விரவார் புரமூன் றெரிசெய்தாய்
> காலை யெழுந்து தொழுவார் தங்கள் கவலை களைவாய் கறைக்கண்டா
> மாலை மதியே மலைமேல் மருந்தே மறவே னடியேன் வயல்சூழ்ந்த
> ஆலைக் கழனிப் பழனக் கச்சூ ராலக் கோயி லம்மானே.

## 60. கஞ்சனூர்:

திருவிடைமருதூர் ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 5½-மைல் தூரத்திலுள்ளது. வழியில் திருவிடைமருதூருக்குக் கிழக்கு 2½-மைல் தூரத்தில் தென்குரங்காடு துறையும் [102], அதற்கு

வடக்கு 1-மைல் தூரத்தில் திருமங்கலக்குடியும் [221] இருக்கின்றன. கஞ்சனூரில் நடராஜர், சிவகாமியம்மை இவர்கள் உருவங்கள் சிலாரூபமாக இருக்கின்றன. ஹரதத்த சிவாசாரியார் சைவத்தின் மேன்மையை ஸ்தாபித்த ஸ்தலம். அவருக்குத் தனி ஆலயம் இருக்கிறது. அவர் பூசித்த லிங்கமும் பக்கத்திலிருக்கிறது. அக்னியும் பிரமனும் பூசித்தஸ்தலம்*. கோயிலுக்குக்கிழக்கில் அக்னிதீர்த்தம் இருக்கிறது.

*மூவிலைவேற் சூலம்வல னேந்தி னானை மூன்றுசுடர்க் கண்ணானை மூர்த்தி தன்னை
நாவலனை நரைவிடையொன் றேறு வானை நால்வேத மாறங்க மாயி னானை
ஆவினிலைந் துகந்தானை யமரர் கோவை யயன்றிருமா லானானை யனலோன் போற்றுங்
காவலனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே.

## 61. திருக்கடம்பந்துறை என்பது கடம்பர் கோயில்.

திரிசிராப்பள்ளிக்கு மேற்கு 20-மைல் தூரத்திலுள்ள குழித்தலை ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, வடமேற்கில் 1-மைல் தூரஞ்சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

கண்ணுவ முனிவருக்கும் தேவர்களுக்கும், சிவபெருமான் கடம்ப விருக்ஷத்தில தோன்றி காக்ஷிகொடுத்த ஸ்தலம்.

பூமென் கோதை யுமையொரு பாகனை
ஓமஞ் செய்து முணர்மின்க ளுள்ள தால்,
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாம மே தநந் தீவினை நாசமே.

## 62. திருக்கடம்பூர்:

ஆலயத்துக்குக் "கரக்கோயில்" என்று பெயர். ஓமாம்புலியூரிலிருந்து வடமேற்கே 4-மைல் தூரம். ஓமாம்புலியூருக்குச் [54] சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

தேவேந்திரன் பூசித்து அமிர்தம் உண்டாகும்படி. வரம்பெற்ற ஸ்தலம்.

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத் திருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல் !
என்க டன்பணி செய்துகி டப்பதே.

சிவஸ்வரூபம் பெற்ற ஸ்தலம். இரண்டு சந்நிதி; ஒன்று ஓதவுருகீசுரர் சந்நிதி. அவர் விஷ்ணுரூபமாயிருந்தவர். திருஞான சம்பந்தர் பாடலால் சிவலிங்க ரூபமாய் உருகினார். மற்றொன்று திருமேற்றளி யீசுரர் சந்நிதி. வீதி முனையில் சம்பந்தர்கோயி லிருக்கிறது. அதற் கருகில் அவர் பாடலை உற்றுக்கேட்ட முத்தீசுரர் கோயிலிருக்கிறது.

மாலிய மாயன் றன்னை மகிழ்ந்தனர் விருத்த ராகும்
பாலனுற் பசுப தியார் பால்வெள்ளை நீறு பூசிக்
காலனைக் காலாற் செற்றார் காஞ்சிமா நகர்தன் னுள்ளால்
ஏலநற் கடம்பன் றாதை யிலங்குமேற் றளியனாரே.

## 59. திருக்கச்சூர்—ஆலக்கோயில்.

செங்கற்பட்டுக்கு வடக்கே 5-மைல் தூரத்திலுள்ள சிங்க பெருமாள்கோயில் ரெயில்ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்துவடமேற்கில் 1½-மைல் தூரம் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் பசியால் வருந்தியிருந்தபோது சுவாமி பிராமணவீடுகள் தோறுஞ்சென்று அன்னம் யாசித்துக் கொண்டு வந்து அவருக்கு அளித்தருளிய ஸ்தலம். இலிங்கம் மிகவும் சிறிது. அமுதம் திரண்டுவருவதற்காக விஷ்ணு கூர்மமாயிருந்து பூசித்ததலம். கூர்மதீர்த்தம். தியாகராஜர் சந்நிதி இருக்கிறது. அமுர்த தியாகர்.

இவ்வாலயத்துக்கு மேற்கு ¼ மைல் தூரத்தில் மலையடிவாரத் தில் மருந்தீசர் ஆலய மிருக்கிறது. தேவியார் இருணீக்கித்தாயார். அருகிலிருக்கும் மலைக்கு ஔஷதகிரி என்றுபெயர். இவ்வாலயத் துக்குப் போகும் வழியில் தாலமூல விநாயகர் அல்லது கருக்கடி விநாயகர் இருக்கிறார்; அதற்கு மேற்கில் "இரந்திட்ட ஈசுரர்" வீற்றிருக்கும் ஒரு சிறு கோயிலிருக்கிறது. கச்சபேசுரர் ஆலயத்துப் பிராகாரத்தில் 'விருந்திட்ட ஈசுரர்' என்ற இலிங்கம் இருக்கிறது.

மேலை விதியே வினையின் பயனே விரவார் புரமூன் றெரிசெய்தாய்
காலை யெழுந்து தொழுவார் தங்கள் கவலை களைவாய் கறைக்கண்டா
மாலை மதியே மலைமேல் மருந்தே மறவே னடியேன் வயல்சூழ்ந்த
ஆலைக் கழனிப் பழனக் கச்சூ ராலக் கோயி லம்மானே.

## 60. கஞ்சனூர்:

திருவிடைமருதூர் ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 5½-மைல் தூரத்திலுள்ளது. வழியில் திருவிடைமருதூருக்குக் கிழக்கு 2½-மைல் தூரத்தில் தென்குரங்காடு துறையும் [102], அதற்கு

வடக்கு 1-மைல் தூரத்தில் திருமங்கலக்குடியும் [221] இருக்கின்றன. கஞ்சனூரில் நடராஜர், சிவகாமியம்மை இவர்கள் உருவங்கள் சிலாரூபமாக இருக்கின்றன. ஹரதத்த சிவாசாரியார் சைவத்தின் மேன்மையை ஸ்தாபித்த ஸ்தலம். அவருக்குத் தனி ஆலயம் இருக்கிறது. அவர் பூசித்த லிங்கமும் பக்கத்திலிருக்கிறது. அக்கினியும் பிரமனும் பூசித்தஸ்தலம்*. கோயிலுக்குக்கிழக்கில் அக்கினிதீர்த்தம் இருக்கிறது.

*மூவிலைவேற் சூலம்வல னேந்தி னானை மூன்றுசுடர்க் கண்ணானை மூர்த்தி தன்னை
நாவலனை நரைவிடையொன் றேறு வானை நால்வேத மாறங்க மாயி னானை
ஆவினிலைந் துகந்தானை யமரர் கோவை யயன்திருமா லானானை யனலோன் போற்றுங்
காவலனைக் கஞ்சனூ ராண்ட கோவைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டுய்ந் தேனே.

## 61. திருக்கடம்பந்துறை என்பது கடம்பர் கோயில்.

திரிசிராப்பள்ளிக்கு மேற்கு 20-மைல் தூரத்திலுள்ள குழித்தலை ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, வடமேற்கில் 1-மைல் தூரஞ்சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

கண்ணுவ முநிவருக்கும் தேவர்களுக்கும், சிவபெருமான் கடம்ப விருக்ஷத்தில் தோன்றி காக்ஷிகொடுத்த ஸ்தலம்.

பூமென் கோதை யுமையொரு பாகனை
ஓமஞ் செய்து முணர்மின்க ளுள்ளத்தால்!
காமற் காய்ந்த பிரான்கடம் பந்துறை
நாம மேத்தநந் தீவினை நாசமே.

## 62. திருக்கடம்பூர்:

ஆலயத்துக்குக் "கரக்கோயில்" என்று பெயர். ஓமாம்புலியூரிலிருந்து வடமேற்கே 4-மைல் தூரம். ஓமாம்புலியூருக்குச் [54] சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

தேவேந்திரன் பூசித்து அமிர்தம் உண்டாகும்படி வரம்பெற்ற ஸ்தலம்.

நங்க டம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்க டம்பைத்தி ருக்கரக் கோயிலான்
தன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே.

## 63. திருக்கடவூர்:

சீகாழி ரெயில் ஸ்டேஷனிலிறங்கித் தென்கிழக்காகத் தரங்கம்பாடிக்குப் போகும் பாதையில் 14-மைல் தூரஞ் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். வழியில் 10-ஆவது மைலண்டைத் திருத்தலைச்சங்காடு என்னும் ஸ்தலம்[145] இருக்கிறது. மாயூரம் ஸ்டேஷனிலிறங்கிச் சென்றாலும் செல்லலாம். மாயூரத்திலிருந்து தென்கிழக்கே தரங்கம்பாடிக்குப் போகும்பாதையில் $12\frac{3}{4}$-மைல் தூரத்தில் இந்தத்தலம் இருக்கிறது.

கோயில்பெரிது. மேற்குப் பார்த்த சந்நிதி. அஷ்டவீரட்டத்தில் ஒன்று. மார்க்கண்டருக்காக இயமனை உதைத்தருளிய ஸ்தலம்.* காலசம்ஹார மூர்த்திக்குப் பிரத்தியேக சந்நிதி இருக்கிறது. குங்குலியக்கலய நாயனாரும், காரிநாயனாரும் வசித்திருந்து முத்தி பெற்ற ஸ்தலம். பிள்ளையார்-கள்ளவாரணப் பிள்ளையார். கோயிலில் வில்வாரணியேசுரர், பாபஹரேசுரர், புண்ணியவர்த்தனேசுரர் என்னும் இலிங்கங்கள் உள்ளன.

*சேலினே ரனைய கண்ணார் திறம்விட்டுச் சிவனுக் கன்பாய்ப்
பாலுநற் றயிர்நெய் யோடு பலபல ஆட்டி யென்று
மாலினைத் தவிர நின்ற மார்க்கண்டர்க் காக வன்று
காலனை யுதைப்பர் போலுங் கடவூர்வீ ரட்ட னாரே.

## 64. திருக்கடவூர் மயானம்:—

திருமெய்ஞ்ஞானம் என வழங்குகிறது. திருக்கடவூருக்குக் [63] கிழக்கு 1-மைல் தூரம். மணல்வழி. இந்தத் தலத்துக்குத் தெற்கு $\frac{1}{2}$-மைல் தூரத்தில் ஒரு கிணறு இருக்கிறது. அது மிகவும் விசேஷமானது. அதிலிருந்துதான் திருக்கடவூர் அமிர்தகடேசுரருக்குப் பிரதிதினமுந் திருமஞ்சனம் கொண்டுபோகப்படுகிறது. பங்குனிமீ சுக்கிலபக்ஷம் அசுவினி நக்ஷத்திரத்தில் இவ்விடத்தில் ஸ்நானஞ் செய்வது பிரபலமாயிருக்கிறது. மற்றைக் காலத்தில், மேற்சொன்ன திருமஞ்சனம் தவிர, வேறெதற்கும் இந்த ஜலத்தை உபயோகிக்கிறதில்லை. சிவபெருமான் பிரமதேவரை நீறாக்கி அவரை மறுபடி உயிர்ப்பித்து, அவருக்குச் சிருஷ்டித் தொழிலைக் கொடுத்தருளிய ஸ்தலம்.

சூல மேந்துவர் தோலுடை யாடையர்
ஆல முண்டமு தேமிகத் தேக்குவர்
கால காலர்க டவூர்ம யானத்தார்
மாலை மார்பர்பெ ருமான டிகளே.

65. கடிக்குளம் என்பது கற்பகனூர்கோயில்.

திருத்தருப்பூண்டி ரெயில்ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 10½-மைல். இதற்கு மேற்கு 1-மைல் தூரத்தில் [32] இடும்பாவனம் இருக்கிறது.

கோயில் பெரிது. கற்பகப்பிள்ளையார் சிவபெருமானைப் பூசித்து மாம்பழம் பெற்றஸ்தலம். கோயிலுக்கு வெளியில் தென் பக்கத்தில் மேலண்டை கோடியிற் கற்பகப் பிள்ளையார் இருக்கிறார். கோயிலுக்கு வடகீழ்ப் பக்கத்தில் விநாயக தீர்த்தம் இருக்கிறது.

பொடிகொண் மேனிவெண் ணூலினர் தோலினர் புலியுரி யதளாடை
கொடிகொ ளேற்றினர் மணிகிணி னெனவரு குரைகழல் சிலம்பார்க்கக்
கடிகொள்பூம்பொழில்சூழ்தரு கடிக்குளத்துறையுங்கற்பகத்தைத்தம்
முடிகள் சாய்த்தடி வீழ்தரு மடியரை முன்வினை மூடாவே.

66. திருக்கவோய்க்கரைப்புத்தூர்:

நீடாமங்கலம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்காக வலங்கைமான் வழியாய் 11-மைல் தூரஞ்சென்றால் இந்தத்தலத்தை யடையலாம். திருக்குடவாசலில் [98] இருந்து மேற்கே 3½-மைல் தூரஞ் சென்றாலும் இந்தத்தலத்தை அடையலாம்.

காசிபருஷி முதலியோர் பூசித்த ஸ்தலம்.

மாசார் பாசம யக்கறு வித்தெனுள்
நேச மாகிய நித்தம ணாளனைப்
பூச நீர்க்கடு வாய்க்கரைத் தென்புத்தூர்
ஈச னேயென வின்பம தாயிற்றே

67. திருக்கடைமுடி:

மாயூரத்துக்கு வடக்கே 4-மைல் தூரத்தில் உள்ள ஆநந்த தாண்டவபுரம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 2-மைல் தூரஞ் சென்று, திருநின்றியூரை [170] யடைந்து, அங்கிருந்து தென் கிழக்கு 4-மைல் தூரஞ்சென்றாற் கடைமுடியை அடையலாம். இது நனிபள்ளிக்கு [162] வடமேற்கு 1-மைல் தூரம்.

பிரமன் பூசித்த ஸ்தலம்.

மறையவ னுலகவன் மாயமவன், பிறையவன் புனலவ னனலுமவ
னிறையவ னெனவுல கேத்துங்கண்டங், கறையவன் வளநகர் கடைமுடியே.

68. திருக்கண்டியூர்:

தஞ்சாவூருக்கு வடக்கு 6-மைல் தூரத்தில் திருவையாற்றுக்குப் போகும் வழியி லிருக்கிறது. திருவையாறு [50] இதற்கப்பால் வடக்கே 1½-மைல் தூரத்தி லிருக்கிறது. நல்ல பாதை.

திருக்கண்டியூர் அஷ்ட வீரட்டங்களில் ஒன்று. பிரமாவின் சிரசைக் கொய்த ஸ்தலம்.*

"புயல் பொழிந்திழி வானுளோர்களுக் காகவன்றயன் பொய்ச்சிரம்
மயனகவ தரிந்து மற்றதி லூனுகந்த அருத்தியே."

"படைத்தான் தலையை, உண்டங் கறுத்ததும் ஊரொடு நாடவை தானறியும்"
—என்பன தேவாரம்.

ஸப்த ஸ்தான க்ஷேத்திரங்களில் ஐந்தாவது ஸ்தலம்.

சதாநந்தர் பூசித்த தலம். அவருடைய திருவுருவமும், பிரமா, சரசுவதி இவர்கள் திருவுருவங்களும் கோயிலு ளிருக்கின்றன.

* பண்டங் கறுத்ததோர் கையுடை யான்படைத் தான்றலையை
உண்டங் கறுத்தது மூரொடு நாடவை தானறியும்
கண்டங் கறுத்த மிடறுடை யான்கண்டி யூரிருந்த
தொண்டர் பிரானைக்கண் டூரண்ட வாணர் தொழுகின்றதே.

## 69. திருக்கண்ணார்கோயில் என்பது குறுமாணக்குடி.

வைத்தீசுரன் கோயிலுக்குத்[207]தென்கிழக்கு $1\frac{1}{2}$–மைல் தூரம். தேவேந்திரன் சாபம் நீங்கப் பெற்று ஆயிரங் கண் பெற்ற ஸ்தலம்.

முன்னொரு காலத் திந்திர னுற்ற முனிசாபம்
பின்னொரு நாளவ் விண்ணவ ரேத்தப் பெயர்வெய்தித்
தன்னரு ளாற்கண் ணாயிர மீந்தோன் சார்வென்பர்
கன்னியர் நாளுந் துன்னமர் கண்ணார் கோயிலே.

## 70. ஸ்ரீகயிலாயம்:

கொடித்தான்மலை என்று சுந்தரமூர்த்திசுவாமிகள் பாடியிருப்பது இதுவே. "விண்ணுலக கத்தவர்கள் விரும்ப வெள்ளை யானையின்மேல் என்னுடல் காட்டுவித்தான் நொடித் தான்மலை உத்தமனே"—என்பது தேவாரம். இது நம்போலிகள் பார்க்கக்கூடிய ஸ்தலமன்று. அப்பர்சுவாமிகளுக்கும் இந்த ஸ்தலதரிசனத்தைத் திருவையாற்றில் தான் பரமசிவன் கொடுத்தருளினார்.

செய்யாய் கரியாய் வெளியாய் போற்றி செல்லாத செல்வ
முடையாய் போற்றி
ஐயாய் பெரியாய் சிறியாய் போற்றி யாகாச வண்ண
முடையாய் போற்றி
வெய்யாய் தணியா யணியாய் போற்றி வேளாத வேள்வி
யுடையாய் போற்றி
கையார் தழலாய் விடங்கா போற்றி கயிலை மலையானே
போற்றி போற்றி.

**71.** கரவீரம் என்பது கரையபுரம்.

திருவாரூருக்கு மேற்கு 7-மைல் தூரம். இதற்கு வடமேற்கு $1\frac{1}{2}$-மைல் தூரத்திற் பெருவேளூர் [217] இருக்கிறது. பெருவேளூரி லிருந்து மேற்கே 2-மைல் தூரத்தில் திருத்தலையாலங்காடு [146] இருக்கிறது.

கௌதமருஷி பூசித்த ஸ்தலம்.

தங்கு மோவினை தாழ்சடை மேலவன், திங்க ளோடுடன் சூடிய
கங்கை யான்றிக ழுங்கர வீரத்தெஞ், சங்க ரன்கழல் சாரவே.

**72.** திருக்கருகாவூர் என்பது திருக்களாவூர்.

தஞ்சாவூருக்கு வடகிழக்கு 11-மைல் தூரத்திலுள்ள ஐயம் பேட்டை ரெயில் ஸ்டேஷனிலிறங்கித் தென்கிழக்காய் 4-மைல் தூரஞ் சென்றால் இந்தத்தலத்தை அடையலாம். பாவநாசம் என்னும் ரெயில் ஸ்டேஷனி லிறங்கி தெற்கே 4-மைல் தூரஞ் சென்றாலும் இந்த ஸ்தலத்தை யடையலாம். வெட்டாறு என்னும் நதியின் தென் கரையி லிருக்கிறது.

கோபுரம்சிறிது. விநாயகர்-கற்பகவிநாயகர். சுப்பிரமணியசுவாமி உருவம் ஆறுமுகத்துடனிருக்கிறது. மிகவும் அழகாயிருக்கிறது. தேவியார், ஆதாவற்ற ஒருத்திக்கு மருத்துவம் பார்த்து அவள் கருவைக் காத்தபடியால் திருக்கருகாவூர் என்னும் பெயர் வந்தது. தேவியாருக்கும் இக்காரணத்தால் 'கர்ப்பரக்ஷி' என்று பெயர் உண்டாயிற்று. தேவியார் சந்நிதி பிரத்தியேகமாயிருக்கிறது. மணல் இலிங்கம். காஞ்சிபுரத்து இலிங்கத்தைப் பார்க்கிலும் உயரமுள்ளது.

சந்திரன் பூசித்த ஸ்தலம்.

குருகாம் வயிரமாங் கூறு நாளாங் கொள்ளுங் கிழமையாங் கோளே தானும்
பருகா வமிர்தமாம் பாலி னெய்யாம் பழத்தி னிரதமாம் பாட்டிற் பண்ணும்
ஒருகா லுமையாளோர் பாகனுமா முண்ணின்ற நாவிற் குரையாடி யாம்
கருவா யுலகுக்கு முன்னே தோன்றுங் கண்ணுங் கருகாவூ ரெந்தை தானே.

**73.** திருக்கருக்குடி என்பது மருதாந்தநல்லூர்.

கும்பகோணத்திலிருந்து தென்கிழக்கு $2\frac{1}{4}$-மைல் தூரஞ் சென்று கலையநல்லூரை [77] அடைந்து அங்கிருந்து மறுபடி தென்

கிழக்காய் ¾-மைல் தூரஞ்சென்றால் இந்தத்தலத்தை அடையலாம். நல்ல பாதை.

பிரமன் பூசித்த ஸ்தலம். சற்குணன் என்னும் அரசன்பூசித்த தலம். இராமர் பூசித்ததாகச் சொல்லுகிறார்கள். கோயில் சிறிது. மணல் இலிங்கம். சுவாமி உருவமும் அம்மன் உருவமும் சிறியன. ஒரு செட்டி, தன் தாயுடன் அறியாது புணர்ந்த தோஷம் இந்தத் தலத்தில் நீங்கிற்றாம். அவன் உருவம் தேவிசந்நிதிக்கெதிரில் இருக்கிறது.

சாக்கியர் சமண்படு கையர் பொய்ம் மொழி
யாக்கிய வுரைகொளே லருந்தி ருந்நமக்
காக்கிய வரனுறை யணிக நுக்குடிப்
பூக்கமழ் கோயிலே புடைபட் டுய்ம்மினே.

## 74. கருப்பறியலூர்:

வைத்தீசுரன் கோயில் ரெயில் ஸ்டேஷனில்[207]இறங்கி மேற்கே 2-மைல் தூரஞ்சென்று திருப்புன்கூரை [211] அடைந்து, அப்பால் 2-மைல் தூரம் மேற்கே சென்று மண்ணிப்பள்ளம் என்ற ஊரை அடைந்து, அங்கிருந்து வடக்கே 1-மைல் தூரஞ் சென்றால் திருக் கருப்பறியலூரை அடையலாம்.

ஆலயத்துக்குக் 'கொகுடிக் கோயில் என்று பெயர். இத்தலத்து அந்தணர்களைத் தேவாரத்தில் விசேஷித்துச் சொல்லியிருக்கிறது. "முட்டாமே நாடோறும் நீர்மூழ்கிப் பூப்பறித்து மூன்று போதும், கட்டார்ந்த இண்டைகொண் டடிசேர்த்து மந்தணர்தங் கருப்பறிய லூர்,"-"பொய்யாத வாய்மையாற் பொடிப்பூசிப் போற்றிசைத்துப் பூசைசெய்து, கையினலெரியோம்பி மறைவளர்க்கு மந்தணர்தங் கருப்பறியலூர்" என்பன தேவாரம்.

ஒருகால் தேவேந்திரன் இறுமாப்பாய்க் கயிலைக்குப் போக, சிவபெருமான் பூதவடிவமாய் அவனுக்கு முன்தோன்ற, அதை உணராது தேவேந்திரன் குலிசத்தை அவர்மேல் எறிந்தபோது அவர் கோபங்கொள்ள, தேவேந்திரன் தன் குற்றத்தைப் பொறுக்க வேண்டுமென்று வணங்கிப் பூசித்த ஸ்தலம். இக்காரணத்தாற் சுவாமிக்குக் 'குற்றம் பொறுத்த நாதர்' என்ற பெயர் வந்தது.

நீற்றுரு மேனியராய் நினைவார்தம் முள்ளத்தே நிறைந்துதோன்றுங்
காற்றானைத் தீயானைக் கதிரானை மதியானைக் கருப்பறியலூர்க்
கூற்றானைக் கூற்றுதைத்துக் கோல்வளை யாளவளோடும்
கொகுடிக்கோயி
லேற்றானை மனத்தினால் நினைந்தபோ தவர்நமக் கினிய வாறே.

## 75. கருவிலி:

கும்பகோணத்திலிருந்து தென்கிழக்கு $5\frac{1}{2}$-மைல் தூரஞ் சென்று, நறையூர்ச்சித்தீச்சுரத்தை [161] அடைந்து, அங்கிருந்து $\frac{1}{2}$-மைல் தூரமுள்ள நாச்சியார்கோயிலுக்கு வந்து, அங்கிருந்து கிழக்கே 6-மைல் தூரஞ் சென்றால் கருவிலியை அடையலாம்.

இதற்கு வடகிழக்கு $2\frac{1}{2}$-மைலில் திருநல்லம் [157] என்னும் கோனேரி ராஜபுரம் இருக்கிறது.

ஆலயத்துக்குக் 'கொட்டிட்டை' என்று பெயர்.

இந்திரனும் தேவர்களும் பூசித்த ஸ்தலம். சற்குணன் என்னும் அரசன் பூசித்துப் பிறவிக்கடலைக் கடந்த ஸ்தலம். தேவாரத்தில் உருத்திர கணங்கள் பூசித்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது*.

* பிணித்த நோய்ப்பிற விப்பிறி வெய்துமா
றுணர்த்த லாமிது கேண்மி னுருத்திர
கணத்தி னார்தொழு தேத்துங் கருவிலிக்
குணத்தி னானுறை கொட்டிட்டை சேர்மினே.

## 76. கருவூர்:

இந்நகர் இப்போது 'கரூர்' என வழங்கிவருகிறது. ரெயில் ஸ்டேஷன். திரிசிராப்பள்ளிக்கு மேற்கு 45-மைல் தூரம்.

இவ்வூர் ஆலயத்துக்கு ஆநிலை என்று பெயர். கோயில் பெரிது. கோபுரம் பெரிது. தேவியார் சந்நிதி இரண்டு உள்ளன. எறிபத்தநாயனாருடைய ஸ்தலம். கொங்குதேசத் தரசராகிய புகழ்ச்சோழநாயனாருடைய இராசதானி. சிவபெருமானுக்குப் பூமாலை கட்டிக் கொடுக்கும் திருத்தொண்டு செய்துவந்த சிவகாமியாண்டார் என்னும் பெரியவர் இருந்த இடம். திருவிசைப்பாபாடிய சந்தானகுரவர்களில் ஒருவராகிய கருவூர்த்தேவர் அவதரித்து முத்தியடைந்த க்ஷேத்திரம். அவருடைய சந்நிதியு மிருக்கிறது.

விண்ணு லாமதி சூடி வேதமே, பண்ணு ளார்பர மாய பண்பினர்
கண்ணு ளார்கரு வூரு ளானிலை, யண்ண லாரடி யார்க்கு நல்லரே.

## 77. திருக்கலயநல்லூர் என்பது சாக்கோட்டை.

கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு $2\frac{3}{4}$-மைல் தூரம். நீடாமங்கலம் போகும் பாதையிலிருக்கிறது. இஃது அரிசில் நதியின் தென்கரையில் உள்ள ஸ்தலம். அரி சொல்லி வந்தபடியால் "அரி சொல் நதி" என்றுபெயர்; 'அரிசொல்' என்பது 'அரிசில்' என மருவியது. கோயில்சிறிது. கோயிலைச் சுற்றித் தாமரைப்பொய்கை இருக்கிறது. இதற்குத் தென்கிழக்கு 1-மைல் தூரத்தில் திருச்கருக்குடி [73] யிருக்கிறது.

மாலயனுங் காண்பரிய மாலெரியாய் நிமிர்ந்தோன்
வன்னிமதி சென்னிமிசை வைத்தவன்மொய்த் தெழுந்த
வேலைவிட முண்டமணி கண்டன்விடை யூரும்
விமலனுமை யவளோடு மேவியவூர் வினவிற்
சோலைமலி குயில்கூவக் கோலமயி லாலச்
சுரும்பொடுவண் டிசைமுரலப் பசுங்கிளிசொற் றதிக்கக்
காலையிலு மாலையிலுங் கடவுளடி பணிந்து
கசிந்தமனத் தவர்பயிலுங் கலயநல்லூர் காணே.

## 78. கலிக்காமூர் என்பது அன்னப்பன்பேட்டை.

தென்திருமுல்லைவாயிலுக்குத் [240] தென்மேற்கு 3-மைல்; சாயாவனத்துக்கு (திருச்சாய்க்காடு—130) வடக்கு 4-மைல். அத்தலங்களுக்குச் சொல்லி யிருக்கும் வழியைப்பார்க்க.

பராசரருஷி பூசித்த ஸ்தலம்.

துறைவளர்கே தகைமீது வாசஞ் சூழ்வான் மலிதென்றல்
கறைவளருங் கடலோத மென்றுங் கலிக்குங் கலிக்காமூர்
மறைவளரும் பொருளாயி னானை மனத்தா னினைந்தேத்த
நிறைவளரும் புகழெய்தும் வாதை நினையா வினைபோமே.

## 79. திருக்கழிப்பாலை:

சிதம்பரத்துக்குத் தென்கிழக்கில் 7-மைல் தூரத்திலுள்ளது. இந்த ஸ்தலத்திலிருந்த கோயில் கொள்ளிட நதியாற் கொண்டுபோய் விடப்பட்டபடியால் அங்கிருந்த சுவாமி இப்போது சிதம்பரத்துக்குத் தென்கிழக்கு $2\frac{1}{2}$-மைல் தூரத்திலுள்ள சிவபுரி (நெல்வாயில்-176) என்னும் ஸ்தலத்தில் ஒரு தனி ஆலயத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. இவ்வாலயம் சிறிது. சிவலிங்கம் சிறிதாய் வெண்ணிறமாயிருக்கிறது.

வன்மீகருஷி பூசித்த ஸ்தலம்.

சுரும்பார் விண்டமல ரவை தூவித் தூங்கு கண்ணீ
ரரும்பா நிற்குமனத் தடி யாரொடு மன்பு செய்வன்
விரும்ப னுன்னை யல்லா தொரு தெய்வ மென் மனத்தாற்
கரும்பா ருங்கழனிக் கழிப் பாலைமே யானே.

## 80. திருக்கழுக்குன்றம்:

செங்கற்பட்டு ரெயில் ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 9-மைல் தூரம்; செம்மையானபாதை.

பிரதிதினமும் உச்சிக்காலத்தில் இரண்டு கழுகுகள் வந்து தங்களுக்குக் கொடுக்கப்படும் அன்னத்தையும் நெய்யையும் புசித்து மலையை வலமாகச் சுற்றிக்கொண்டுபோகும் அற்புதமான ஸ்தலம். 12-வருஷத்துக் கொருவிசை சங்கு பிறக்கும் காரணத்தால் 'சங்கு பிறந்தகுளம்' என்று சொல்லப்படும் மகிமையான திருக்குளத்தை யுடையது. சந்நிடத்தில் வசித்து, சங்கு பிறந்தகுளத்தில் ஸ்நானஞ்செய்து, கிரிபிரதக்ஷிணம் நியமமாகச்செய்யும் அடியார்களுடைய எவ்வித பிணியையும் போக்கியருளும் அருமையான ஸ்தலம். ஸ்ரீமன்-மாணிக்கவாசக சுவாமிகளுக்குச் சிவபெருமான் குரு வடிவமாயெழுந்தருளித் தரிசனங்கொடுத்த மேன்மையானக்ஷேத்திரம்.

பையுடைய பாம்பொடு நீறு பயில்கின்ற
மெய்யுடையான் வெண்பிறை சூடி விரிகொன்றை
மையுடைய மாமிடற் றண்ணன் மறிசேர்ந்த
கையுடையான் காதல்செய் கோயில் கழுக்குன்றே.

## 81. திருக்களர்:

திருத்தருப்பூண்டி ரெயில் ஸ்டேஷனிலிருந்து மேற்கே மன்னார் குடிக்குப் போகும்பாதையில் 6½-மைல் தூரஞ்சென்று, அங்கு தெற்கே திரும்பித் தீவட்டிக் கரைக்குப்போகும் பாதையில் 2½-மைல் தூரஞ்செல்லவேண்டும். நல்லபாதை. திருத்தருப்பூண்டியிலிருந்து மன்னார்குடிக்குப்போகும் பாதையில் 2¼-மைல் தூரஞ்சென்று பள்ளன்கோயில் என்னும் ஊரைச்சேர்ந்து, அங்கு தெற்கே திரும்பி 2¾-மைல் கொடிவழியே சென்றாலும் இந்தத் தலத்தைச் சேரலாம்.

கோயிலும் கோபுரமும் பெரிதாக இருக்கின்றன. கோபுரம் அழகாயிருக்கிறது. அதில் அநேக பதுமைகளிருக்கின்றன. பராசர

முனிவரும் காளவ முனிவரும் பூசித்த ஸ்தலம். துருவாச முனிவருக்கு நடனதரிசனம் கொடுத்தவர் இத்தலத்துள்ள நடராஜ மூர்த்தி. துருவாசருடைய விக்கிரகம் நடேசமூர்த்திக் கெதிரி லிருக்கிறது. வலம்புரி விநாயகர். ஸ்தலத்துக்குப் பாரிஜாதவனம் என்று பெயர்.

பாடவல்லநன்மைந்தரோடுபனிமலர்பலகொண்டுபோற்றிசெய்
சேடர்வாழ்பொழில்சூழ்செழுமாடத்திருக்களரு
ணீடவல்லநிமலனேயடிநிரைகழல்சிலம்பார்க்கமாநட
மாடவல்லவனேயடைந்தார்க்கருளாயே.

## 82. திருக்கள்ளில்:

இஃது இப்போது 'திருக்கள்ளம்' என வழங்கி வருகிறது.

சென்னபட்டணத்துக்கு மேற்கே 26-மைல் தூரத்திலுள்ள திருவெவ்வுளூர் ரெயில் ஸ்டேஷனி லிறங்கி வடகிழக்காய் வெள்ளியூருக்குப் போகும்பாதையில் 14-மைல் தூரஞ்சென்று, பூச்சத்திப்பட்டு என்னும் கிராமத்தைச் சேர்ந்து, அங்கு வடக்கே திரும்பி 2-மைல் தூரஞ்சென்று குசஸ்தலை ஆற்றைக் கடந்தால் இந்த ஸ்தலத்தை யடையலாம். ஈஸ்ட்கோஸ்ட்டு(கீழ்க்கரை)ரெயில்வேயிற் சென்னபட்டணத்திலிருந்து வடக்கே பொன்னேரி வரையில் (22-மைல்) சென்று, அங்கிறங்கி தென்மேற்காய் 12-மைல் தூரஞ் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம். இதற்கு மேற்கே 6-மைல் தூரத்தில் பெரியபாளயம் என்னும் பிரபலமான ஸ்தலமிருக்கிறது.

பிருகு முனிவர் பூசித்த ஸ்தலம்.

முள்ளின்மேன்முதுகூகைமுரலுஞ்சோலை
வெள்ளின்மேல்விடுகூரைக்கொடிவிளைந்த
கள்ளில்மேயவண்ணல்கழல்கணாளு
முள்ளுமேலுயர்வெய்தலொருதலையே.

## 83. திருக்கற்குடி என்பது உய்யக்கொண்டான்.

திரிசிரபுரத்துக்குத் தென்மேற்கு 2½-மைல்தூரம்; நல்லபாதை. கோயில் ஒரு சிறிய மலைமே லிருக்கிறது.

ஈழநாட்டரசன் உச்சிக்காலத்தில் வந்து பூசித்து முத்தி பெற்ற ஸ்தலம்.

செய்யார் மேனி யனே திரு நீலமி டற்றி னனே
மையார் கண்ணி பங்கா மத யானை யுரித்தவனே
கையார் சூலத் தினாய் திருக் கற்குடி மன்னி நின்ற
ஐயா வெம்பெருமா னடி யேனையு மஞ்ச லென்னே.

## 84. கன்றுப்பூர்:

திருவாரூர் ரெயில் ஸ்டேஷனிலிருந்து தெற்கே 5½-மைல் தூரமுள்ள நாட்டியத்தான்குடி ஸ்டேஷனிலிறங்கி, கிழக்கே 5-மைல் தூரஞ்சென்று, வடக்கே திரும்பி 1-மைல் போனாற் கன்றுப்பூரை அடையலாம்.

கன்றுப்பூர் சிறியவூர். கோயில் நாட்டியத்தான்குடி கோயிலைப் போலிருக்கிறது. முன்கோபுரம்இல்லை. சுவாமி, கன்றுக்குட்டி கட்டும் படியான ஆப்பு அல்லது குச்சிலிருந்து உற்பத்தியானவர். சைவன் வீட்டுப் பெண் ஒருத்தி வைணவனுக்கு வாழ்க்கைப்பட்டு மாமியார் வீட்டார் காணுதபடி கன்றுக்குட்டி கட்டியிருந்த ஆப்பையே சிவமாகப் பாவித்துப் பூஜை செய்துவர, ஒரு நாள் புருஷன் அதைக் கண்டு அந்த ஆப்பைக் கோடரியால் வெட்ட சிவபிரான் அவ்வாப்பி லிருந்து வெளிப்பட்டார். அக்காரணத்தால் ஊருக்குக் கன்றுப்பூர் என்றும் சாமிக்கு நடுதறிநாதர் என்றும் பெயர் வந்தது. கோடரியால் வெட்டினது போன்ற குறி சாமிமேலிருக்கிறது.

இடும்பன் என்னும் அசுரன் பூசித்த ஸ்தலம்.

ஐயினுன் மிடறடைப்புண் டாக்கை விட்டு ஆவியார் போவதுமே யகத்தார் கூடி
மையினுற் கண்ணெழுதி மாலை சூட்டி மயானத்தி லிடுவதன்முன் மதியஞ் சூடும்
ஐயனுர்க் காளாகி யன்பு மிக்கு அகங்குழைந்து மெய்யரும்பி யடிகள் பாதங்
கையினுற் றொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே.

## 85. கீழைத்திருக்காட்டுப்பள்ளி:

சீகாழியிலிருந்து தென்கிழக்காய்க் காவிரிப்பூம்பட்டினத்துக்குப் போகும் மார்க்கத்தில் 7-மைல் தூரஞ்சென்று திருவெண்காட்டைச் [263] சேர்ந்து, அங்கிருந்து மேற்கே 1-மைல் தூரஞ்சென்றால் இந்தத்தலத்தை அடையலாம்.

விருத்திராசுரனைக்கொன்ற பழி பற்றித் திரிந்த தேவேந்திரன் அப்பழி நீங்கிவந்து தேவலோகத்தை ஆளவேண்டும் என்றிரந்து தேவர்கள் பூசித்த ஸ்தலம்.

பிறையுடை யான்பெரி யோர்கள் பெம்மான் பெய்கழல் நாடொறும் பேணி யேத்த
மறையுடை யான்மழு வாளுடையான் வார்தரு மால்கடல் நஞ்சமுண்ட
கறையுடை யான்கன லாடு கண்ணாற் காமனைக் காய்ந்தவன் காட்டுப்பள்ளி
குறையுடை யான்குறட் பூதச் செல்வன் குரைகழலே கைகள் கூப்பினேமே.

## 86. மேலைத்திருக்காட்டுப்பள்ளி:

தஞ்சாவூருக்கு மேற்கே 11-மை தூரத்திலுள்ள பூதலூர் என்னும் ரெயில்ஸ்டேஷனிலிறங்கி வடக்கே 5-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். இது குடமுருட்டி யாற்றின் தென்கரையி லிருக்கிறது. திருப்பூந்துருத்தியி [212] லிருந்து மேற்கே 7-மைல் தூரஞ்சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம். நல்ல பாதை.

உறையூர் நந்தவனத்தில் திருடிய செவ்வந்திமலரை அரசன் தன் பத்தினிகளுக்குக் கொடுப்ப, அவர்களில் மூத்தாள் மாத்திரம் அதை யரண்மனையிலிருந்த சிவபெருமானுக்கு அணிந்து வந்தாள். உறையூரில் மண்மாரிபெய்யவே, மூத்தாள் மாத்திரம் அதற்குத் தப்பி, மேலைத் திருகாட்டுப்பள்ளிக்கு வர, அவளுக்காக இரங்கி சுவாமி கானல்வெப்பம் தணித்தருளிய ஸ்தலம்.

பணங்கொளு மரவரைக் கார்ப்பது பல்பலி
யுணங்கலோ டுண்கல னுறைவது காட்டிடை
கணங்கள்கூ டித்தொழு தேத்துகாட் டுப்பள்ளி
நிணங்கொள்சூ லப்படை நிமலர்தந் நீர்மையே.

## 87. காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சுரம்:

சீகாழிக்குத் தென்கிழக்கு 10-மைல் தூரம். நல்லபாதை. வழியில் 7-ஆவது மைலில் திருவெண்காடும் [263], 9-ஆவது மைலில் திருச்சாய்க்காடும் [130] இருக்கின்றன.

பல்லவராஜன் பூசித்த ஸ்தலம்.

இயற்பகை நாயனார், பட்டினத்துப்பிள்ளையார் இவர்கள் திருவவதாரஞ் செய்தருளியஸ்தலம்.

பரசு பாணியர் பாடல் வீணையர் பட்டி னத்துறை பல்லவ னீச்சரத்
தரச பேணி நின்றார் இவர்தன்மை யறிவா ரார்.

## 88. ஸ்ரீகாழி.

ரெயில்ஸ்டேஷன். சிதம்பரத்துக்குத் தெற்கு 11-மைல்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனூர் திருவவதாரஞ் செய்தருளிய திருப்பதி. இத்தலத்துச் சுவாமியும் அம்மையும் தம்மை ஆட்கொண்டதை—

"வேறெமை யாள விரும்பிய விகிர்தர் வெங்குரு மேவியுள் வீற்றிருந்தாரே"
"ஆதி யெமை யாளுடைய அரிவை யொடு பிரிவிலி யமர்ந்தபதி"

எனவும்—,"போதையார் பொற்கிண்ணத் தடிசில் பொல் லாதெனத்
தாதையார் முனிவுறத் தானெனை யாண்டவன்
காதையார் குழையினன் கழுமல வளநகர்ப்
பேதையா ளவளொடும் பெருந்தகை யிருந்ததே" எனவும்—,

ஸ்ரீசம்பந்த ஸ்வாமிகள் சிறப்பித்துச் சொல்லியிருக்கின்றார். திருநீலகண்டப் பெரும்பாணநாயனூர் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனூரைச்சேர்ந்து அவர் அருளிச்செய்யும் தேவாரத் திருப்பதிகங்களை யாழில் வாசிக்கும்படியான பாக்கியத்தைப் பெற்றிருந்த ஸ்தலம். கணநாதநாயனூர் வசித்திருந்த ஸ்தலம்.

திருஞானசம்பந்தருக்குத் தனி ஆலயம் இருக்கிறது.

ஸ்ரீகாழி, பிரமபுரம், தோணிபுரம், வேணுபுரம், சிரபுரம், புகலி, வெங்குரு, பூந்தராய், புறவம், சண்பை, கொச்சைவயம், கழுமலம் என்னும் 12-திருநாமங்களையுடைய ஸ்தலம். பிரமன் பூசித்ததாற் பிரமபுரம் எனவும், அமரர்கள் புகலிடமாகப் புகுந்த காரணத்தாற் புகலி எனவும், பிரளய காலத்தில் தோணிபோல மிதந்த காரணத்தால் தோணிபுரம் எனவும் இத்தலத்துக்குப் பெயர்கள் வந்தன என்பது "தாமரை நான்முகத்தன், பெரியான் பிரமன் பேணியாண்ட பிரமபுரத்தானே", "அமரர் புகலால் மலிந்த பூம் புகலி" "ஒருவரிவ்வுலகில் வாழ்கிலா வண்ண மொலிபுனல் வெள்ளமுன் பரப்பக் கருவரை சூழ்ந்த கடலிடை மிதக்குங் கழுமல நகரெனலாமே" எனவருந் தேவாரத்தினின்றும் அறியலாகும்.

தோடுடைய செவி யன்விடை யேறியோர் தூவெண் மதிசூடிக்
காடுடைய சுட லைப்பொடி பூசியென் னுள்ளங் கவர்கள்வன்
ஏடுடைய மல ரான்முனை நாட்பணிந் தேத்த வருள்செய்த
பீடுடைய பிர மாபுர மேவிய பெம்மா னிவனன்றே.

**89. திருக்காளத்தி (ஸ்ரீகாளஹஸ்தி).**

ரெயில் ஸ்டேஷன். ரேணுகுண்டா ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 15-மைல் தூரம். கோயில் சுவர்ணமுகி நதியின் கீழ்க் கரையில், காளத்தி மலை யடிவாரத்தில் இருக்கிறது.

இந்த ஸ்தலம் பஞ்சபூதங்களில் ஒன்றாகிய வாயுஸ்தலம். அதற்குத் திருஷ்டாந்தமாக சுவாமி சந்நிதானத்தில் எரியும் தீபங்களில் ஒன்று காற்றினால் மோதப்பட்டாற்போல் எக்காலமும் அசைந்து கொண்டே இருக்கிறது.

ஸ்ரீகாளஹஸ்தி என்பது (ஸ்ரீ=)சிலந்தி, (காளம்=)பாம்பு, (ஹஸ்தி=)யானை இம்மூன்றும் பூசித்து முத்திபெற்ற ஸ்தலம். திருக்காளத்தி மலையிலுள்ள சிவலிங்கப் பெருமானை அன்புடன் வழிபட்டுக் கண்ணிடந் தப்பலாகிய அருமையான தொண்டைச் செய்து கண்ணப்பநாயனார் ஆறுநாளிலே மோக்ஷ மடைந்தார்*. காளத்தியப்பரைப் பூசித்து வந்த சிவகோசரியார் என்னும் பிராமணோத்தமரும் இந்தத்தலத்திலே மோக்ஷமடைந்தார். நக்கீர தேவரும் வழிபட்டுப் பேறுபெற்றார். ஸ்ரீகாளஹஸ்தி தக்ஷிண கைலாசமென்று சொல்லப்படுகிறது.

'சிலந்தி மாசுண மும்மதக் கரிசிவ கோசன்
மலர்ந்தி டுஞ்சிலை வேட்டுவன் கீரனே மடவார்
பலந்தரும் வழி பாட்டினாற் பாட்டினாற் பரனைக்
கலந்து முத்திசேர் தென்பெருங் கயிலையுங் கண்டான்.'

என்னுங் கந்தபுராணச் செய்யுள் கவனிக்கற் பாலது.

* வேயனைய தோளுமையோர் பாகமது வாகவிடை யேறி சடைமேற்
றூயமதி சூடிசுடு காடினட மாடிமலை தன்னை வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மல ராகு நயனங்
காய்கணையி னாலிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே.

**90. திருக்காறுயில் என்பது திருக்காறைவாசல்.**

திருவாரூருக்குத் தெற்கு 8¼-மைல். நல்ல பாதை. திருநாட்டியத்தான்குடி ரெயில் ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 3-மைல் தூரம்.

இது சப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. தேவேந்திரன், முசுகுந்த சக்ரவர்த்தி முதலியோர் பூசித்த ஸ்தலம். கோயில் சிறிது; கோபுரமும் சிறிது. புரட்டாசி பௌர்ணமையில் தேவேந்திரன் பூசித்ததாக ஐதிஹ்யம். கோயிலுக்கு வடபுறத்தில் இந்திர தீர்த்தம்

இருக்கிறது. குளத்தின் வடகரையில் கடுக்காய்ப் பிள்ளையார் என்றொரு விக்கினேசுரர் இருக்கிறார்.

> சேர்த்தானே தீவினை தேய்ந்தறத் தேவர்க
> ளேத்தானே யேத்துநன் மாமுனி வர்க்கிடர்
> காத்தானே கார்வயல் சூழ்திருக் காறயில்
> ஆர்த்தானே யென்பவர் மேல்வினை யாடாவே

## 91. திருக்கானப்பேர் என்பது காளையார்கோயில்.

மதுரைக்குக் கிழக்கு 39-மைல். சிவகங்கை யென்னும் ஊர் வழியாய்ப் போகவேண்டும். மதுரையிலிருந்து சிவகங்கை 28-மைல் தூரம்: முழுமையும் நல்லபாதை. மானாமதுரை ரெயில்ஸ்டேஷனுக்கு வடக்கே 11-மைலில் சிவகங்கை யிருக்கிறது.

சுவாமி காளை வடிவங்கொண்டு திருச்சுழியல் என்னும் ஸ்தலத்திலிருந்து சுந்தரமூர்த்தி நாயனாருக்குத் தோன்றி "நம்முடைய வாசஸ்தானம் கானப்பேர்" என்று சொல்லி, அவரையும் அவருடனிருந்த சேரமான் பெருமாள்நாயனாரையும் அழைத்துக் கொண்டு போய்த் தரிசனங் கொடுத்தருளிய ஸ்தலம்.

சாபத்தினாற் காட்டானையாய்ச் சமைந்த ஐராவதம் பூசித்த ஸ்தலம்*. "மானமா மடப்பிடி வன்கையா லலகிடக், கானமார் கடகரி வழிபடுங் கானப்பேர்" என்பது தேவாரம்.

கோயில் பெரிது. மூன்று சந்நிதிகள் இருக்கின்றன:—சோமேசர்-சௌந்தர நாயகி; காளீசர் – சொர்ணவல்லி; சுந்தரேசுரர் – மீனாக்ஷி. கோபுரம் மதுரை கோபுரத்தைப்போலப் பெரிது; மருது பாண்டியன் கட்டினதாம். அது சோமேசர் சந்நிதிக்கு நேரே இருக்கிறது.

> * பிடியெலாம் பின்செலப் பெருங்கைமா மலர்தழீஇ
> விடியலே தடமூழ்கி விதியினால் வழிபடுங்
> கடியுலாம் பூம்பொழிற் கானப்பே ரண்ணலின்
> அடியலால் அடைசரண் உடையரோ அடியரே.

## 92. திருக்கானாட்டுமுள்ளூர்:

சிதம்பரத்திலிருந்து தென்மேற்காக 15-மைல் தூரஞ்சென்று மன்னார்குடி என்னும் ஊரைச்சேர்ந்து, அங்கிருந்து தெற்கே ஓமாம்புலியூருக்குச் செல்லும் பாதையில் 2-மைல் தூரஞ் சென்று, அங்கே பாதையைவிட்டுக் கிழக்கே திரும்பி 1-மைல் தூரம்

போனால் இந்தத் ஸ்தலத்தை அடையலாம். இதற்குத் தென்மேற்கு 2-மைல் தூரத்தில் ஓமாம்புலியூ [54] ரிருக்கிறது.

பதஞ்சலி முனிவர் பூசித்த ஸ்தலம்.

அருமணியை முத்தினை ஆனைஞ்சும் ஆடும்
அமரர்கடம் பெருமானை யருமறையின் பொருளைத்
திருமணியைத் தீங்கரும்பின் ஊறலிருந் தேனைத்
தெரிவரிய மாமணியைத் திகழ்தருசெம் பொன்னைக்
குருமணிகள் கொழித்திழிந்து சுழித்திழியுந் திரைவாய்க்
கோல்வளையார் குடைந்தாடுங் கொள்ளிடத்தின் கரைமேற்
கருமணிகள் போல் நீல மலர்கின்ற கழனிக்
கானாட்டு முள்ளூரிற் கண்டுதொழு தேனே.

## 93. திருக்கானூர்:

பூதலூர் ரெயில் ஸ்டேஷனி லிருந்து வடக்கே 5-மைல் தூரஞ் சென்று திருக்காட்டுப்பள்ளியை [86] அடைந்து, அங்கிருந்து வடக்கே 2-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். இப்போது இங்கே கோயில் மாத்திர மிருக்கிறது. வீடுகள் ஒன்று மில்லை. ஊர் மணல் மூடிப்போய் விட்டது. நூறு வருஷங்களுக்கு முன் கோயில் மாத்திரம் கண்டுபிடிக்கப் பட்டது. கோயில் பூமி மட்டத்துக்குத் தாழ்ந்திருக்கிறது.

உமாதேவியார் சிவயோகம் செய்துகொண்டிருக்கும்போது, சிவ பெருமான் அக்கினி சொரூபமாய் அவருக்குத் தரிசனங்கொடுத் தருளிய ஸ்தலம்.

தமிழி னீர்மை பேசித் தாளம் வீணை பண்ணி நல்ல
முழவ மொந்தை மல்கு பாடல் செய்கை யிடமோவார்
குமிழின் மேனி தந்து கோல நீர்மை யதுகொண்டார்
கமழுஞ் சோலைக் கானூர் மேய பவளவண்ணரே.

## 94. கீழ்வேளூர்:

ரெயில் ஸ்டேஷன். திருவாரூருக்குக் கிழக்கு 7-மைல் தூரம். வடக்கே ஓடம்போக்கி ஆறு ஓடுகிறது. சந்நிதி கட்டுமலைமேலிருக் கிறது. எல்லாம் கருங்கல் வேலை. ஸ்தூபி முழுமையும் கருங்கல் கட்டடம். கோயில் பெரிது. சுப்பிரமணிய ஸ்வாமி பூசித்த ஸ்தலம். அவர் சந்நிதி விசேஷமாயிருக்கிறது. பக்கத்தில் தேவிமாரில்லை. அவருடைய பூஜைக்கும் தவத்துக்கும் தீங்குநேரிடாவண்ணம் அம்மை அஞ்சதிக்கி துய் காவல்பூண்டிருந்தாளாம். அந்த அம்மைக்கு அஞ்சவட்ட அம்மை

என்று பெயர். இந்த அம்மை சந்நிதி முதல் பிராகாரத்தில் வட பக்கத்தில் இருக்கிறது. இது விசேஷ சந்நிதியாயிருக்கிறது. தீர்த்தம்- சரவணப்பொய்கை. குளக்கரையின் மேற்பக்கத்தில் ஒரு சிவாலயம் இருக்கிறது. விருக்ஷம்-இலந்தை; இரண்டாம் பிராகாரத்திலிருக்கிறது. பெரிய பழைய மரம். இந்த ஸ்தல நடராஜமூர்த்தி, அகஸ்தியருக்கு வலதுபாத தரிசனங் கொடுத்தவர். அகஸ்தியர் பூசித்த லிங்கம் இலந்தை மரத்துக்கு வடக்கில் இருக்கிறது. பிராகாரத்திற் குபேர னுடைய சந்நிதியும், சுந்தர கணபதியின் சந்நிதியும் இருக்கின்றன. தேவேந்திரன், குபேரன் இவர்கள் விக்கிரகங்களும் இருக்கின்றன.

> பிறைநி லாவிய சடையிடைப் பின்னலும் வன்னியுந் துன்னுங்
> கறைநி லாவிய கண்டரெண் டோளினர் காதல்செய் கீழ் வேளூர்
> மறையு லாவிய வந்தணர் மலிதரு பெருந்திருக் கோயின்மன்னு
> நிறையு லாவிய வீசனை நேசத்தா னினைபவர் வினைபோமே.

**95. திருக்குடந்தைக்காரோணம்** என்பது கும்பகோணத்திலுள்ள காசி விசுவநாதர் கோயில்.

இவ்வாலயம் மகாமககுளத்தின் வடகரையி லிருக்கிறது. நவநதி களும் நவ கன்னிகைகளாய்ப் பூசித்த தலம். அவர்கள் உருவங்கள் கோயிலுள் இருக்கின்ற. உமைபவள், மாந்தாதா முதலியோர் பூசித்த ஸ்தலம்.

> முடியார் மன்னர் மடமான் விழியார் மூவுல கும்மேத்தும்
> படியார் பவள வாயார் பலரும் பரவிப் பணிந்தேத்தக்
> கொடியார் விடையார் மாட வீதிக் குடந்தைக் குழகாருங்
> கடியார் சோலைக் கலவ மயிலார் காரோணத்தாரே.

**96. திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம்** என்பது கும்பகோணத்திலுள்ள நாகேசுரஸ்வாமி கோயில். ஊர்மத்தியிலிருக்கிறது.

கோயில் பெரிது. சூரியன் பூசித்த ஸ்தலம். இங்கே பிரதி வருஷமும் சித்திரை மாதம் 11, 12, 13–இந்த தேதிகளிற் காலையிற் சூரியகிரணம் சுவாமிமேற் படுகின்றது. கங்கைக் கணபதியார் விக் கிரஹம் மிக நன்று யிருக்கிறது. அர்த்த நாரீசுரர் விக்கிரஹமும் பிரளயகால ருத்திரர் விக்கிரஹமும் இருக்கின்றன.

ஏவிபிடர்க் கடலிடைப்பட் டிளைக்கின் றேனை
யிப்பிறவி யறுத்தேற வாங்கி யாங்கே
கூவியம ருலகனைத்து முருவிப் போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலுந்
தாவிமுதற் காவிரிநல் யமுனை கங்கை
சரச்சுதிபொற் றாமரைபுட் கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரிவரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்த னாரே.

## 97. திருக்குடமூக்கு என்பது கும்பகோணம்.

ரெயில்ஸ்டேஷன். ஏமருஷி முதலியோர் பூசித்த ஸ்தலம். பன்னிரண்டு வருஷத்துக் கொருவிசை மாசிமகத்தின்போது காசி கங்கை வரும் ஐதிஹ்யத்தால் அதிக சிறப்படைந்திருக்கு மாமக தீர்த்தத்தையுடைய ஸ்தலம். கோயில் மிகவும் பெரிது.

காமி யஞ்செய்து காலங் கழியாதே
ஓமி யஞ்செய்தங் குள்ளத் துணர்மினோ
சாமி யோடச ரச்சுவ தியவள்
கோமி யும்முறை யுங்குட மூக்கிலே.

## 98. திருக்குடவாயில்:

தஞ்சாவூருக்குக் கிழக்கே 24-மைல் தூரமுள்ள கொரடாச்சேரி யென்னும் ரெயில்ஸ்டேஷனி லிறங்கி வடக்கே 8-மைல் தூரஞ் சென்றால் இந்தத்தலத்தை அடையலாம். நல்லபாதை.

திருணபிந்து முனிவர் பூசிக்க ஸ்வாமி திருக்குடத்திலிருந்து வெளிப்பட்டு அவருடைய குட்டநோயைத் தீர்த்தருளிய ஸ்தலம்.

திருக்குடவாசலிலிருந்து வடக்கே 2-மைல் தூரத்தில் திருநாலூரும், அதற்கு வடகிழக்கு ஒருமைலில் திருநாலூர்மாயனமும் [168] இருக்கின்றன. திருநாலூரிலிருந்து வடமேற்கு 1-மைல் தூரத்தில் திருச்சேறை [140] யிருக்கின்றது.

திகழுந்திரு மாலொடு நான்முகனும்
புகழும்பெரு மானடி யார்புகல
மகிழும்பெரு மான்குட வாயின்மன்னி
நிகழும்பெருங் கோயினி லாயவனே.

## 99. குரக்குக்கா:

திருக்கருப்பறியலூருக்கு வடக்கு 1-மைல் தூரம். கருப்பறிய லூருக்குச் [74] சொல்லியிருக்கும் வழியைப்பார்க்க.

ஹநுமார் பூசித்த ஸ்தலம்.

மேலை வானவ ரோடு விரிகடல்
மாலு நான்முக னொடு மளப்பொணுக்
கோல மாளிகைக் கோயில் குரக்குக்காப்
பால ராய்த்திரி வார்க்கில்லை பாவமே.

## 100. குரங்கணின்முட்டம்:

காஞ்சிபுரம் ஸ்ரீ ஏகாம்பரேசுரர் ஆலயத்தினின்று தெற்கே 6–மைல் தூரத்திற் பாலாற்றின் தென்கரையில் இருக்கிறது. குரங்கு (வாலி), அணில், முட்டம் (காக்கை) இவைகள் பூசித்த ஸ்தலம்.

இறையார்வளை யாளையோர் பாகத்த டக்கிக்
கறையார்மிடற் றான்கரி கீறிய கையான்
குறையார்மதி சூடிகு ரங்கணின் முட்டத்
துறைவானெனமை யாளுடை யொண்சுட ரானே.

## 101. வடகுரங்காடுதுறை:

கும்பகோணத்துக்குத் தெற்கு 13½-மைல் தூரத்திலுள்ள ஐயம்பேட்டை ஸ்டேஷனில் இறங்கி அங்கிருந்து ¾-மைல் தூரத்திலுள்ள திருச்சக்கரப்பள்ளியைச் [127] சேர்ந்து, அங்கிருந்து வடக்கே 3–மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். வடகுரங்காடுதுறைக்கு மேற்கு 3-மைல் தூரத்தில் திருப்பழனம் [187] இருக்கிறது.

வாலி பூசித்த ஸ்தலம்*.

* நீலமா மணிநிறத் தரக்கனை யிருபது கரத்தொடொல்க
வாலினாற் கட்டிய வாலியார் வழிபட மன்னுகோயி
லேலமோ டிலையில வங்கமே யிஞ்சியே மஞ்சளுந்தி
யாலியா வருபுனல் வடகரை யடைகுரங் காடுதுறையே.

## 102. திருத்தென்குரங்காடுதுறை என்பது ஆடுதுறை.

ரெயில்ஸ்டேஷன்; திருவிடைமருதூருக்குக் [34] கிழக்கு 2½-மைல். சுக்கிரீவன் பூசித்த ஸ்தலம். இவ்வூரில் வாழை விசேஷம்.

குனிர்பு னற்குரங் காடு துறையனைத்
தளிர்நி றத்தையல் பங்கனைத் தண்மதி
ஒளிய னைக்கினைந் தேனுக்கெ னுள்ளமும்
தெளிவி னைத்தெளி யத்தெளிந் திட்டதே.

## 103. திருக்குருகாவூர்:

இஃது இப்போது 'திருக்கடாவூர்' என்று வழங்கி வருகிறது. சீகாழிக்குக்[88]கிழக்கு 4-மைல் தூரம். செம்மையான பாதை யில்லை.

சீகாழியிலிருந்து வந்த சுந்தரமூர்த்தி நாயனருக்கும் அவருடன் வந்த பரிசனங்களுக்கும் சிவபெருமான் கட்டமுதுந் தண்ணீருங் கொடுத்தருளிய ஸ்தலம்*.

* பாடுவோர் பசிதீர்ப்பாய் பரவுவார் பிணிகளைவா
யோடுநன் கலனாக வுண்பலிக் குழல்வானே
காடுநல் லிடமாகக் கடுவிருள் நடமாடும்
வேடனே தருகாவூர் வெள்ளடை நீயன்றே.

## 104. திருக்குறுக்கை:

மாயூரத்துக்கு வடக்கு $4\frac{1}{2}$-மைல் தூரத்திலுள்ள ஆநந்ததாண்டவபுரம் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கே 1-மைல் தூரத்திலுள்ள திருநீடூர் [171] என்ற ஸ்தலத்தையும், அங்கிருந்து மேற்கே 3-மைல் தூரமுள்ள திருஅன்னியூர் [17] என்ற பொன்னூரையுங் கடந்து, அங்கிருந்து வடமேற்கே 4-மைல் தூரஞ்சென்றால் திருக்குறுக்கையை அடையலாம். இதற்குத் தெற்கு 3-மைல்தூரத்தில் திருமணஞ்சேரி [222] இருக்கிறது.

அஷ்ட வீரட்டங்களில் ஒன்று. காமனை யெரித்த ஸ்தலம். வேதாரணிய புராணம் சபைச்சருக்கத்திற் சொல்லப்பட்ட சபைகளுள் இத்தலத்துச் சபை 'காமாங்கநாசனிசபை' அல்லது சம்பு விநோதசபை, என்று கூறப்பட்டுளது.

ஆத்தமா மயனு மாலு மன்றிமற் றொழிந்த தேவர்
சோத்தமெம் பெருமா னென்று தொழுதுதோத் திரங்கள்சொல்லத்
தீர்த்தமா மட்ட மிமுன் சிருடை யேழு நாளுங்
கூத்தராய் வீதி போந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே.

## 105. திருக்குற்றாலம்:

இது குறும்பலா என்றுஞ் சொல்லப்படுகிறது. குறும்பலா விருக்ஷம் இங்கு இருத்தலால் இந்த ஸ்தலத்துக்குக் குறும்பலா என்னும் பெயரெய்தியது. தென்காசி ரெயில்ஸ்டேஷனி லிருந்து மேற்கே $3\frac{1}{4}$-மைல் தூரம். திருநெல்வேலிக்கு [179] வடமேற்கு 22-மைல். நல்லபாதை.

விஷ்ணுரூபமாயிருந்த மூர்த்தி அகஸ்தியமுநிவராற் சிவலிங்க ரூபமாகிய ஸ்தலம். பஞ்சசபைகளில் ஒன்றாகிய சித்திரசபையை யுடையது. இத்தலத்துத் தேவியார் திருநாமம் 'குழல்வாய்மொழி மங்கை' என்பதை ஸ்ரீமந்-மாணிக்கவாசகசுவாமிகள் திருக்கோவையார் 94-ஆவது செய்யுளிற் கூறலாலுமுணர்க.

பச்சம் வாழைப் பாய்கனி யோடு பலவின்றேன்
கொக்கின் கோட்டுப் பைங்கனி தூங்குந் துற்றலம்
அக்கும் பாம்பு மாலையும் பூண்டோ ரனலேந்தி
நக்கன் மேய நன்னகர் போலு நமரங்காள்.

## 106. கூடலையாற்றூர்:

இது திருமணிமுத்த நதியும் வெள்ளாறும் கூடுமிடத்தில் இருக்கிறது. விருத்தாசலத்தி [237] லிருந்து கிழக்கே புவனகிரிக்குப் போகும்பாதையில் 12-மைல் தூரஞ்சென்று வளையமாதேவியென்னும் ஊரைச்சேர்ந்து, அங்கிருந்து தெற்கே 2-மைல் தூரஞ்சென்று மேற்சொன்ன இரண்டு ஆறுகளும் ஒன்றாய்ச் சேர்ந்துசெல்லுமிடத்து அவற்றைக் கடந்தால் இந்த க்ஷேத்திரத்தை அடையலாம்.

இதற்குத் தென்மேற்கு 4-மைல் தூரத்தில் ஸ்ரீமுஷ்ணம் என்னும் பிரபலமான விஷ்ணுஸ்தலம் இருக்கிறது. ஸ்ரீமுஷ்ணம் சிதம்பரம் ரெயில்ஸ்டேஷனிலிருந்து 24-மைல் தூரம். நல்ல வழி.

சுந்தரமூர்த்திநாயனர் தெற்கே யிருந்து விருத்தாசலத்துக்குப் போகும்போது ஸ்வாமி பிராமணவடிவமாய் அவர்முன் தோன்றி 'இந்தக் கூடலையாற்றூர் வழியாகத்தான் விருத்தாசலத்துக்குப் போக வேண்டியது' என்றுசொல்லி அவரை அழைத்துவந்து பதிகம் பெற்றருளிய ஸ்தலம்.

வடிவுடை மழு வேந்தி மதகரி யுரி போர்த்துப்
பொடியணி திரு மேனிப் புரிகுழ லுமை யோடுங்
கொடியணி நெடு மாடக் கூடலை யாற்றூரி
லடிகளிவ் வழி போந்த வதிசய மறி யேனே.

## 107. திருக்கேதாரம்:

இமயமலைச்சாரலி லுள்ளது. இதற்கு மார்க்கந் தெளிவாகத் தெரியவில்லை.

இங்கு ஆறு மாதம் தேவர்களாலும், ஆறு மாதம் மானுடர்களாலும் பூஜிக்கப்படும் ஸ்தலம். பிருங்கிருஷிக்காகப் பார்வதி தேவியார் பரமசிவனைப் பூஜித்து வாமபாகம் பெற்ற ஸ்தலம்.

"தன்னை நீக்கியே சூழ்வுறுந் தவமுடைப் பிருங்கி
முன்னி நாடிய மறைகளின் முடிவினை யுணரா
அன்னை யாளுடை யானிடஞ் சேர்வனென் றிமயக்
கன்னி பூசனை செய்தகே தாரமுன் கண்டான்".—[கந்தபுராணம்]

கோம்பைப்பிடித் தொருக்காலர்க ளிருக்கான்மலர் தூவி
நம்பனமை யாள்வானென்று நமோநாளையும் பகலுங்
கம்பக்களிற் றினமாய்நின்று சுனைநீர்களைத் தூவிச்
செம்பொற்பொடிச் சிந்தூர்திருக் கேதாரமெ னீரே.

## 108. திருக்கேதீச்சுரம்:

இஃது இலங்கைத்தீவில் உள்ளது; சரியான பாதை தெரிய வில்லை.

பிருகுமுநிவர் முதலியோர் பூசித்த ஸ்தலம். மாலியவான் என்னும் அசுரன் பூசித்துப் பேறுபெற்ற ஸ்தலம்.

மூவனென விருவனென முக்கண்ணுடை மூர்த்தி
மாவின்கனி தூங்கும்பொழின் மாதோட்டநன் னகரிற்
பாவம்வினை யறுப்பார்பயில் பாலாவியின் கரைமேற்
தேவனெனை யாள்வான்திருக் கேதீச்சரத் தானே.

## 109. கைச்சினம்:

திருவாரூருக்குத் தெற்கேயுள்ள திருநெல்லிக்கா [175] என்னும் ரெயில் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 2-மைல் தூரம். திருத்துறைப் பூண்டிக்கு வடக்கு $6\frac{1}{2}$-மைல் தூரம். கைச்சினத்துக்கு வடக்கு 3-மைல் தூரத்தில் திருக்காறாயில் [90] இருக்கின்றது.

திருணபிந்து முநிவர் பூசித்த ஸ்தலம். தேவேந்திரன் பூசை செய்த திருநகர்; மணலினால் இலிங்கம் ஸ்தாபித்துப் பூஜை செய்து பின்பு அதைக்கையினாலெடுத்து அப்புறம் வைக்கும்போது இந்திரனு டையகைச்சின்னம், அஃதாவது கைக்குறி, அதனிற் பொருந்தியது; அக்காரணத்தாற் சுவாமிக்குக் கைச்சின்னநாத ரென்றும், ஸ்தலத் துக்குக் கைச்சின்னம் என்றும் பெயர்வந்தது. கைச்சின்னம் என்பது கைச்சினம் என்றாயிற்று. விரல்கள் பட்டகுறி ஸ்வாமி மேல் இருக்கிறது. தக்ஷிணாமூர்த்தி விக்கிரகம் மெத்த நன்றா யமைந் திருக்கிறது. இந்திர தீர்த்தம் என்றும் வஜ்ர தீர்த்தம் என்றும் 2-குளங்கள் கோயிலுக்கு வடக்கிலும் தெற்கிலும் இருக்கின்றன. ஸ்தல விருக்ஷம் கோங்கிலவமரம்-அம்மரங்கள் 4, 5 கோயிலி லிருக்கின்றன. அந்த மரங்கள் பக்கத்தில் கர்ணிகாவனேசுரர் (கோங்கிலவு வன நாதேசுரர், என்னும் ஒரு இலிங்கம் இருக்கிறது. உற்சவ மூர்த்தி-தியாகராஜ சுவாமி - அந்த மூர்த்தமாகத்தான் இந்திரனுக்குக் காக்ஷி கொடுத்ததாம்.

விடமல்கு கண்டத்தான் வெள்ளையோர் கூறுடையான்
படமல்கு பாம்பரையான் பற்றாதார் புரமெரித்தா
னடமல்கு மாடவிரு ளன்மறையோர் பாடலினன்
கடமல்கு மாவுரியா னுறைகோயில் கைச்சினமே.

## 110. கொடிமாடச்செங்குன்றூர் என்பது திருச்செங்கோடு.

ஈரோட்டிலிருந்து ரெயில்மார்க்கமாக வடக்கே சங்கரிதுர்க்கம் வரையில் (12½-மைல்தூரம்) சென்று, அங்கிறங்கி வடமேற்காக 6-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தைஅடையலாம். நல்லபாதை. ஆலயம் மலைமேலிருக்கிறது. வழியிற் பல மண்டபங்களும் சுனைகளு முண்டு. மலையடிவாரத்தில் ஆறுமுக ஸ்வாமி தேவிமாருடன் கோயில் கொண்டிருக்கிறார். மலைமேலுள்ள ஸ்ரீ-சுப்பிரமணியசுவாமி சந்நிதி பிரத்தியேகமாயும் பெரிதாயுமிருக்கிறது. ஸ்வாமி தனியே இருக்கிறார். திருக்கையில் வேலுண்டு. வெண்ணிறமுடையவர். ஆதி கேசவப் பெருமாள் சந்நிதி ஒன்று ஆலயத்தில் இருக்கிறது.

மலைமேலிருந்து பார்த்தாற் காவிரியாறு தெரிகிறது. மலை சிவந்த நிறமாயிருப்பதால் திருச்செங்கோடு என்று பெயர். இம் மலைக்கு நாககிரி என்றும் பெயர். மேலை வீதியிலிருந்து பார்த்தால் மலை நாகம்போல இருக்கிறது. அர்த்தநாரீசுரர் சந்நிதி மேற்குப் பார்த்தது. அவர் பாதத்தில் ஓரூற்று இருக்கிறது.

விறன்மிண்டநாயனாருடைய ஜன்ம ஸ்தலம். முருகக்கடவுளுக்கு மிக முக்கியமான குன்றுதோறாடல்களிலும் ஒன்று. திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் இங்கெழுந்தருளி யிருந்தபோது பனிக் காலம்வர அந்தக்காலத்தில் உண்டாகும் குளிர்ச்சுரத்தினால் அடியார் களும் அவ்வூரார்களும் வருத்தமுறுவதைக் கண்டு, நாயனார் "அவ் வினைக்கிவ்வினை'' என்னுந் திருநீலகண்டப்பதிகம் ஓதி, அந்தளிர்ச் சுரம் அந்நாட்டையே விட்டகலும்படி செய்தருளிய ஸ்தலம்.

வெந்தவெண் ணீற ணிந்து விரி நூறிகழ் மார்பி னல்ல
பந்தண வும்விரலா ளொரு பாக மமர்ந்தருளிக்
கொந்தண வும்பொ ழில்சூழ் கொடி மாடச்செங் குன்றூர்நின்ற
வந்தண னைத்தொழுவா ரவல மறுப பாரே.

## 111. திருக்கொடுங்குன்றம் என்பது பிரான்மலை.

மதுரைக்கு வடகிழக்கு 42-மைல் தூரம். நல்ல பாதை. இதற்குத் தென்கிழக்கு 15-மைல் தூரத்தில் திருப்புத்தூர் என்னும் ஸ்தலம் இருக்கிறது. திருப்புத்தூருக்குச் [205] சொல்லி யிருக்கும் வழியைப்பார்க்க.

மகோதராருஷி, நாகராஜன் முதலியோர் பூசித்த ஸ்தலம். பாடல் பெற்றஸ்தலம் அடிவாரத்திலிருக்கிறது. மலைமேல் ஏறிச்சென்றால் வைரவர் சந்நிதியும், சிவ சந்நிதி ஒன்றும் இருக்கின்றன. அந்த சந்நிதியில் சுவாமி கலியாண கோலமாய் இருக்கின்றார். தேவசபை என்றொரு மண்டபம் இருக்கின்றது. இத்தலத்துச் சுப்பிரமணிய சுவாமி சந்நிதியும் விசேஷம்; திருப்புகழ்ப்பெற்றது; பெரிய உருவம்.

வானிற்பொலி வெய்தும்மழை மேகங்கிழித் தோடிக்
கூனற்பிறை சேருங்குளிர் சாரற்கொடுங் குன்றம்
ஆனிற்பொலி வைந்தும்மமர்ந் தாடி யுலகேத்தத்
தேனிற்பொலி மொழியாளொடு மேயான் திரு நகரே.

## 112. கோட்டையூர்:

கும்பகோணத்துக்கு மேற்கே 2-மைல். கும்பகோணத்திலிருந்து சுவாமிமலைக்குப் போகும் பாதையிலிருக்கிறது. கொட்டையூரிலிருந்து மேற்கே 2-மைல் தூரஞ் சென்றால் சுவாமிமலையை அடையலாம்.

மார்க்கண்டேயர் முதலியோர் பூசித்த ஸ்தலம். கோயில் கீழைக் கொட்டையூரிலிருக்கிறது. விநாயகர்-கோடி விநாயகர். கோடி தீர்த்தம் என்ற கிணறு ஒன்றிருக்கின்றது. திருவலஞ் சுழியில் காவிரியிலிறங்கின ஏரண்ட முனிவர் இங்கு வெளியே வந்ததாகச் சொல்லுகிறார்கள். அவருடைய திருவுருவமும் கோயிலி லிருக்கிறது. அப்பர் சுவாமிகள் இத்தலத்துடன் வலஞ்சுழியையும் சேர்த்துப் பாடியிருக்கிறார். ஊரே முன்பு ஆமணக்கங் காடாக இருந்ததாம். சுவாமி ஆமணக்குக் கொட்டைச் செடியின் கீழிருந்து தோன்றினமையின் ஊருக்குக் கொட்டையூர் என்ற பெயரும், சோழமகாராஜனுக்கு ஒருருவிற் கோடிலிங்கமாகத் தரிசனங்கொடுத்தமையால் ஆலயத்துக்குக் கோடீச்சுரம் என்ற பெயரும் போந்தன. இலிங்கத்திற் பலாக்காய்க்கு மேலிருப்பதுபோலச் சிறிய உருவங்கள் இருக்கின்றன.

துளங்கிளருந் தாமரையா தனத்தான் கண்டாய்
தசரதன்றன் மகனசைவு தவிர்த்தான் கண்டாய்
இளம்பிறையு முதிர்சடைமேல் வைத்தான் கண்டாய்
எட்டெட் டிருங்கலையும் ஆனான் கண்டாய்
வளங்கிளர்நீர்ப் பொன்னிவலஞ் சுழியான் கண்டாய்
மாமுனிக டொழுதெழுபொற் கழலான் கண்டாய்
குளங்கிளர்செங் குவளைகிளர் கொட்டை யூரிற்
கோடீச் சுரத்துறையுங் கோமான் றானே.

## 113. திருக்கோண்டீச்சரம்:

நன்னிலம் ரெயில்ஸ்டேஷனுக்கு மேற்கு 1½-மைல் தூரம். இது வில்வாரணிய க்ஷேத்திரம், காமதேனு பூசித்த ஸ்தலம்.

கோயில் சிறிது. கோயிலைச் சுற்றிலும் மாலை போட்டாற்போல அகழி இருக்கிறது. அதற்கு க்ஷீர புஷ்கரணி தீர்த்தம் என்று பெயர். ஒரு காரணத்தால் அம்மை பசுவாகி சுவாமியைத் தேடிக்கொண்டு இவ் வில்வ வனத்தில் வந்து கொம்பினால் உழுது கொண்டு வருகையில் சுவாமியின் சிரசில் கொம்புபட்டு இரத்தம் வர தன் பாலையே விட்டுக் காயத்தை ஆற்றி பின்பு வழிபட்டதாகச் சொல்லுகிறார்கள். இலிங்கத்தின் சிரசில் அந்த வடு கீற்றாயிருக்கிறது; உருவம் சிறிது.

இதற்கு மேற்கு 1½-மைல் தூரத்தில் நன்னிலம் [163] இருக்கிறது.

> நாறு சாந்தணி நன்முலை மென்மொழி
> மாறி லாமலை மங்கையோர் பாகமாக்
> கூற னுறை கோண்டீச்சு ரத்தினைத்
> தூறு வார்தமக் கூனமொன் றில்லையே.

## 114. திருக்கொள்ளம்பூதூர்:

திருவாரூருக்கு மேற்கே 15-மைல் தூரத்திலுள்ள நீடாமங்கலம் ஸ்டேஷனிலிறங்கி வடகிழக்காய் 6-மைல் தூரஞ் சென்று வெட்டாறு என்னும் சிறு நதியைக் கடந்தால் அக்கரையில் இந்தத் தல மிருக்கிறது.

திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் இங்கே வரும்போது ஆறு மிகப் பெருகினதால் ஓடக்காரர்கள் ஓடத்தைக் கரையிலே நிறுத்தி விட்டுப் போயிருந்ததைக் கண்டு, தாமும் தம்முடன் வந்த அடியார்களுமாக ஓடத்தில் ஏறி, ஆற்றுக்கெதிரிலே தோன்றிய இந்தத் திருப்பதியின்மேலே "கொட்டமே கமழும் கொள்ளம்பூதூர்" என்னுந் திருப்பதிகம் பாடவும், பரமசிவனுடைய திருவருளால் ஓடஞ் சென்று அக்கரையை யடைய, நாயனார் அடியார்களுடன் இறங்கிச் சென்று தரிசனஞ் செய்த ஸ்தலம்*. இந்த ஐதிஹ்யம் ஐப்பசிமீ அமாவாசையில் நடத்தப்பட்டு வருகின்றது.

> * ஓடம்வந் தணையுங் கொள்ளம் பூதூர்
> ஆடல் பேணிய அடிகளை யுள்கச்
> செல்ல வுந்துக சிந்தை யார்தொழ
> நல்கு மாறரு ணம்பனே.

## 115. திருக்கோள்ளிக்காடு:

திருவாரூருக்குத் தெற்கே 12-மைல் தூரத்திலுள்ள ஆலத்தம்பாடி ஸ்டேஷனி லிறங்கி மேற்கே $3\frac{1}{2}$-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். அக்கினி பூசித்த ஸ்தலம். சுவாமியும் அம்மனும் மிகவும் சிறு உருவங்களாயிருக்கின்றன. திருநள்ளாற்றிலிருப்பதுபோல சனிபகவான் சந்நிதியும் விசேஷமா யிருக்கிறது. மேற்குப்பார்த்த சந்நிதி. இத்தலத்திற்கு வடகிழக்கு $1\frac{3}{4}$-மைலில் திருத்தெங்கூர் [152] இருக்கிறது.

பஞ்சுதோய் மெல்லடிப் பாவை யாளொடு
மஞ்சுதோய் கயிலையுண் மகிழ்வர் நாடொறும்
வெஞ்சின மருப்பொடு விரைய வந்தடை
குஞ்சர முரித்தனர் கோள்ளிக்காடரே.

## 116. கோகர்ணம்:

பொம்பாய் ராஜதானியில் வடகன்னடம் ஜில்லாவில் உள்ளது. மேல்கரையில் மார்மகோவாவில் கப்பலேறிக் கார்வார், அங்கோலா என்னும் ஊர்கள் வழியாகத் தெற்கே சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

இராவணன் இலங்கையில் ஸ்தாபிக்கும்படி சிவபெருமானிடம் பெற்றுக்கொண்டுவந்த சிவலிங்கத்தை, தேவர்கள் வேண்டுகோளின் பேரில் விநாயகமூர்த்தி பெற்றுப் பிரதிஷ்டை செய்த ஸ்தலம். அச்சிவலிங்கத்தை இராவணன் தன் பலங்கொண்டமட்டும் எடுக்க முயன்றும் முடியாமையால் "இது மாபல லிங்கம்" என்று சொன்னான். அக்காரணத்தால் சிவலிங்கப்பெருமானுக்கு "மாபலலிங்கேசுரர்" என்னும் பெயர் எய்தியது. சிவலிங்கம் பசுவின் காதுபோற் குழைந்து நீண்டபடியால் இந்த ஸ்தலத்துக்குக் கோ கர்ணம் (பசுவின் காது) என்னும் பெயர் உண்டாயிற்று.

கையாற் கயிலை யெடுத்தான் றன்னைக்
கால்விரலாற் றேனெரிய வூன்றினான் காண்
மெய்யி னரம்பிசையாற் கேட்பித் தாற்கு
மீண்டேயவற்கருள்கள் நல்கினான்காண்
பொய்யர் மனத்துப் புறம் பாவான் காண்
போர்ப்படையான் காண்பொருவா ரில்லாதான்காண்
மைகொண் மணிமிடற்று வார்சடையான் காண்
மாகடல்சூழ் கோகரண மன்னினானே.

## 117. கோடி என்பது குழகர் கோயில்.

வேதாரணியத்துக்குத் [229] தெற்கு 6-மைல் தூரம். வழியில் அகத்தியான்பள்ளி [1] யிருக்கிறது. சாதாரணமான பாதை. குழகர் கோயிலுக்குத் தெற்கு 1-மைல் தூரத்திற் கோடிக்கரை என்னும் கடற்றுறைப் பட்டண மிருக்கிறது. அமுத தீர்த்தம் என்கிற கிணறு பிராகாரத்திலிருக்கிறது. சுப்பிரமணிய சுவாமி அதிக சுந்தரமாயிருக்கிறார். ஆறுமுகம் உள்ளவர் போலத் தோன்றுகிறார். ஆனால் ஒரே முகந்தான் இருக்கிறது. ஆறு கரம் இருக்கிறது. என்ன காரணமோ தெரியவில்லை.

மையார் தடங் கண்ணிபங் காகங்கை யாளு
மெய் யாகத்தி ருந்தனள் வேறிடமில்லை
கையார் வளைக் காடுகா ளொடுமுடனாய்க்
கொய்யார் பொழிற் கோடியே கோயில் கொண்டாயே.

## 118. திருக்கோடிகா:

திருவிடைமருதூருக்குக் [34] கிழக்கு $1\frac{1}{2}$-மைல் தூரம். இடையிற் காவிரியாற்றைக் கடக்க வேண்டும்.

மூன்றுகோடி ருஷிகள் பூசித்த ஸ்தலம். சிருங்க தீர்த்தம் என்னுந் திருக்குளம் கோயிலுக்கு வடக்கி லிருக்கிறது.

கடிகமழ் கொன்றை யானே கபாலங்கை யேந்தினானே
வடிவுடை மங்கை தன்னை மார்பிலோர் பாகத் தானே
யடிபிணை பரவ நாளும் அடியவர்க் கருள்செய்வானே
கொடியணி விழவ தோவாக் கோடிகா வுடைய கோவே.

## 119. திருக்சோட்டாறு:

திருநள்ளாறு [160] ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 3-மைல். வெள்ளையானை பூசித்த ஸ்தலம்*.

* நின்று மேய்ந்து நினைந்து மாகரி நீரொடும்மலர் வேண்டி வான்மழை
குன்றி னோர்ந்து குத்திப் பணிசெய்யுங் கோட்டாற்றுள்
என்று மன்னிய எம்பிரான் கழ லேத்திவானா சாளவல்லவர்
பொன்று மாறறியார் புகழார்ந்த புண்ணியரே.

## 120. கோட்டூர்:

நீடாமங்கலம் ரெயில் ஸ்டேஷனுக்கு 8-மைல் தூரத்திலுள்ள ராஜ மன்னார்கோயிலுக்குத் தெற்கு 10-மைல்.

தேவர்களும் குச்சராருஷியும் பூசித்த ஸ்தலம். மேற்குப் பார்த்த சந்நிதி. சமீபத்தில் திருக்குளமிருக்கிறது. தேவியார் சந்நிதி கிழக்குப்பார்த்தது.

நீலமார்தருகண்டனே நெற்றியோர்கண்ணனே யொற்றைவிடைச்
சூலமார்தருகையனே துன்றுபைம்பொழில்கள் சூழ்ந்தழகாய
கோலமாமலர்மணங்கமழ் கோட்டூர் நற்கொழுந்தே யென்றெழுவார்கள்
சாலநீள்தலத்திடைப் புகழ்மிகத் தாங்குவர் பாங்காலே.

## 121. திருக்கோணமலை:

இஃது இலங்கைத் தீவில் உள்ளது. தேவேந்திரன் முதலியோர் பூசித்த ஸ்தலம். இந்த ஸ்தலத்துக்கும் 'தக்ஷிணகைலாசம்' என்னும் பெயர் உண்டு.

நிரைகழ லரவஞ் சிலம்பொலி யலம்பு நிமலர்நீ றணிதிரு மேனி
வரைகெழுமகளோர் பாகமாப் புணர்ந்த வடிவினர் கொடியணிவிடையர்
கரைகெழு சந்துங் காரகிற் பிளவு மளப்பருங் கனமணி வரன்றிக்
குரைகட லோத நித்திலங் கொழிக்குங் கோணமா மலையமர்ந் தாரே.

## 122. கோயில் என்பது சிதம்பரம்.

ரெயில் ஸ்டேஷன். பூலோக கயிலாயம் என்று சொல்லப்படும் மகாக்ஷேத்திரம். தரிசிக்க முத்தியளிக்கும் ஸ்தலம். பதஞ்சலி வியாக்கிரபாதர் என்னும் இருடிகளுக்காகச் சபாநாயகர் பஞ்ச சபைகளில் ஒன்றாகிய கனகசபையிலே எக்காலமும் ஆநந்ததாண்டவஞ்செய்தருளும் பதி. "தில்லைவா ழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" என்று சபாநாயகராலேயே புகழப்பட்ட பெரும் பாக்கியத்தை யுடையவர்களாகிய தில்லை மூவாயிரவர் பூசிக்குந் திவ்யக்ஷேத்திரம்.

ஸ்ரீமந்–மாணிக்கவாசகஸ்வாமிகள், திருநீலகண்ட நாயனார், திருநாளைப்போவார் நாயனார், கூற்றுவ நாயனார், கோச்செங்கட்சோழ நாயனார், கணம்புல்ல நாயனார், மறைஞானசம்பந்த சிவசாரியார், உமாபதி சிவாசாரியார் முதலிய எண்ணிறந்த அடியார்கள் முத்திபெற்ற தெய்விக ஸ்தலம். மணிவாசகப் பெருமான் 'திருச்சிற்றம்பலக் கோவையார்' பாடி யருளின பழம்பதி. சேரமான் பெருமாணாயனார் 'பொன் வண்ணத்தந்தாதி' பாடின திருப்பதி. சபாநாதருடைய திருவடிகளே நமக்குப் பெருந்துணை' என்று நம்பிப் பூசித்து வந்த அச்சேரமான் பெருமா ணாயனாருக்கு அவர் பூஜை முடிவிலே சபா நாயகர் தம்முடைய திருச்சிலம்பொலி கேட்கும்படி செய்து வந்த திருநகர். திருக்கோவலூரி லிருந்த மெய்ப்பொருணாயனார் தாம் உயிர்விடுங் காலத்திற் சபா நாயகரைத் தியானம்பண்ண, சபாநாயகர் அவருக்குத் தோன்றி முத்தி யருளிய முதுநகர்.

அபயகுலசேகர சோழ மகாராஜாவின் காலத்திலே நம்பியாண்டார் நம்பியால் தேவாரப்பதிகங்கள் கண்டெடுக்கப்பட்ட ஸ்தானம். அநபாய சோழ மகாராஜாவின் காலத்திலே சேக்கிழார்நாயனார் பெரிய புராணம் பாடி யரங்கேற்றிய அரும்பதி.

மற்ற எல்லா க்ஷேத்திரங்களிலுமுள்ள சிவகலைகள் அனைத்தும் அர்த்தஜாமத்தில் தன்னிடத்தில் வந்து சேரப் பெற்ற ஒப்புயர் வில்லாத க்ஷேத்திரம். இன்னும் சொல்லுதற்கரிய அநேக மகிமைகள் பொருந்திய இணையில்லாத மஹாக்ஷேத்திரம்

நீலத்தார் கரியமிடற்றார் நல்ல நெற்றிமே லுற்ற கண்ணினார் பற்று
சூலத்தார் சுடலைப்பொடி நீறணிவார் சடையார்
சீலத்தார் தொழுதேத்து சிற்றம்பலத்சேர்தலாற்கழற்சேவடிகைதொழக்
கோலத்தா யருளாயுன காரணங் கூறுதுமே.

## 123. திருக்கோலக்கா என்பது திருத்தாளமுடையார் கோயில்.

சீகாழி ரெயில் ஸ்டேஷனுக்குத் தெற்கு ½-மைல் தூரத்திலும், சீகாழி கோயிலுக்கு மேற்கு ¼-மைல் தூரத்திலும், உள்ளது. சீகாழிக்கும் கோலக்காவுக்கும் இடையிற் "கழுமல வாய்க்கால்" ஓடுகின்றது.

திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் பொற்றாளம் பெற்ற ஸ்தலம்*.

*நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பு ஞான சம்பந்த னுக்குல கவர்முன் றாள மீந்தவன் பாடலுக் கிரங்குந் தன்மை யாளனை யென்மனக் கருத்தை யாளும் பூதங்கள் பாடநின் றாடு மங்க ணன்றனை யெண்கணா மிறைஞ்சுங் கோளிலிப்பெருங்கோயிலுள்ளானைக் கோலக்காவினிற்கண்டுகொண்டேனே.

## 124. திருக்கோவலூர் :

ரெயில்ஸ்டேஷன். பெண்ணையாற்றின் தென்கரையிலுள்ளது. இதற்கெதிரில் வடகரையில், அறையணிநல்லூர் [14] இருக்கிறது. ரெயில்ஸ்டேஷன் அறையணிநல்லூரி லிருக்கிறது. அங்கிறங்கி ஆற்றைக்கடந்து தெற்கேசென்றால் இந்தத் தலத்தை அடையலாம் ரெயில் ஸ்டேஷனுக்கும் இதற்கும் ½-மைல் தூரம் இருக்கும். சந்நிதி மேற்குப் பார்த்தது. அஷ்டவீரட்டத்தில் ஒன்று. அந்தகாசுரனைச் சங்கரித்தருளிய ஸ்தலம். மெய்ப்பொருள் நாயனாருடைய திருப்பதி.

திருக்கோவலூர் 'மேலூர்' என்றும், 'கீழூர்' என்றும் இரண்டு பாகமா யிருக்கிறது. சிவாலயம் கீழூரி லுள்ளது. அம்மன் கோயில்

பிரத்தியேகமாயிருக்கிறது. இதற்குத் தென்மேற்கிலுள்ள மேலூரிற் பெருமாள் கோயில் இருக்கிறது.

படைகொள் கூற்றம் வந்துமெய்ப் பாசம் விட்ட போதின்க
ணிடைகொள் வாரெ மக்கிலை யெழுக போது நெஞ்சமே
குடைகொள் வேந்தன் மூதாதை குழகன் கோவ லூர்தனுள்
விடைய தேறுங் கொடியினன் வீரட் டானஞ் சேர்துமே.

## 125. திருக்கோழம்பம்:

மாயூரத்துக்கு மேற்கே 10-மைல் தூரத்திலுள்ள நரசிங்கன் பேட்டை ரெயில் ஸ்டேஷனி லிறங்கி தென் கிழக்காய் 2-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

தேவேந்திரனாற் குயிலாய்ப்போம்படி சாபம் பெற்ற சந்தன் என்னும் வித்தியாதரன், அநேக நாள் கழித்து இங்கு வந்து பூசிப்ப அவ்வுருமாறிப் பழைய ரூபம் பெற்ற ஸ்தலம்.

கயிலை நன்மலை யாளுங் கபாலியை
மயிலி யன்மலை மாதின் மணாளனைக்
குயில்ப யில்பொழிற் கோழம்ப மேபவென்
உயிரி னைநினைந் துள்ள முருகுமே.

## 126. திருக்கோளிலி:

இஃது இப்போது 'திருக்குவளை'யென வழங்கிவருகிறது

நாகபட்டணத்துக்கு [165] மேற்கே 7-மைல் தூரத்திலுள்ள கீழ் வேளூர் [94] ரெயில்ஸ்டேஷனுக்குத்தெற்கு 7-மைல்தூரம். சாதாரண பாதை. திருவாரூருக்குத் [23] தென்கிழக்கு 12-மைல். கைச்சினத்துக்குக் [109] கிழக்கு 4-மைல்.

இது சப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. சுந்தரமூர்த்தி நாயனார் "நீளநினைந்தடியேன்" என்னும் திருப்பதிகம்பாடி இதற்குச் சமீபத்திலுள்ள குண்டையூரிலிருந்த நெல்மலையைத் திருவாரூருக்குப் பூத கணங்களா லெடுப்பித்துக்கொண்டுபோன ஸ்தலம்*. பிரமன் பூசித்த தலம். பெரிய கோயில். பிரம தீர்த்தம் கோயிலுக் கெதிரிலிருக்கிறது. அகத்தியர் பூசித்த லிங்கம் பிராகாரத்திலிருக்கிறது. பீமன் பகாசூரனைச் சம்ஹரித்து அதனாலுண்டான பிரமஹத்தியை இந்தத் தலத்திற் போக்கிக் கொண்டான். பகா சூரனுடைய உருவமும் பிரமஹத்தியின் உருவமும் முன் கோபுரத்தில் இருக்கின்றன.

திருக்கோளிலிக்கு மேற்கு 1-மைல் தூரத்தில் 'எட்டிகுடி' யென்னும் பிரபலமான சுப்பிரமணியசுவாமி க்ஷேத்திர மிருக்கிறது.

* நீளநினைந் தடியே னுமை நித்தலுங் கைதொழுவேன்
வாளன கண்மட வாளவள் வாடிவ ருந்தா மே
கோளிலி யெம்பெ ருமான் குண்டை யூர்ச்சில நெல்லுப் பெற்றேன்
ஆளிலை யெம்பெ ருமா னவை யட்டித்த ரப்ப ணியே.

## 127. திருச்சக்கரப்பள்ளி:

தஞ்சாவூருக்கு வடகிழக்கு 11-மைல் தூரமுள்ள ஐயம் பேட்டை ஸ்டேஷனிலிறங்கி, மேற்கே ½-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இந்திர குமாரனுை சயந்தனும் தேவர்களும் பூசித்த ஸ்தலம். விஷ்ணு பூசித்துச் சக்கரம் பெற்றபடியாற் சக்கரப் பள்ளி எனப்பெயர் வந்ததெனத் தெரிகிறது. "வண் சக்கர மாலுறைப்பா லடிபோற்றக் கொடுத்த பள்ளி",—என்பது தேவாரம்.

நலமலி கொள்கையார் நான்மறைப் பாடலார்
வலமலி மழுவினர் மகிழுமூர் வண்டறை
மலர்மலி சலமொடு வந்திழி காவிரி
சலசல மணிகொழி சக்கரப் பள்ளியே.

## 128. திருச்சத்திமுத்தம்:

கும்பகோணத்துக்குத் தென்மேற்கு 4-மைல் தூரம். பட்டீச் சுரம் [180] இதனுடன் சேர்ந்து இதற்குத் தெற்கிலிருக்கிறது. இரண்டு ஊர்களும் ஒரே ஊர்போல் தோன்றுகின்றன.

பராசத்தி சுவாமியைத் தழுவி முத்தங் கொடுத்த ஸ்தலம். அந்த வுருவமுங் கோயிலி லிருக்கிறது.

"மட்டார் குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும்
சிட்டா திருச்சத்தி முத்தத் துறையுஞ் சிவக்கொழுந்தே"—,

என்பது தேவாரம். "பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை"—, "இம்மையுன் றாளென்றன் நெஞ்சத் தெழுதிவை"—,என அப்பர் சுவாமிகள் வேண்டித் துதித்த ஸ்தலம்†.

†கோவாய் முடுகி யடுதிறற் கூற்றங் குமைப்பதன்முன்
பூவா ரடிச்சுவ டென்மேற் பொறித்துவை போகவிடின்
மூவா முழுப்பழி மூடுங்கண் டாய்முழங் குந்தழற்கைத்
தேவா திருச்சத்தி முத்தத் துறையுஞ் சிவக்கொழுந்தே.

**129. சாத்தமங்கை:**

திருநள்ளாற்றுக்குத் [160] தென்மேற்கு 5-மைல் தூரம்.

சாத்தமங்கைக்குத் தென்மேற்கு 1—மைலில் திருமருகல் [227] இருக்கின்றது.

சாத்தமங்கையிலுள்ள ஆலயத்துக்கு அயவந்தியென்று பெயர். திருநீலநக்கநாயனாருடைய ஸ்தலம்*. இந்நாயனார் சுவாமிதரிசனத்துக்காக மனைவியுடன் ஆலயத்துக்குச் சென்றபோது ஒரு சிலந்திப்பூச்சி சிவலிங்கத்தின் மேல்விழ, மனைவியார் அன்பு மிகுதியினால் அதை வாயால் ஊதி அகற்ற, நாயனார் அப்படிச்செய்தது அநுசிதமென்றெண்ணி மனைவியாரை நிக்கிரகித்துவிட, சிவபெருமான் அவருடைய கனவிற்றோன்றி அவர் மனைவியார் ஊதின இடந்தவிர மற்றையிடம் சிலந்தியின் கொப்புளமாயிருப்பதைக் காட்டி, மனைவியாருடைய அன்பை வெளிப்படுத்தி, அவரை மறுபடி நாயனாருடன் சேர்த்தருளிய ஸ்தலம் 'அடிகள்நக் கன்பரவ அய வந்தி அமர்ந்தவனே'; 'நிறையினார் நீலநக்க னெடு மாநகரென்று தொண்ட, ரறையுமூர் சாத்தமங்கை' —, என்பன தேவாரம்.

*பொடிதனைப் பூசு மார்பிற் புரி நூலொரு பாற்பொ ருந்தக்
கொடியன சாய லாளோ டுட னாவதுங் கூடு வதே
கடிமண மல்கி நாளுங் கம ழும்பொழிற் சாத்த மங்கை
யடிகணக் கன்ப ரவ வய வந்திய மர்ந்த வனே.

**130. திருச்சாய்க்காடு என்பது சாயாவனம்.**

சீகாழிக்குத் தென்கிழக்கு 9-மைல் தூரம். நல்லபாதை. வழியில் 8-ஆவது மைலில் திருவெண்காடு [263] இருக்கிறது.

உபமன்னியருஷி பூசித்த ஸ்தலம். காசிக்குச் சமானமாகச் சொல்லும் 6-க்ஷேத்திரங்களில் திருச்சாய்க்காடு ஒன்று.

நீநாளு நன்னெஞ்சே நினைகண்டா யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளு நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே.

**131. சிக்கல்:**

ரெயில் ஸ்டேஷன்- நாகபட்டணத்துக்கு மேற்கு 3—மைல். சுவாமிசந்நிதி கட்டுமலைமே லிருக்கிறது. தீர்த்தம் க்ஷீரபுஷ்கரணி. மல்லிகைச்செடி விசேஷம். வசிஷ்டர் தம்முடைய காமதேனுவைப்

பெறும்பொருட்டுப் பூசித்த ஸ்தலம். இங்கே சிங்காரவேலவ ராகிய சுப்பிரமணிய சுவாமி திவ்ய சுந்தரமூர்த்தியாய் விளங்குகிறார்; அவர் சந்நிதியுங் கட்டுமலைமேற்றான் இருக்கிறது. சிங்கார வேலருக்கு ஆட்டுக்கடா வாகனம் ஒன்றிருக்கிறது. இது வெகு நன்றா யிருக்கிறது. காமதேனு இங்கிருந்தபடியால் அதன் பால்பெருகி யெங்கும் வெண்ணெயா யுறைந்திருந்தது. வசிஷ்டர் அவ்வெண்ணெயை எடுத்துச் சிவலிங்கமாக்கிப் பூசித்தார். அதனாற் சுவாமிக்கு 'வெண்ணெயிலிங்கேசுரர்' என்று பெயருண்டாயிற்று. அந்த லிங்கத்தை வேறிடத்தில் வைக்க எடுக்கும் பொழுது அது வராமற் சிக்கிக் கொண்ட படியால் ஊருக்குச் சிக்கல் என்னும் பெயர் உண்டாயிற்று. இந்த ஸ்தலத்திற் சூரசம்ஹார உற்சவம் மிகவும் விசேஷம்.

கோயிலுக்குள் வடபக்கத்திற் கோலவாமனப் பெருமாளுடைய சந்நிதி யிருக்கிறது.

நீலநெய் தனில விம்மல ருஞ்சுனை நீடிய
சேலுமா லுங்கழ னிவ்வள மல்கிப சிக்கலுள்
வேலொண்கண்ணியி னாளையோர் பாகன்வெண் ணெய்ப்பிரான்
பாலவண் ணன்கழ லேத்தநம் பாவம்ப றையுமே.

## 132. திரிசிராப்பள்ளி:

ரெயில் ஸ்டேஷன். மூன்று சிரசையுடையவனாகிய 'திரிசிரன்' என்னும் அரக்கன் பூசித்தமையின் இந்த ஸ்தலத்துக்குத் 'திரிசிராப் பள்ளி' என்னும் பெயரெய்தியது. இதுவும் 'தக்ஷிணகைலாசம்' எனப்படும்.

கோயில் மலைமேலிருக்கிறது. சுவாமியிடத்தில் அன்பு மிகுந்திருந்த ஒருமாது, கருப்பமாயிருந்து பிரசவகாலத்திற் காவிரி பெருகினதால் தன் தாய் வந்து உதவப்பெறாமற் சங்கடப்படும் பொழுது, ஸ்வாமி தாமே அவளுடைய தாயைப்போல் வந்து மருத்துவம் பார்த்து ஆதரித்த அருமையான ஸ்தலம். இதனாற் சுவாமிக்குத் தாயும் ஆனவர் என்னும் பெயர் வந்தது.

அதிமதுரமான தமிழ்ப் பாடல்களாற் கடவுளைப் பாடித்துதித்த தாயுமானசுவாமிகள் எழுந்தருளியிருந்த ஸ்தலம்.

மலை உச்சியில் உச்சிப்பிள்ளையார் கோயில் இருக்கிறது. அங்கிருந்து பார்த்தால், திருவானைக்கா, ஸ்ரீரங்கம் ஆகிய தலங்களின் கோபுரங்களும், காவிரியாறும், கொள்ளிடநதியும், திரிசிராப்பள்ளி நகரும் தெரிகின்றன.

தூயு மாயெனக் கேதலை கண்ணுமாய்ப்
பேய னேனையு மாண்ட பெருந்தகை
தேய நாதன் சிராப்பள்ளி மேவிய
நாய னூரென நம்வினை நாசமே.

133. சிவபுரம்:

கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு 3-மைல். நல்லபாதை. விஷ்ணுவராகமாய்ப் பூசித்தஸ்தலம்*; இவ்வைதிஹ்யம் கோயில் மதிற் சுவரிற் காட்டப்பட்டிருக்கிறது. "எயிறத னுதிமிசை, யிதமமர் புவி யது நிறுவிய எழிலரி வழிபட அருள்செய்த, பதமுடை யவனமர் சிவபுரம்",—"பிறை யெயிற்று வெள்ளைப்பன்றி, பிரியாது பலநாளும் வழிபட்டேத்துஞ், சீரவன்காண் சீருடைய தேவர்க்கெல்லாஞ் சிவ னவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன்தானே",—"சேண்பக மலர் பொழிற் சிவபுரமே",—என்பன தேவாரம். கோயிலின்முன் சண்பக விருக்ஷம் ஒன் றிருக்கிறது.

*அன்றடற் காலனைப் பாலனுக்காப்
பொன்றிட வுதைசெய்த புனிதனகர்
வென்றிகொ ளெயிற்றுவெண் பன்றி முன்னாட்
சென்றடி வீழ்தரு சிவபுரமே.

134. சிறுகுடி:

பேரளம் ரெயில் ஸ்டேஷனி லிறங்கி மேற்கே 1-மைல் தூரஞ் சென்று திருமீயச்சூர் [234] என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து மேற்கே பின்னும் 3½-மைல் தூரஞ் சென்று திருப்பாம் புரம் [200] என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து, வயல் வழியே 1-மைல் தூரம் மேற்கே சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

செவ்வாயும், கருடனும், கந்தருவர்களும் பூசித்த ஸ்தலம். கோயில் சிறிது. கோபுரமும் சிறிது.

செருவரை வயலமர் சிறுகுடி மேவிய
இருவரை யசைவுசெய் தீரே
இருவரை யசைவுசெய்தீ ருமையேத்துவார்
அருவினை யொடுதுய ரிலரே.

135. திருச்சிற்றேமம் என்பது சிற்றாம்பூர் அல்லது சிற்றாய்மூர்.

திருத்தருப்பூண்டி ரெயில்ஸ்டேஷனிலிருந்து வடக்கே திருவாரூர் போகிற பாதையில் 5-மைல் தூரஞ்சென்று, ஆலத்தம்பாடி என்னும்

ஊரைச்சேர்ந்து, அங்கே பாதையை விட்டுக் கிழக்கே திரும்பி $2\frac{3}{8}$-மைல் சென்று வடக்கேதிரும்பி அரிச்சந்திர நதியைக் கடந்து $1\frac{1}{8}$-மைல் சென்றால், இந்த ஸ்தலத்தை அடையலாம்.

திருத்தருப்பூண்டிக்கு அடுத்த வடவண்டை ரெயில் ஸ்டேஷனாகிய ஆலத்தம்பாடியி லிறங்கிக் கிழக்கே $1\frac{3}{8}$-மைல் சென்று ஆலத்தம்படி ஊரை யடைந்து பின்னர் மேற்கண்டவழியே போகலாம்.

ஆற்றுக்குப் பாலமில்லை. மழைக்காலத்திற் போவது மெத்த கஷ்டம். விருக்ஷம் ஆத்தி; மிகவும் பழமையா யிருக்கிறது. வேத தீர்த்தம் கோயிலுக்கு மேற்கிலிருக்கிறது. அகஸ்தியரும், தேவேந்திரனும், நாகராஜனும், பிரமாவும், வேதங்களும் பூசித்த ஸ்தலம். சுவாமிக்குப் பொன்வைத்தநாதர், பாலாட்டுகந்தவர், ஆத்திவனநாதர், இந்திரபுரீசுரர், சர்ப்பபுரீசுரர், மதுபுரீசுரர் அல்லது சித்தபுரீசுரர், பிரமபுரீசுரர், வேதபுரீசுரர் என எட்டுத் திருநாமங்கள் உண்டு. வருஷம் ஒன்றுக்கு 1200-ரூபா வரும்படி வருகிறதாம்; கோயில் இடிந்துகிடக்கிறது. அந்தோ பரிதாபம்!

சுவாமி சந்நிதியில் தென்பக்கத்தில் ஒரு தேன்கூடு இருக்கிறது. சித்தர்கள் தேன் ஈக்கள்போல் உருவெடுத்து வந்து பூசித்ததாகச் சொல்லுகிறார்கள். இந்தத் தேன்கூட்டுக்கும் தினம் பூஜைநடக்கிறது. கோயிலுக்கு வடக்கே திருக்குளம் இருக்கிறது. அதற்கு சொர்ணபுஷ்கரணி யென்று பெயர்.

இவ்வூரிலிருந்த வணிகன் ஒருவன், கர்ப்பிணியாயிருந்த தன் மனைவியை யிங்குவிட்டு, வர்த்தகம் செய்யும்பொருட்டு வேறுதேசம் சென்றான். திரும்பிவர 4-5-வருஷமாயிற்று. அவன் மனைவி பிரதி தினமும் கோயிலுக்குச்சென்று சுவாமி தரிசனஞ்செய்து வந்தாள். வயிற்றுக்கில்லாமற் கஷ்டப்படுவதை சுவாமி யறிந்து அவளுக்குச் சொப்பனத்தில் தோன்றி 'உனக்குத் தினம் ஒரு பொன் கோயில் சந்நிதியில் வைப்போம். அதை நீ எடுத்து மாற்றிப் பணமாக்கி அதைக்கொண்டு ஜீவி' என்று சொல்லியருளினார். பொன்னிறை யென்னும் அடுத்த கிராமத்தில் வசித்த வணிகனுக்கும் கனவிற் றோன்றி அம்மாது கொண்டுவரும் பொன்னை யெடுத்துக்கொண்டு அதற்கு உண்டான பணத்தைக் கொடுத்துவரும்படி சொல்லி யருளினார். அவன் அப்படியே பொன்னை நிறுத்துப்பார்த்து சுவாமி சொன்னநிறைப்படி யிருக்கக்கண்டு பணம் கொடுத்து வந்தான்.

அக்காரணத்தாற்றான் அவனிருந்த ஊருக்குப் 'பொன்னிறை' என்னும் பெயர்வந்தது. திருச்சிற்றேமத்திலிருந்து போன வர்த்தகன் திரும்பி வரும்போது அவன் மனைவி பெற்றபிள்ளைக்கு 4-5-வயதாயிற்று. ஊரார் உண்மையை உணராமல் அப்பதிவிரதையின் மேற் சந்தேகப்பட்டு அவள் புருஷனிடம் சொன்னார்கள். அவனுடைய திருப்திக்காக அம்மாதின் பிரார்த்தனைப்படி, கோயிலிற் சந்நிதிக்குப் பின்னிருந்த ஆத்திவிருக்ஷம் கோயிலுக்குமுன்னும், பலிபீடத்துக்கு முன்னிருந்த நந்தி அதற்குப் பின்னுமாக இடம் மாறியிருக்கும்படி சுவாமி செய்தருளினார்.

*கிளருந் திங்கள் வாண்முக மாதர் பாடக் கேடிலா*
*வளருந் திங்கள் சூடியோ நாடன் மேய மாதவன்*
*தளிருங் கொம்பு மதுவுமார் தாமஞ் சூழ்சிற் றேமத்தான்*
*ஒளிரும் வெண்ணூன் மார்பனென் னுள்ளத் துள்ளா னல்லனே.*

## 136. திருச்சுழியல் :

விருதுபட்டி ரெயில் ஸ்டேஷனிலிருந்து 19-மைல் தூரம். வழியில்11-ஆவது மைலில் அருப்புக்கோட்டை என்னும் ஊர் இருக்கிறது.

மதுரைக்குக் கிழக்கு 12-மைலிலுள்ள திருப்பூவணம் என்னும் ரெயில் ஸ்டேஷனிலிருந்து 20-மைல். மானா மதுரை ரெயில் ஸ்டேஷனிலிருந்து 25-மைல். ஆனால் நல்லவழி யில்லை.

சதாநந்த முனிவர் முதலியோர் பூசித்த ஸ்தலம். பார்வதிதேவியார் தம்மைச் சிவபெருமான் மணம்புரியும்படி பூசித்த ஸ்தலம். பெரிய கோயில். கோயில் மதுரை கோயில் மாதிரி இருக்கிறது. நடேசர் விக்கிரகம் சிலாரூபமாயிருக்கிறது. கோயிலுக்குப் பெரிய நந்தவனம் ஒன்றிருக்கிறது. ரோஜா, நந்தியாவர்த்தம், மல்லிகை இவைகள் நிறைந்துள்ளன.

*உற்றானமக் குயரும்மதிச் சடையான்புல னைந்தும்*
*செற்றார்திரு மேனிப்பெரு மானூர்திருச் சுழியல்*
*பெற்றானினி துறையத்திறம் பாமைத்திரு நாமங்*
*கற்றாரவர் கதியுட்செல்வ ரேத்தும்மது கடனே.*

## 137. திருச்செங்காட்டங்குடி:

நன்னிலம் ரெயில் ஸ்டேஷனில் இறங்கி கிழக்கே $3\frac{3}{4}$—மைல் தூரஞ் சென்று, திருப்புகலூரை [203] யடைந்து, அங்கு தெற்கே திரும்பி முடிகொண்டான் என்னும் ஆற்றைக் கடந்து, 1-மைல்

தூரஞ் சென்று திருக்கண்ணபுரத்தை அடைந்து, அங்கிருந்து கிழக்கே 1-மைல் தூரம் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

விநாயகமூர்த்தி கஜமுகாசுரன் என்னும் அவுணனை சம்ஹாரம் செய்தருளிய ஸ்தலம். அவனது இரத்தம்பெருகி சேங்காடாய் இருந்தமைபற்றி இந்தஸ்தலத்துக்குத் திருச்செங்காட்டங்குடி என்னும் பெயருண்டாயிற்று. கஜமுகாசுரனைக் கொன்ற பழிநீங்கும் பொருட்டு விநாயமூர்த்தி பரமசிவனைப் பூசித்த ஸ்தலம். அதனால் இங்குள்ள ஆலயத்துக்குக் கணபதீச்சுரம் என்று பெயர் உண்டாயிற்று.

சிறுத்தொண்டநாயனார் தமது ஒரே பிள்ளையாகிய சீராளன் என்னும் சிறுவனை வைரவவேடம் பூண்டுவந்த பரமசிவனுக்குக் கறியாக்கி அளித்தபின்னர் அவருடைய திருவருளால் அக்குழந்தை உயிர்த்தெழுந்துவந்த ஸ்தலம்.

'பொடிநுகருஞ் சிறுத்தொண்டற் கருள்செய்யும் பொருட்டாகக்
கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச் சுரத்தானே.',—

என்னும் தேவாரமும்,

ஏடவி ழலங்கற் றிண்டோ ளிபமுகத் தவுணன்மார்பி
னீடிய குருதிச் செந்நீர் நீத்தமா யொழுகும் வேலைப்
பாடுற வருங்கா னென்றிற் பாத்தலி னதுவே செய்ய
காடெனப் பெயர்பெற் றின்னுங் காண்டக இருந்த தம்மா.

பீண்டுசெங் காட்டி லோர்சார் மேவிமெய்ஞ் ஞானத் தும்பர்
தாண்டவம் புரியுந் தாதை தன்னுருத் தாபித் தேத்திப்
பூண்டபே ரன்பிற் பூசை புரிந்தனன் புவியு ளோர்க்குக்
கீண்டது மனைய தானங் கணபதீச் சுரம தென்பர்,—

என்னுங் கந்த புராணச் செய்யுள்களும் கவனிக்கற்பாலன.

பழைய திருவாத்தி விருக்ஷம் உற்சவர் சந்நிதிக் கெதிரிலிருக்கிறது. சிறுத்தொண்டர், அவர் பிள்ளை, அவர் மனைவி, சந்தன நங்கை இவர்களது சிலா விக்கிரகங்கள் பிராகாரத்திற் கீழ்ப்பக்கத்தில் உற்சவர் சந்நிதிக் கெதிரில் இருக்கின்றன. கோயிலுக்குத் தெற்கே சூரிய தீர்த்தம்.

கூரார் விரைதேர்ந்து குளமுலவி வயல்வாழுந்
தாராவே மடநாராய் தமியேற்கொன் றுரையீரே
சீராளன் சிறுத்தொண்டன் செங்காட்டங் குடிமேய
பேராளன் பெருமான்றன் அருளொருநாள் பெறலாமே.

## 138. திருச்செம்பொன்பள்ளி :

மாயூரம் ஸ்டேஷனுக்குக் கிழக்கு 6¾-மைல். வழியில் 4-மைல் தூரத்தில் விளநகர்[257]என்னும் க்ஷேத்திரமிருக்கிறது. நல்ல பாதை.

இந்திரனுங் குபேரனும் பூசித்த ஸ்தலம்.

மருவார் குழலி மாதோர் பாகமாய்த்
திருவார் செம்பொன் பள்ளி மேவிய
கருவார் கண்டத் தீசன் கழல்களை
மருவா தவர்மேன் மன்னும் பாவமே.

## 139. திருச்சேய்ஞலூர்:

கும்பகோணம் ஸ்டேஷனி லிறங்கி வடகிழக்கு 9½-மைல் தூரஞ்சென்றால் இந்தத்தலத்தை அடையலாம். சேய்ஞலூருக்கு வடகிழக்கு 1-மைலில் திருவாப்பாடியும் [21], திருவாப்பாடிக்கு வடகிழக்கு 1—மைலில் திருப்பனந்தாளும் [193] இருக்கின்றன.

சேய் (குமாரக்கடவுள்) தாம் உறைதற்கு நல்ல ஊர் என்று உவந்தமை கண்டு தேவர்கள் இத்தலத்திற்குச் சேய்நலூர் எனப் பெயரிட்டனர். குமாரக்கடவுள் சூரசம்ஹாரஞ்செய்ய எழுந்தருளி வந்தபோது சிவபெருமானைப் பூசித்த ஸ்தலம்.

"சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன்"—,என்பது தேவாரம்.

சண்டேசுரநாயனர் திருவவதாரஞ்செய்து முத்திபெற்றஸ்தலம்*.

*பீரடைந்த பாலதாட்டப் பேணு தவன்றாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலை சூட்டித் தலைமைவகுத்த தென்னே
சீரடைந்த கோயில் மல்கு சேய்ஞலூர் மேயவனே.

## 140. திருச்சேறை என்பது உடையார்கோயில்,

கும்பகோணத்துக்குத் தென் கிழக்கு 9-மைல் தூரம். வழியில் 4½ மைல் தூரத்தில் அரிசிற்கரைப் புத்தூரும் [10] அங்கிருந்து 1—மைல் தூரத்தில் திருநறையூரும் [161], அங்கிருந்து 3½—மைல் தூரத்தில் திருச்சேறையும் இருக்கின்றன.

திருச்சேறை தௌமியருஷி பூசித்த ஸ்தலம்.

பூரியாவரும் புண்ணியம் பொய்கெடும்
கூரி தாய அறிவுகை கூடிடும்
சீரியார் பயில் சேறையுட் செந்நெறி
நாரி பாகன்ற னாம நவிலவே.

**141. திருச்சோபுரம் என்பது தியாகவல்லி.**

கூடலூருக்குத் தெற்கு $7\frac{1}{4}$-மைல் தூரத்திலுள்ள ஆலப்பாக்கம் என்னும் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, அங்கிருந்து வடக்கே 1-மைல் தூரஞ்சென்று, தோணித்துறையில் தோணியேறி உப்பங்கழியைக் கடந்து, தென்கிழக்காய் மணல் வழியில் சுமார் ஒரு மைல் தூரஞ் சென்றால் இந்தத்தலத்தை அடையலாம்.

இந்தத் தலம் மணலினால் மூடப்பட்டிருந்து சுமார் நூறு வருஷங்களுக்குமுன் கண்டு பிடிக்கப்பட்டதாம். சுற்றிலும் உயர்ந்த மணற் குன்றுகள் இருக்கின்றன. கடலும் அதிக சமீபத்தி லிருக்கிறது.

அகஸ்தியர் பூசித்த ஸ்தலம்.

புத்தரோடு புன்சமணர் பொய்யுரை யேயுரைத்துப்
பித்தராகக் கண்டுகந்த பெற்றிமை யென்னைகொலா
மத்தயானை யீருரிவை போர்த்து வளர்சடைமேற்
றுத்திநாகஞ் சூடினனே சோபுர மேயவனே.

**142. திருச்சோற்றுத்துறை:**

தஞ்சாவூரிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் போகும் பாதையில 6-மைல் சென்று திருக்கண்டியூரை அடைந்து, அங் கிருந்து தென்கிழக்காய் $1\frac{1}{2}$-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். இதற்கு வடக்கு 2-மைலில் திருப்பழனம் [187] இருக் கிறது. அங்கிருந்து சென்றால் இடையிற் காவிரியாற்றையும் குட முருட்டியாற்றையுங் கடக்கவேண்டும்.

திருச்சோற்றுத்துறை ஸப்தஸ்தானங்களில் மூன்றாவதுஸ்தலம். ஸ்வாமி, சிவபக்தனை அருளாளன் என்னும் மறையவன் பசியால வருந்தும்போது, எடுக்க எடுக்கக் குறையாதிருக்கும்படியான சோறு அளித்தருளிய ஸ்தலம். இந்திரன் முதலியோர் பூசித்த ஸ்தலம். ஊருக்குத் தெற்கே 'சோறுடையான் வாய்க்கால்' என்று ஒருவாய்க் கால் இருக்கிறது.

அங்கதிரோனவனை யண்ணலாக் கருத வேண்டா
வெங்கதிரோன்வழியே போவதற் கமைந்து கொண்மின்!
அங்கதிரோனவனை யுடன்வைத்த ஆதி மூர்த்தி
செங்கதிரோன்வணங்குந் திருச்சோற்றுத் துறைய னாரே.

**143. தண்டலை நீணெறி என்பது தண்டலைச்சேரி.**

திருவாரூருக்குத் தெற்கு 15-மைல். திருத்துறைப்பூண்டி ரெயில் ஸ்டேஷனுக்கு வடக்கு 3-மைல். நல்ல பாதை.

கூர்மாவதாரங் கொண்ட விஷ்ணு அகங்கரித்துக் கடலைக் கலக்க, சிவபெருமான் அக்கூர்மத்தின் அகந்தை யடக்கி அதன் ஓட்டை யணிந்தருளிய ஸ்தலம். அரிவாட்டாய நாயனார் செந்நெலரிசி, மாவடு, செங்கீரை முதலிய நிவேதித்துவந்து முத்தியடைந்த ஸ்தலம். அவர் ஊராகிய கணமங்கலம் கிழக்கே ½-மைல் தூரத்திலிருக்கிறது. விருக்ஷம்; குருந்தம் - பெரியமரம். இலைகளில் ஒரே இதழ் உள்ளது.

கருவ ருந்தியி லன்முகன் கண்ணனென்
றிருவ ருந்தெரி யாவொரு வன்னிடஞ்
செருவ ருந்திய செம்பியன் கோச்செங்க
ணிருபர் தண்டலை நீணெறி காண்மினே.

## 144. தருமபுரம்:

காரைக்கால் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி மேற்கே ½-மைல் தூரஞ் சென்றால் இந்தத்தலத்தை அடையலாம்.

திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் "மாதர் மடப்பிடி" என்னும் யாழ்மூரிப்பதிகம் பாடியருளிய ஸ்தலம். பிரமா, தருமராஜன் முதலியோர் பூசித்த ஸ்தலம். சிவலிங்கம் சிறிதாயும் மிகவும் அழகாயுமிருக்கிறது.

வார்மலி மென்முலை மாதொரு பாகம தாகுவர்
வளங் கிளர் மதி யரவம் வைகிய சடையர்
கூர்மலி சூல மும்வெண் மழு வும்மவர் வெல்படை
குனி சிலை தனி மலைய தேந்திய குழகர்
சீர்மலி யாழி கொள்செல் வனு மல்லிகொ டாம ரைம்
மிசை யவ னடிம் முடி யளவு தாமறியார்
தார்மலி கொன்றையலங் கலு கந்தவர் தங்கிடந்
தடங் கடல் விடுந் திரைத் தரும புரம்பதியே.

## 145. திருத்தலைச்சங்காடு:

சீகாழி ரெயில் ஸ்டேஷனி லிறங்கித் தென்கிழக்காய்த் தரங்கம்பாடிக்குப்போகும் பாதையில் 10-மைல் தூரஞ் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். இந்தப்பாதையிலேயே பின்னும் 4-மைல் தூரஞ் சென்றால் திருக்கடவூரைச் [63] சேரலாம். மாயூரம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து 12-மைல் தூரஞ் சென்றாலும் திருத்தலைச்சங்காட்டை யடையலாம். மாயூரத்திலிருந்து தரங்கம்பாடிக்குப் போகிற பாதையில் இருக்கிறது.

மகாவிஷ்ணு சிவபெருமானைப் பூசித்துப் பாஞ்சசந்யம் என்னும் சங்கத்தைப் பெற்ற ஸ்தலம்.

தலைச்சங்காட்டிற்கு வடகிழக்கு 1-மைலில் திருவலம்புரம் [245] இருக்கிறது. அது விஷ்ணு பூசித்து வலம்புரிச்சங்கு பெற்ற ஸ்தலம்.

வேடஞ்சூழ் கொள்கையீர் வேண்டி நீண்ட வெண்டிங்க
ளோடஞ்சூழ் கங்கையு முச்சி வைத்தீர் தலைச்சங்கைக்
கூடஞ்சூழ் மண்டபமுங் குலாய வாசற் கொடித்தோன்று
மாடஞ்சூழ் கோயிலே கோயி லாக மகிழ்ந்தீரே.

## 146. திருத்தலையாலங்காடு:

கோரடாச்சேரி ஸ்டேஷனிலிருந்து வடக்கே $4\frac{1}{2}$-மைல் தூரஞ் சென்று செல்லூர் என்னும் கிராமத்தைச்சேர்ந்து, அங்கிருந்து வடக்கே $3\frac{1}{2}$-மைல் தூரஞ்சென்று திருக்குடவாயிலைச் [98] சேர்ந்து, அங்கிருந்து கிழக்கே 5-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

இதற்குக் கிழக்கு 3-மைலில் 'திருப்பெருவேளூர்' [217] இருக்கிறது.

கபிலருஷி பூசித்த ஸ்தலம். தாருகாவனருஷிகள் அனுப்பின முயலகன் முதுகின்மீது சிவபெருமான் நடித்தருளிய ஸ்தலம்.

விடந்திகழு மரவரைமேல் வீக்கி னானை விண்ணவர்க்கு மெண்ணரிய வளவி லானை
அடைந்தவரை யமருலக மாள்விப் பானை யம்பொன்னைக் கம்பமா களிறட் டானை
மடந்தையொரு பாகனை மகுடந் தன்மேல் வார்புனலும் வாளரவும் மதியும் வைத்த
தடங்கடலைத் தலையாலங் காடன் றன்னைச் சாராதே சாலநாள் போக்கி னேனே.

## 147. திருந்துதேவன்குடி:

கும்பகோணத்துக்குக் கிழக்கு 4-மைல் தூரத்திலுள்ள திருவியலூருக்குச் [256] சென்று, அங்கிருந்து வடக்கே வயல் வழியாய் 1-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். திருந்துதேவன்குடி என்னும் ஊர் இப்போது இல்லை. கோயில் மாத்திரம் நன்செய் நிலங்களுக்கு மத்தியில் இருக்கிறது. கோயிலைச்சுற்றி ஒருபொய்கை மாலை போட்டதுபோ லிருக்கிறது.

நண்டு பூசித்து முத்தியடைந்த ஸ்தலம். நண்டு பூஜை செய்த பாவனை ஒரு கற்றூணிற் காட்டப்பட்டிருக்கிறது. சுவாமியின் உருவம் முன் பக்கத்தில் வெட்டுண்டு பாதியாயிருக்கிறது. அம்மன் சந்நிதி இரண்டு உள்ளன.

மானமாக் குவ்வன மாசுநீக் குவ்வன
வானையுள் கச்செலும் வழிகள்காட் டுவ்வன
தேனும்வண் டும்மிசை பாடுந்தே வன்குடி
யானைஞ்சா டும்முடி யடிகள்வே டங்களே.

**148. திலதைப்பதி** என்பது கோயிற்பத்து அல்லது திலதர்ப்பணபுரி.

பேரளம் ஸ்டேஷனிலிறங்கி தென்மேற்கு $3\frac{1}{1}$-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை யடையலாம். நல்ல வழியில்லை.

சிதலைப் பதி என்னும் ஊருக்கு $\frac{3}{4}$-மைல் தூரத்தில் கோயிலிருக்கிறது. திலதைப்பதி என்பது சிதலைப்பதி என மருவியிருக்கலாம். கோயில் சிறிது; அரிசிலாற்றின் தென்கரையிலிருக்கிறது. சந்திரன் பூசித்த ஸ்தலம். தசரத சக்கரவர்த்திக்கு ராம லக்ஷ்மணர்கள் திலதர்ப்பணம் செய்த ஸ்தலம்.

இங்குத் தர்ப்பணம், சிரார்த்தம் இவை செய்வது விசேஷம்.

புரவியே பூம்மணி பூண்டியங் குநகொடித் தேரினான்
பரவிநின் றுவழி பாடுசெய் யும்பர மேட்டியூர்
விரவினா ழல்விரி கோங்குவேங் கைசுர புன்னைசண்
மரவமவ் வன்மல ருந்தில தைப்பதி முத்தமே.

**149. திருத்தினைநகர் :**

இஃது இப்போது 'தீர்த்தனகிரி'யென மருவி வழங்குகிறது.

கூடலூருக்குத் தெற்கு $7\frac{1}{4}$-மைலிலுள்ள ஆலப்பாக்கம் ஸ்டேஷனிலிறங்கி, சிறிது தூரம் மேற்கே சென்று, மஞ்சகுப்பத்திலிருந்து சிதம்பரம் போகும் பெரிய பாதையைச் சேர்ந்து, அந்தப் பாதையிலே தெற்கே 5-மைல் சென்று, ($13\frac{1}{2}$-மைல்கல் இருக்குமிடத்தில்) மேற்கே திரும்பி, $1\frac{1}{2}$-மைல் சென்று தாழனூர் என்னும் கிராமத்தை அடைந்து, பின்னும் 1-மைல் மேற்கே சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். தாழனூர்வரையில் வண்டி சுலபமாய்ப் போகும்; அதற்கப்பாலுள்ள 1-மைலும் போவதுதான் கஷ்டம்.

பரங்கிப்பேட்டை ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு 7-மைல் தூரஞ் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

பெரியான் என்னும் பள்ளன் ஒருவன் உழுதுகொண்டிருக் கையிற் சிவபெருமான் ஜங்கமர்போல் அவனிடத்திற்கு வந்து அன்னம் கேட்க அவன் தன்னூருக்குச்சென்று கொண்டுவருவதாய்ச் சொல்லிப்போனான். அவன் வருவதற்குள் சுவாமி அவன் உழு திருந்த புலத்தில் தினைவிளைந்து பழுத்திருக்கும்படிசெய்து மறைந்து விட்டார். பள்ளனும் அவன் மனைவியும் வந்து தினை விளைந்திருக்கக் கண்டு ஆச்சரியமுற்று ஜங்கமரைக்காணாது திகைத்து நின்றார்கள். ஸ்வாமி இடபவாகனருடராய் அவர்களுக்குத் தரிசனங்கொடுத்து அவர்களைத் தம்முடைய லோகத்திற் சேர்த்தருளினர். அதிசயமாகத் தினைவிளைந்த காரணத்தால் இந்தத் திருப்பதிக்குத் திருத்தினைநகர் என்னும் பெயரெய்திபது. கோயில் சிறிது. கோயிலுக்கு வடக்கி லிருக்கும் தீர்த்தம் 'சாம்புவதடாகம்' என்று சொல்லப்படுகிறது.

வடிகொள் கண்ணிணை மடந்தையர் தம்பால் மயல தூற்றுவஞ் சனைக்கிடமாகி
முடியு மாகரு தேலெரு தேறு மூர்த்தியை முத லாயபி ரானை
யடிக ளென்றடி யார்தொழு தேத்து மப்ப னைப்பிலா மூலையுமை போனைச்
செடிகொள்கான் மலிதிருத்தினைநகருட்சிவக்கொழுந்தினைச்சென்றடைமனனே.

**150. திருத்துருத்தி** என்பது குற்றாலம்.

ரெயில் ஸ்டேஷன்; மாயூரத்துக்குத் தென்மேற்கு $5\frac{1}{2}$-மைல்.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள், சங்கிலி நாச்சியார் பொருட்டுச் செய்த சத்தியம் தவறி, திருவொற்றியூரினின்றும் திருவாரூருக்குச் செல்ல யத்தனித்தபோது அவருடைய இரண்டு கண்களுக்கும் அபாவம் நேரிட்டதும் அல்லாமல் தேகத்திலும் கொடிய பிணி உண் டாயிற்று. ஒரு கண்ணின் பார்வையைக் காஞ்சிபுரத்திலும், மற் றொரு கண்ணின் பார்வையைத் திருவாரூரிலும் பெற்று, உடற் பிணி, திருத்துருத்தியாகிய இந்த க்ஷேத்திரத்தில் நீங்கப் பெற்றார். "என்னுடம்படும் பிணியிடர் கெடுத்தானை",— என்பது ஸ்ரீ சுந்தரர் தேவாரம்.

உன்னியெப் போது நெஞ்சு ளொருவனை யேத்து மின்னோ
சன்னியை யொருபால் வைத்துக் கங்கையைச் சடையுள் வைத்துப்
பொன்னியி னடுவு தன்னுட் பூம்புனல் பொலிந்து தோன்றுந்
துன்னிய துருத்தி யானைத் தொண்டனேன் கண்ட வாறே.

## 151. திருத்துறையூர்:

இது 'திருத்தளூர்' என மருவி வழங்குகிறது. பண்ணுருட்டி ரெயில் ஸ்டேஷனுக்கு வடமேற்கு 5-மைல், சாதாரண பாதை. வரிஞ்சிபாக்கம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து மேற்கு $1\frac{1}{2}$–மைல்.

சிவஞான சித்தியார் என்னும் சைவ சித்தாந்த சாஸ்திரத்தைச் செய்தருளிய சகலாகமபண்டிதர் என்னுங் காரணப் பெயரை யுடைய அருணந்திசிவாசாரியராகிய சந்தானசாரியார் திருவவதாரஞ் செய்து முத்தி பெற்ற ஸ்தலம்.

விண்ணோர்ந்தன மேகங்கள் நின்று பொழிய
மண்ணாரக்கொணர்ந் தெற்றியோர் பெண்ணை வடபாற்
பண்ணார் மொழிப் பாவைய ராடுந் துறையூர்
அண்ணாவுனை வேண்டிக்கொள் வேன்றவ நெறியே.

## 152. திருத்தேங்கூர்:

திருவாரூருக்குத் தெற்கு 10-மைல். திருநெல்லிக்காவுக்குத் [175] தென்மேற்கு $\frac{1}{2}$-மைல்.

லக்ஷ்மியும் நவக்கிரகங்களும் பூசித்த ஸ்தலம். பிராகாரத்தில் 9-இலிங்கங்கள் இருக்கின்றன. இலக்குமி பூசித்த லிங்கம் இலக்குமிக்கு எதிரிலிருக்கின்றது. அம்மன் சந்நிதி பிரத்தியேகமாயிருக்கிறது.

திருத்தெங்கூருக்குத் தென்மேற்கு $1\frac{3}{4}$-மைல் தூரத்தில் திருக்கொள்ளிக்காடு [115] இருக்கிறது.

தேடித் தானயன் மாலுந் திருமுடி யடியிணை காணார்
பாடத்தான் பலபூதப் படையினர் சுடலையிற் பலகா
லாடத்தான் மிகவல்ல ருச்சுனற் கருள்செயக் கருதும்
வேடத்தார் திருத்தேங்கூர் வெள்ளியங் குன்றமர்ந் தாரே.

## 153. திருத்தெளிச்சேரி என்பது கோயிற்பத்து.

காரைக்கால் ரெயில் ஸ்டேஷனி லிறங்கி வடமேற்கு $\frac{3}{4}$-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

திருஞான சம்பந்த சுவாமிகள் அடியார் திருக்கூட்டத்துடன் செல்லுகையிற், 'பரசமயகோளரிவந்தார்' என்று முத்துச் சின்னங்கள் ஊத, அதனைப் பொறாத பௌத்தர்கள் வந்து தடுக்க, தேவாரத் திருமுறை யெழுதும் அடியவர்,

புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்க டெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வி னைப்பகைக்
கத்திர மாவன வஞ்செ ழுத்துமே.

என்னும் பஞ்சாக்ஷரப் பதிகத்திருப்பாட்டை ஓதி அந்தப் பௌத்தர்களின் தலைவனு( வந்த புத்தநந்திபின் தலைமேல் இடியிடித்து விழும்படி செய்த ஸ்தலம். பௌத்தர்கள் மீண்டும் வேறொரு தலைவனுடன் வந்து அவ்வடியவருடன் தருக்கஞ் செய்து தோல்வியுற்றுப் பிள்ளையாரின அநுக்கிரகத்தாற் சைவர்களாகி உய்ந்த தலம். மேற்குப் பார்த்த சந்நிதி. எதிரிற் குளமிருக்கிறது. பங்குனிமீ 13உ முதல் 10-நாளைக்குச் சூரியனுடைய கிரணங்கள் ஸ்வாமிமேல் விழுகின்றனவாம்.

பக்க லுந்தமைப் பார்ப்பதி யேத்திமுன் பாவிக்குஞ்
செக்கர் மாமதி சேர்மதில் சூழ்தெளிச் சேரியீர்
மைக்கொள் கண்ணியர் கைவளை மால்செய்து வெளவவே
நக்கராயுல கெங்கும்ப லிக்குந டப்பதே.

## 154. தென்குடித்திட்டை என்பது திட்டை.

ரெயில் ஸ்டேஷன்; தஞ்சாவூருக்கு வடகிழக்கு 6-மைல். கௌதமர், ஆதிசேஷன், காமதேனு இவர்கள் பூசித்த ஸ்தலம்.

முன்னைநான் மறையவை முறைமுறை குறையொடுந்
தன்னதா டொழுதெழ நின்றவன் றன்னிட
மன்னுமா காவிரி வந்தடி வருடநற்
செந்நெலார் வளவயற் றென்குடித் திட்டையே.

## 155. தேவூர்:

நாகபட்டினத்துக்கு மேற்கு 7-மைல் தூரத்திலுள்ள கீழ்வேளூர் என்னும் ரெயில் ஸ்டேஷனிலிறங்கித் தெற்கே 2-மைல் தூரஞ் சென்றால் இந்தத் தலத்தை யடையலாம்.

சுவாமி கட்டுமலைமே லிருக்கிறார். கௌதமர், பிரகஸ்பதி, இந்திரன், குபேரன் முதலியோர் பூசித்த ஸ்தலம்; கௌதமலிங்கம் மலைமேல் வடபக்கத்தில் இருக்கின்றது. கோயிலுக்குத் தென்கிழக்கில் தேவதீர்த்தம் இருக்கிறது. இந்தத் தலத்து இடபவாகனம் வெகு நன்றாய்ச் செய்யப்பட்டிருக்கிறது.

ஓதி மண்டலத் தோர்முழு துய்யவெற் பேறு
சோதி வானவன் றுதிசெய மகிழ்ந்தவன் றாகீர்த்
தீதில் பங்கயந் தெரிவையர் முகமலர் தேனூர்
ஆதி சேவடி யடைந்தன மல்லலொன் றிலமே.

**156.** திருநணா என்பது பவானி.

பவானி ஆறு காவிரி நதியுடன் கூடுமிடத்தி லிருக்கிறது. ஈரோட்டு ஸ்டேஷனுக்கு வடக்கு $8\frac{1}{2}$-மைல்; நல்லபாதை.

குபேரன், விசுவாமித்திரர், பராசரர் முதலியோர் பூசித்த ஸ்தலம். பிராகாரத்திற் பழைய இலந்தைமரங்கள் 2-இருக்கின்றன. ஆதிகேசவப் பெருமாள் சந்நிதியும் கோயிலுக்குள் இருக்கிறது.

பந்தார் விரன் மடவாள் பாகமா நாகம் பூண்டேறு தேறி
யந்தா ரரவணிந்த வம்மானிடம்போலு மந்தண் சாரல்
வந்தார் மடமந்தி கூத்தாட வார்பொழிலில் வண்டு பாடச்
செந்தேன் றெளியொளிரத் தேமாங் கனியுதிர்க்குந் திருநணாவே.

**157.** திருநல்லம் என்பது கோனேரிராஜபுரம்.

திருவிடைமருதூருக்குத் தென்கிழக்கு 6-மைல் தூரம். சாதாரணமான பாதை. மழைக்காலத்தில் வண்டிபோவது கஷ்டம். இந்த ஸ்தலத்தில் நடேசருடைய விக்கிரகம் பிரபலமாயிருக்கிறது.

கொல்லத் தானம ரூர்தமர் வந்தக்கால்
இல்லத் தார்செய லாவதெ னேழைகாள்
நல்லத் தானமை யாளுடை யான்கழல்
சொல்லத் தான்வல்லி ரேற்றுயர் தீருமே.

**158.** திருநல்லூர்:

கும்பகோணத்துக்கு அடுத்த சுந்தரபெருமாள் கோயில் ரெயில் ஸ்டேஷனி லிறங்கித் தெற்கே 2-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

சிவபெருமான் அப்பர்சுவாமிகளுக்குத் திருவடி சூட்டியருளிய ஸ்தலம்.

"வடபாற் கயிலையுந் தென்பானல் லூருந்தம் வாழ்பதியே.",—
"நல்லூருறை நம்பனை நானொருகாற்
றுஞ்சிடைக் கண்டு கனவின் றலைத்தொழு தேற்கவன்று
னெஞ்சிடை நின்றக லான்பல காலமு நின்றனனே",—
" நல்லருளாற் றிருவடியென் றலைமேல் வைத்தார் நல்லூரெம்
பெருமானார் நல்லவாறே",—

எனத் திருநாவுக்கரசுசுவாமிகளால் மிகப் பாராட்டப்பெற்ற மஹா ஸ்தலம்.* சிவனடியார்களுக்குக் 'கந்தை கீளுடை கோவணம்' இவைகளைக் கொடுத்து வந்த அமர்நீதிநாயனரைச் சிவபெருமான் ஆட்கொண்டு, அவருக்கும் அவர் மனைவியாருக்கும் மைந்தனுக்கும் முத்தி யளித்தருளிய ஸ்தலம். இதனைத் திருநாவுக்கரசு நாயனர் திருநல்லூர்த் திருவிருத்தத்தில் ஏழாவது செய்யுளில்,

நாட்கொண்ட தாமரைப் பூந்தடஞ் சூழ்ந்தநல் லூரகத்தே
கீட்கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான
வாட்கொண்ட நோக்கி மனைவி பொடுமங் கோர் வாணிகனை
யாட்கொண்ட வார்த்தை யுரைக்குமன் றோவிவ் வகலிடமே.

என்று சிறப்பித்துப் பாடியிருக்கிறார். சுவாமி சந்நிதானம் மலைபோல உயர்ந்த இடத்தில் இருக்கிறது. கோயிலுக்கெதிரிற் பெரிய தீர்த்த மொன்றிருக்கிறது. அதற்குச் சப்தசாகர தீர்த்தம் என்று பெயர். சுவாமி பொன்வர்ணமாயிருக்கிறார். ஒருநாளைக்கு ஐந்து வர்ணமாகத் தோன்றுகின்றாராம். இலிங்கத்திற் சிலதுவாரங்களுங் காணப்படுகின்றன. அகஸ்தியருக்குக் கலியாணகாக்ஷி கொடுத்த ஸ்தலம். அகஸ்திய லிங்கம் ஸ்வாமி பக்கத்தி லிருக்கிறது. கோயிலிற் சாலிக்கிராமச் சிலையினுற் செய்த சுப்பிரமணியசுவாமி விக்கிரகம் ஒன்றிருக்கிறது. அது மிகவும் அழகாயிருக்கிறது. இந்தத் தலத்திற் சப்தஸ்தான உற்சவம் நடந்து வருகின்றது.

திருநள்ளாற்றுக்குக் கிழக்கு 1 மைலில் 'தக்களூர்' என்னும் வைப்புத்தலம் இருக்கிறது.

*பொன்னலத்த நறுங்கொன்றை சடைமேல் வைத்தார்
புலியுரிவி னதள்வைத்தார் புனலும் வைத்தார்
மன்னலத்த திரடோணமேன் மழுவாள் வைத்தார்
வார்காதிற் குழைவைத்தார் மதியம் வைத்தார்
மின்னலத்த நுண்ணிடையாள் பாகம் வைத்தார்
வேழத்தி னுரிவைத்தார் வெண்ணூல் வைத்தார்
நன்னலத்த திருவடியென் றலைமேல் வைத்தார்
நல்லூரெம் பெருமானார் நல்ல வாறே.

## 159. திருநல்லூர்ப்பெருமணம் என்பது ஆச்சாபுரம்.

சிதம்பரத்துக்குத் தெற்கு $4\frac{1}{2}$-மைல் தூரத்திலிருக்கும் கொள்ளிடம் ரெயில்ஸ்டேஷனி லிறங்கி, அங்கிருந்து கிழக்கே கொள்ளிடக் கரையோரமாய் 3-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். சாதாரணமான பாதை.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருக்கலியாணம் முடிந்தவுடன் மனைவியாருடன் ஆலயத்துக்குச் சென்று அங்கே ஒரு ஜோதி தோன்ற, "காதலாகி" என்னும் . நமச்சிவாயத் திருப்பதிகத்தை யோதி, தாமும் மனைவியாரும், தம்முடைய திருக்கலியாணத்தைத் தரிசிக்க வந்த திருநீலநக்க நாயனார் முதலிய அடியார்களுடன், அந்த ஜோதியிற் றோன்றிய வாயில் வழியாய்ப் புகுந்து சிவசாயுஜ்ஜியம் அடைந்த ஸ்தலம். "நல்லூர்ப் பெருமணம் புக்கிருந்தீ ரேமைப் போக்கருளீரே",—"ஞானசம்பந்தன் பெறும்பதம்.........உறும் பொரு ளாற் சொன்ன ஒண்டமிழ்.",—என்னும் தேவார அடிகள் கவனிக்கற் பாலன.

> சிட்டப்பட் டார்க்கெளி யான்செங்கண் வேட்டுவப்
> பட்டங்கட் டுஞ்சென்னி யான்பதி யாவது
> கட்டக்கொட் டாட்டரு நல்லூர்ப் பெருமணத்
> திட்டப்பட் டாலொத்தி ராலெம்பி ரானிரே.

## 160. திருநள்ளாறு:

ரெயில் ஸ்டேஷன்; காரைக்காலுக்கு மேற்கு 3-மைல் தூரம்.

சப்த விடங்க ஸ்தலங்களில் ஒன்று. 'நாகம் பூண்டேறூர்ந் தானே நள்ளாறனே',—என்பது தேவாரம். தருப்பாரணியேசுரர் என்னும் பெயருக் கேற்ப சுவாமியின் உருவம் தர்ப்பைக் கொழுந்துகள் சேர்ந்தாற்போ லிருக்கிறது. திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் மதுரையிற் சமணருடன் வாது செய்கையில் அக்கினியிலிட்டும் வேகாமலிருந்தெடுத்த பச்சைத் திருப்பதிகம் ஆகிய 'போகமார்த்த பூண்முலையாள்'என்னும் அருமைத் திருப்பதிகத்தைப் பெற்றிருக்கும் ஸ்தலம். சனிபகவானுக்கு மிக முக்கியமா யிருக்கும் கோயிலையும் உடைய ஸ்தலம். சனிபகவான் கோயிலையே பகவான் கோயில் என்கிறார்கள். (பகவான்=சனி).

நளச்சக்கிரவர்த்தி பூசித்துக் கலிதோஷம் நீங்கப்பெற்ற ஸ்தலம்*. தேவியார் விக்கிரகஞ் சிறிது. பிராகாரத்திலுள்ள வைரவர் விக்கிரகம் பெரிது. ஊருக்கு வடமேற்கில் நள தீர்த்தம் இருக்கிறது. விநாயக ருக்குச் சொர்ண விநாயகர் என்று பெயர்.

திருநள்ளாறு பிராஞ்சுக்காரரின் ஆளுகைக் குட்பட்டிருக்கிறது.

> *விளங்கிழை மடக்தைமலை மங்கையொரு பாகத்
> துளங்கொள விருத்திய வொருத்தனிட மென்பர்
> வளங்கெழுவு தீபமொடு தூபமலர் தூவி
> நளன்கெழுவி நாளும்வழி பாடுசெய் நள் ளாறே.

## 161. திருநறையூர்ச்சித்தீச்சுரம்:

கும்பகோணத்துக்குத் தென்கிழக்கு 5½-மைல் தூரம். நல்ல பாதை. வழியில் 4½-மைல் தூரத்தில் அரிசிற்கரைப்புத்தூர் (அழகார்புத்தூர்) [10] என்னும் ஸ்தலம் இருக்கிறது. திருநறையூருக்குக் கிழக்கு 1-மைல் தூரத்திற் பேணுபெருந்துறை [218] இருக்கிறது. திருநறையூருக்குத் தெற்கு ½-மைல் தூரத்தில் நாச்சியார்கோயில் என்னும் விஷ்ணுஸ்தல மிருக்கிறது. அஃது ஆதியிற் சிவஸ்தலமாயிருந்தது. இப்போதும் சிவஸ்தலம் போலவே யிருக்கிறது.

பிள்ளையார் = ஆண்டபிள்ளையார். பிரமதீர்த்தம் கோயிலுக்கு வடக்கே இருக்கிறது.

> பிறைகொள் சடையர் புலியி னுரியர் பேழ்வாய் நாகத்தர்
> கறைகொள் கண்டர் கபால மேந்துங் கையர் கங்காளர்
> மறைகொள் கீதம் பாடச் சேடர் மனையின் மகிழ்வெய்திச்
> சிறைகொள் வண்டு தேனார் நறையூர்ச் சித்தீச் சுரத்தாரே.

## 162. திருநனிபள்ளி என்பது புஞ்சை.

மாயூரம் ஸ்டேஷனுக்கு வடகிழக்கு 8-மைல் தூரம். வழியில் 4-மைல் தூரத்தில் விளநகரும் [257], அங்கிருந்து 3-மைல் தூரத்தில் திருச்செம்பொன்பள்ளியும் [138] இருக்கின்றன.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருடைய தாயார் பிறந்த ஸ்தலம்.

> ஏனம ருப்பினொடு மெழி லாமையும் பூண்டு கந்து
> வானம திலரண மலே யேசிலை யாவளைத்தா
> னூனமில் காழி தன்னு ளுபர் ஞானசம் பந்தர்க் கன்று
> ஞானம ருள்பு ரிந்தா னண்ணு மூர்நனி பள்ளி யதே.

## 163. நன்னிலம்:

ரெயில் ஸ்டேஷன். ஸ்டேஷனுக்கு மேற்கு 3-மைலில் ஊர் இருக்கிறது.

ஸ்தலத்துக்கு 'மதுவனம்' என்றும் பெயர். சுவாமி சந்நிதி கட்டுமலைமே லிருக்கிறது. கோயில் சற்று பெரிதுதான். கோச்செங்கட் சோழர் திருப்பணி செய்த ஸ்தலம். "கோச்செங்கணான் செய் கோயில், நாடிய நன்னிலத்துப் பெருங்கோயில்",- என்பதுதேவாரம். சூரியன் பூசித்த ஸ்தலம்.

தேவியார் சந்நிதியும் அகத்தீசுரர் சந்நிதியும் கீழே இருக்கின்றன. கோயிலுக்கு வடக்கிற் பிரமதீர்த்தம் இருக்கிறது.

ஸ்டேஷனுக்கு மேற்கு $1\frac{1}{2}$-மைல் தூரத்தில் நன்னிலத்துக்குப் போகும் வழியில் திருக்கொண்டீச்சுரம் [113] இருக்கிறது.

> கருவரை போல ரக்கன் கயி லைம்மலைக் கீழ்க்க தற
> ஒருவிர லாலடர்த்தின் னருள் செய்தவு மாபதிதான்
> திரைபொரு பொன்னி நன்னீர்த் துறை வன்றிகழ் செம்பி யர்கோ
> னரபதி நன்னிலத்துப் பெருங் கோயின யந்தவனே.

## 164. திருநாகேச்சுரம்:

ரெயில் ஸ்டேஷன். கும்பகோணத்துக்குக் கிழக்கு 4-மைல் தூரம். நல்லபாதை. திருவிடைமருதூர் ரெயில் ஸ்டேஷனுக்குத் தென்மேற்கு $2\frac{1}{2}$-மைல்.

சண்பகாரணிய க்ஷேத்திரம். பெரியபுராணஞ் செய்தருளிய சேக்கிழார் நாயனார் மிகுந்த அன்பு வைத்திருந்த ஸ்தலம். அதற்குத் திருஷ்டாந்தமாக அவர் தம்முடைய ஊராகிய குன்றத்தூரிலே திருக்கோயில் ஒன்று கட்டுவித்து அதற்குத் திருநாகேச்சுரம் என்று பெயரிட்டிருக்கிறார். சேக்கிழார் விக்கிரகமும் கோயிலிலிருக்கிறது. கோயில் பெரிது. நான்கு புறமும் கோபுரங்கள் இருக்கின்றன. சூரிய புஷ்கரணி தீர்த்தம். சங்கநிதி, பதுமநிதி, மாராசந்தர இவர்கள் விக்கிரகங்களும் இருக்கின்றன. சுந்தரமூர்த்தி சுவாமிகள் பக்கத்தில் பரவையார் விக்கிரகம் இருக்கிறது.

சந்திரன், சூரியன், ஐந்தலைநாகம் இவர்கள் பூசித்த ஸ்தலம்*. 'ஞாயிறுந் திங்களுங் கூடிவந்தாடு நாகேச்சுரம்',—என்பது தேவாரம்.

> *சந்தி ரனொடு சூரியர் தாமுடன்
> வந்து சீர்வழி பாடுகள் செய்தபின்
> ஐந்த லையர வின்பணி கொண்டருள்
> மைந்தர் போன்மணி நாகேச் சுரவரே.

## 165. நாகைக்காரோணம் என்பது நாகபட்டினம்.

ரெயில் ஸ்டேஷன். ஸப்தவிடங்க ஸ்தலங்களில் ஒன்று. அதிபத்தநாயனாருடைய ஸ்தலம். சிவபெருமான் புண்டரீக மகாருஷியைக் காயத்தோடு ஆரோகணஞ் செய்துகொண்ட ஸ்தலம்.

கோயிலில் முதலிலிருக்கும் விநாயகருக்கு நாகாபரண விநாயகர் என்றும், உள்ளே இருக்கும் விநாயகருக்கு மாவடிப் பிள்ளையார்

என்றும் பெயர். தேவதீர்த்தம் கோயிலுக்குத் தெற்கிலும் புண்டரீக தீர்த்தம் கோயிலுக்கு மேற்கிலும் இருக்கின்றன. தியாகராஜருக்கெதிரிற் சுந்தரமூர்த்தி பரவை நாச்சியார் சமேதமா யிருக்கிறார்.

அந்த மில்புக ழாயிழை யார்பணிந்
தெந்தை யீசனென் றேத்துமி றைவனைக்
கந்த வார்பொழி லூகைக்கா ரோணனைச்
சிந்தை செய்யக்கெ டுந்துயர் திண்ணமே.

## 166. திருநாட்டியத்தான்குடி:

ரெயில்ஸ்டேஷன். திருவாரூருக்குத் [23]தெற்கு 6-மைல் தூரம். திருக்காறாயிலுக்கு [90] வடமேற்கு $5\frac{1}{2}$-மைல். ஸ்டேஷனிலிருந்து தென் மேற்கு 3-மைல் தூரத்திற் பேரெயில் [219] என்னும் ஸ்தலமிருக்கிறது.

கோயில் சிறிது. கோபுரமில்லை. கோட்புலிநாயனருடைய ஸ்தலம். அவருடைய உருவம் கோயிலிலிருக்கிறது. "கூடா மன்னரைக் கூட்டத்து வென்ற கொடிறன் கோட்புலி சென்னி, நாடார் தொல் புகழ் நாட்டியத்தான்குடி",—என்பது தேவாரம். விநாயகருக்குக் கைகாட்டி மூர்த்தி என்று பெயர்.

அஞ்சாதே யுமக் காட்செய வல்லே னியாதினுக் காசைப் படுகேன்
பஞ்சேர் மெல்லடி மாமலை மங்கை பங்கா வெம்பர மேட்டி
மஞ்சேர் வெண்மதி செஞ்சடை வைத்த மணியே மாணிக்க வண்ணா
நஞ்சேர் கண்டா வெண்டலை யேந்தீ நாட்டியத் தான்குடி நம்பீ.

## 167. திருநாரையூர்:

சிதம்பரத்திலிருந்து தென்மேற்கு 8-மைல் சென்று குமராக்ஷியென்னும் ஊரையடைந்து, அங்கிருந்து மன்னார்குடிக்குப் போகும் வழியில், $1\frac{1}{2}$-மைல் சென்று, அங்கு வழியைவிட்டுத் தெற்கே திரும்பி $\frac{3}{4}$-மைல் சென்றால் இந்தத் தலத்தை அடையலாம்.

நாரை பூசித்த ஸ்தலம்.

சிதம்பரத்திற் சேமித்து வைத்திருந்த தேவாரத் திருமுறைகளை நம்பியாண்டார் நம்பியார் மூலமாய் வெளிப்படுத்தியருளிய கருணாகர மூர்த்தியாகிய பொல்லாப்பிள்ளையார் என்னும் விநாயக மூர்த்தியெழுந்தருளியிருக்கும் ஸ்தலம்.

செம்பொன்னை நன்பவளந் திகழு முத்தைச்
செழுமணியைத் தொழுமவர்தஞ் சித்தத் தானை
வம்பவிழு மலர்க்கணைவே ளுலக்க நோக்கி
மகிழ்ந்தானை மதிற்கச்சி மன்னு கின்ற
கம்பனையெங் கயிலாய மலையான் றன்னைக்
கழுகினொடு காகுத்தன் கருதி யேத்து
நம்பனையெம் பெருமானை நாதன் றன்னை
நாரையூர் நன்னகரிற் கண்டே னானே.

## 168. திருநாலூர்மயானம்:

திருக்குடவாசலுக்கு [98] வடகிழக்கு 3-மைல் தூரம். திருக்குட வாசல் கும்பகோணத்துக்குத் [97] தென்கிழக்கு 10-மைல் தூரம்.

ஆபஸ்தம்பருஷி பூசித்த ஸ்தலம்.

திருநாலூர் மயானத்துக்குத் தென்மேற்கு ஒரு 1-மைலில் திரு நாலூர் என்னும் ஊர் இருக்கிறது. இங்கும் ஓர் ஆலயமிருக்கிறது.

கோலத்தார் கொன்றையான் கொல்புலித்தோ லாடையா
னீலத்தார் கண்டத்தா னெற்றியோர் கண்ணினான்
ஞாலத்தார் சென்றேத்து நாலூர் மயானத்திற்
சூலத்தா னென்பார்பாற் சூழாவாந் தொல்வினையே.

## 169. திருநாவலூர்:

இது திருநாமநல்லூர் என வழங்கிவருகிறது. பண்ணுருட்டி ரெயில் ஸ்டேஷனிலிருந்து மேற்கே உளுந்தூருக்குப் போகும் பாதையில் 11-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

சுக்கிரன் பூசித்த ஸ்தலம்.

சுந்தரமூர்த்திநாயனார் திருவவதாரஞ் செய்தருளிய ஸ்தலம்.

வாயாடிமாமறையோதியோர்வேதியனாகிவந்து
தீயாடியார்சினக்கேழலின்பின்சென்றோர்வேடுவனாய்
வேயாடியார்வெண்ணெய்நல்லூரில்வைத்தென்னையாளுங்கொண்ட
நாயாடியார்க்கிடமாவதுநந்திருநாவலூரே.

## 170. திருநின்றியூர்:

மாயூரத்துக்கு வடக்கு 4-மைல் தூரத்திலுள்ள ஆனந்ததாண்டவ புரம் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கே 2-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலம் இருக்கிறது.

இலக்குமி பூசித்த ஸ்தலம். "செந்தண்மா மலர்த் திருமகள் மருவுஞ் செல்வத் தென்திரு நின்றியூ ரானே",—என்பது தேவாரம்.

மொய்த்த சீர்முந் நூற் றறுபது வேலி மூன்று நூறுவேதியரொடுநுனக்கு
வொத்த பொன்மணிக் கலசங்க ளேந்தி யோங்கு தின்றியூ ரென்றுனக்களிப்பப்
பத்தி செய்தவப் பரசி ராமற்குப் பாதங் காட்டிய நீதிகண் டடைந்தேன்
சித்தர் வானவர் தானவர் வணங்குஞ் செல்வத் தென்றிரு நின்றியூ ரானே.

## 171. திருநீடூர்:

ஷை ஆநந்த தாண்டவபுரம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கித் தென் மேற்கு ஒருமைல் சென்றால் இந்த ஸ்தலம் இருக்கிறது. மாயூரத்திலிருந்து மேற்கு மூன்று மைல் தூரம்.

முனையடுவார் நாயனார் சிவனடியார்களுக்குத் திருவமுது செய்வித்துவந்து முத்திபெற்ற ஸ்தலம்.

ஊழிக்காலத்திலும் உலவாது நீடித்திருக்குந் தலமாதலின் இத் தலத்துக்கு நீடூர் என்னும் பெயர் எய்தியது. இந்திரன், சூரியன், சந்திரன், நண்டு, காளி—இவர்கள் பூசித்த ஸ்தலம். இதற்கு வகுளாரணியம், மகிழாரணியம், மகிழவனம் என்றும் பெயர்.

காடி லாடிய கண்ணுத லானைக் கால னைக்கடிந் திட்டபி ரானைப்
பாடி யாடும் பரிசே புரிந்தானைப் பற்றி னேடுசுற் றம்மொழிப் பானைத்
தேடி மாலயன் காண்பரி யானைச் சித்த முந்தெளி வார்க்கெளி யானைக்
கோடி தேவர்கள் கும்பிடு நீடூர்க் கூத்த னைப்பணி யாவிட லாமே.

## 172 திருநீலக்குடி:

இது தென்னலக்குடி எனவழங்கிவருகிறது.

ஆடுதுறை [102] ரெயில் ஸ்டேஷனிலிருந்து $2\frac{1}{2}$-மைல். திருவிடைமருதூர் ரெயில்ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கு 5-மைல் தூரம்.

வருணனும், தேவகன்னிகைகளும் பூசித்த ஸ்தலம்.

நாலு வேதியர்க் கின்னரு ளன்னிழல்
ஆல நலஞ் சுண்டுகண் டத்தமர்
நீல னீலக்குடியுறை நின்மலன்
கால னாருயிர் போக்கிய காலனே.

## 173. நெடுங்களம்:

திரிசிரபுரத்துக்கு வடக்கு 6-மைலிலுள்ள திருஎறும்பியூர் [48] ரெயில் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 7-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலம் இருக்கிறது.

வங்கிய சோழராஜனுக்கு அநுக்கிரகஞ் செய்த ஸ்தலம்.

நின்னடியே வழிபடுவா னிமலா நினைக்கருத
வென்னடியா னுயிரை வவ்வே லென்றடற் கூற்றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடு நீர்சுமக்கு
நின்னடியா ரிடர்களையாய் நெடுங்கள மேயவனே.

## 174. திருநெய்த்தானம்:

இது தில்லைஸ்தானம் என வழங்கிவருகிறது. திருவையாற்றுக்கு [50] மேற்கு 1-மைல் தூரம். நல்ல பாதை.

சப்தஸ்தான க்ஷேத்திரங்களில் ஏழாவது ஸ்தலம். சரஸ்வதி பூசித்த ஸ்தலம்.

தேய்ந்திலங் குஞ்சிறு வெண்மதி யாய்நின் றிருச்சடைமேல்
பாய்ந்தகங் கைப்புனல் பன்முக மாகிப் பரந்தொலிப்ப
ஆய்ந்திலங் கும்மழு வேலுடை யாயடி யேற்குரைநீ
ஏந்திள மங்கையு நீயுநெய்த் தானந் திருந்ததுவே.

## 175. திருநெல்லிக்கா:

ரெயில் ஸ்டேஷன். திருவாரூருக்குத் தெற்கு 8—மைல்.

சூரியன் பூசித்த ஸ்தலம். இதற்குத் திருஷ்டாந்தமாகப் பிரதி வருஷமும் ஐப்பசிமீ கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி முதல் 7-நாளும், மாசிமீ 18உ முதல் 7-நாளும், அஸ்தமனசமயத்திற் சூரியனுடைய கிரணங்கள் சுவாமிமேல் விழுகின்றன. மேற்குப் பார்த்த சந்நிதி. நெல்லிவிருக்ஷம் பிராகாரத்திலிருக்கிறது. இதன் காய்கள் ஸ்வாமிக்கு மட்டும் உபயோகப்படுகின்றன. கோயிலுக்குத் தெற்கே பிரம தீர்த்தமும், வடக்கே சூரியதீர்த்தமும் இருக்கின்றன. பிரமனும் பூசித்த ஸ்தலம்.

நலந்தானவ னான்முகன் றன்றலையைக்
கலந்தானது கொண்ட கபாலியுந்தான்
புலந்தான்புக ழாலெரி விண்புகழுந்
நிலந்தானெல்லிக் காவுணி லாயவனே.

## 176. திருநெல்வாயில் என்பது சிவபுரி.

சிதம்பரத்துக்குத் தென்கிழக்கு 3-மைல் தூரம். சாதாரணமான பாதை. இந்தத் தலத்திலே இரண்டு ஆலயங்களிருக்கின்றன. வடக்கே யிருக்கும் ஆலயம் இந்தத்தலத்துக்கு உரித்தானது. தெற்கே யிருக்கும் ஆலயத்திலே முன் திருக்கழிப்பாலையி லிருந்த பால் வண்ண நாதஸ்வாமி யென்னும் சிவலிங்கப்பெருமான் வைக்கப்பட்

டிருக்கிறார். திருக்கழிப்பாலையிலிருந்த ஆலயம் இப்போது கொள்ளிட நதியாற் கொண்டுபோய்விடப்பட்டது. இரண்டு கோயில்களும் சிறிய கோயில்கள். சிவபுரி கோயில் கிலமாயிருக்கிறது.

புடையி னார்புள்ளி கால்பொ ருந்திய
மடையி னார்மணி நீர்நெல் வாயிலார்
நடையி னால்விரற் கோவ ணந்நயந்
துடையி னாரெம துச்சியாரே.

## 177. திருநெல்வாயில் அரத்துறை:

பெண்ணாகடமாகிய[215] தூங்கானை மாடத்துக்குத் தென்மேற்கு 4-மைல் தூரம். இது நிவா என்னும் நதியின் கரைமேலிருக்கிறது. பெண்ணாகடத்துக்குச் சொல்லி யிருக்கும் வழியைப் பார்க்க.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகளுக்குச் சிவபெருமான் முத்துச் சிவிகையும் முத்துக் குடையும் முத்துச் சின்னங்களும் கொடுத்தருளிய ஸ்தலம். அருணகிரிநாத சுவாமிகள் இத்தலத்திற்குப் பாடியிருக்கிற திருப்புகழிலும் இதனைச் சிறப்பித்திருக்கிறார்.

கல்வா யகிலுங் கதிர்மா மணியுங் கலந்துந் திவருந் நிவவின் கரைமேல்
நெல்வா யிலரத் துறைநீ டுறையுந் நிலவெண் மதிசூ டியவண் ணலனே
நல்வா யில்செய்தார் நடந்தா ருடுத்தார் நரைத்தா ரிறந்தா ரென்றுநா னிலத்திற்
சொல்லாய்க் கழிகின் றதறிந் தடியேன் தொடர்ந்தே னுய்யப்போவதோர்
சூழல் சொல்லே.

## 178. திருநெல்வெண்ணை:

இது நெய்வெணையென இப்போது மருவி வழங்கிவருகிறது.

பண்ணுருட்டி ரெயில் ஸ்டேஷனிலிறங்கி மேற்கே 11-மைல் சென்று திருநாவலூரை[169] அடைந்து, பின்னும் 11-மைல் சென்று உளுந்தூர்பேட்டை யென்னும் ஊரைச்சேர்ந்து, அங்கிருந்து வடமேற்காக 4-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். உளுந்தூர்பேட்டை வரையிற் செம்மையான பாதை யிருக்கிறது. அதற்கப்பாற் பாதை சாதாரணமா யிருக்கிறது.

சநகர், சநற்குமாரர் முதலியோர் பூசித்த ஸ்தலம்.

நெற்றியோர் கண்ணுடை நெல்வெணை மேவிய
பெற்றிகொள் பிறைநுத லீரே
பெற்றிகொள் பிறைநுத லீருமைப் பேணுதல்
கற்றறி வோர்கடன் கடனே.

## 179. திருநெல்வேலி:

ரெயில் ஸ்டேஷன். தாம்பிரவர்ணி நதியின் கரையி லிருக்கிறது. பஞ்ச சபைகளில் ஒன்றாகிய தாம்பிரசபையை உடைய ஸ்தலம். சிவபெருமான் தம்முடைய நைவேத்தியத்துக்காக வேதசருமா என்னும் பிராமணர் யாசித்துக்கொண்டு வந்து உலர்த்தி வைத்திருந்த நெல்லை வெள்ளமடித்துப் போகாவண்ணம் வேலி கட்டிக் காத்தருளிபபடியால் இந்தத் தலத்துக்குத் திருநெல்வேலி யெனப் பெயர் வந்தது.

அகஸ்தியர், பிரமா, விஷ்ணு முதலியோர் பூசித்த ஸ்தலம்.

வெடிதரு தலையினர் வேனல்வெள் ளேற்றினர் விரிசடையர்
பொடியணி மார்பினர் புலியத ளாடையர் பொங்கரவர்
வடிவுடை மங்கையோர் பங்கினர் மாதரை மையல்செய்வார்
செடிபடு பொழிலணி திருநெல் வேலியுறை செல்வர் தாமே.

## 180. பட்டீச்சுரம்:

கும்பகோணத்துக்குத் [97] தென்மேற்கு 4-மைல் தூரம். நல்ல பாதை.

காமதேனுவின் புத்திரிகள் நால்வரிற் பட்டி என்பவள் பூசித்த படியாற் பட்டீச்சுரம் என்னும் பெயர் வந்தது. கோயில் பெரிது. சிவபெருமான் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு வெயில் வெப்பந் தணிக்கும்பொருட்டு ஒரு பூதத்தைக்கொண்டு முத்துப்பந்தர் நிழற்றுவித்த ஸ்தலம். கோயிலுக்குள் ஞானதீர்த்தமும் அதன் தென்கரையில் தலவிருக்ஷமாகிய வன்னியும் இருக்கின்றன. ஸ்ரீ ராமருக்குச் சாயைஹத்தி தோஷந் தீர்த்த ஸ்தலம். மார்கழி அமாவாசைதினம் இந்த ஐதிஹ்யம் நடத்தப்படுகிறது. கோயிலில் நந்திகளெல்லாம் சற்று விலகியிருக்கின்றன. சம்பந்த சுவாமிகள் வெளியிலிருந்து தரிசனஞ் செய்தற் பொருட்டு அப்படி விலகி இருப்பதாகச் சொல்லுகிறார்கள். முதலில் இருக்கும் நந்தி பெரிது. நல்ல வேலைப்பாடுள்ளது. கோவிந்த தீக்ஷிதர் என்னும் மந்திரி அதிக திருப்பணி செய்தாராம். அவருடைய உருவமும் அவர் மனைவியாருடைய உருவமும் அம்மன் சந்நிதியிலிருக்கின்றன. பட்டீச்சுரத்துக்குத் தெற்கு 1-பர்லாங்கு தூரத்தில் திருமலைராயன் ஆறு என்னுஞ் சிற்றாறு ஓடுகிறது.

இத்தலத்திற்கு வடக்கில் வேறொரு வீதியில் திருச்சத்திமுத்தம் என்னுந்தலம் [128] இருக்கின்றது.

பாடன்மறை சூடன்மதி பல்வளையோர் பாகமதின் மூன்றோர்கணையாற்
கூடவெரி யூட்டியெழில் காட்டிநிழல் கூடுபொழில் சூழ்பழசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசுர மேயகடி கட்டரவினார்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி காட்டிவினை வீடுமவரே.

## 181. திருப்பந்தணைநல்லூர்:

திருவிடை மருதூர் [34] ஸ்டேஷனி லிறங்கி, வடகிழக்கே $5\frac{1}{2}$-மைல் சென்று சஞ்சனூரை [60] யடைந்து, அங்கிருந்து பின்னும் வடகிழக்கே 2-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

தேவ கன்னிகைகளும், காமதேனுவும் பூசித்த ஸ்தலம்.

இடறினார் கூற்றைப் பொடிசெய்தார் மதிலை யிவை சொல்லி யுலகெழுந் தேத்தக்
கடறினா ராவர் காற்றுளா ராவர் காதலித் துறை தருகோயில்
கொடிறனார் யாதுங் குறைவிலார் தாம்போய்க் கோவணங்கொண்டு கூத்தாடும்
படிறனார் போலும் பந்தணை நல்லூர் நின்றவெம்பசு பதியாரே.

## 182. திருப்பயற்றூர் என்பது திருப்பயற்றங்குடி.

திருவாரூருக்கு [23] வடக்கே 4-மைலிலுள்ள வெட்டாறு என்னும் ஸ்டேஷனி லிறங்கி, அங்கிருந்து வடகிழக்கே $3\frac{1}{2}$-மைல் சென்று திருவிற்குடி [259] என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து கிழக்கே 3-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

பைரவருஷி பூசித்த ஸ்தலம்.

ஆவியா யவியு மாகி யருக்கமாய்ப் பெருக்க மாகிப்
பாவியாய்ப் பாவந் தீர்க்கும் பரமனாய்ப் பிரம னாகிக்
காவியங் கண்ண னாகிக் கடல்வண்ண னாகி நின்ற
தேவியைப் பாகம் வைத்தார் திருப்பயற் றூரனாரே.

## 183. திருப்பரங்குன்றம்:

ரெயில் ஸ்டேஷன். மதுரைக்குத் [28] தென்மேற்கு 4-மைல். முருகக்கடவுளுக்கு முக்கியமான ஆறு தலங்களிலும் முதன்மைத்து. அவர் தெய்வயானை யம்மையை மணந்த ஸ்தலமும் இதுவே. சரவணப் பொய்கை கோயிலுக்குக் கிழக்கே இருக்கிறது. மலையைச் சுற்றிவர அரைமணிநேரம் ஆகும். மலைமேற் 'காசிதீர்த்தம்'என்றொரு தீர்த்தம் இருக்கிறது. அதனுள் மீன்கள் ஊதாவர்ணமாயும் பொன்னிறமாயு மிருக்கின்றன. அவல் போட்டாற் சாப்பிடுகின்றன.

பொன்னியல் கொன்றைப் பொறிகிளர் நாகம் புரிசடைத்
துன்னிய சோதி யாகிய வீசன் றொன்மறை
பன்னிய பாட லாடலன் மேய பரங்குன்றை
யுன்னிய சிந்தை யுடையவர்க்கில்லை யுறுநோயே.

## 184. திருப்பராய்த்துறை:

திரிசிராப்பள்ளி கோட்டை ஸ்டேஷனுக்கடுத்த எழுமனூர் ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடமேற்கு $1\frac{1}{2}$-மைல் தூரம்.

இந்திரன், குபேரன், சப்தருஷிகள் இவர்கள் பூசித்த ஸ்தலம்.

அரக்க னாற்ற லழித்த அழகனைப்
பரக்கு நீர்ப்பொன்னி மன்னு பராய்த்துறை
இருக்கை மேவிய ஈசனை யேத்துமின்
பொருக்க நம்வினை போயறுங் காண்மினே.

## 185. பரிதிநியமம் என்பது பரித்தியப்பர் கோயில.

தஞ்சாவூருக்கு கிழக்கே 9-மைல் தூரமுள்ள சாலியமங்கலம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து தென்மேற்கு 3-மைல் தூரம்.

பரிதி (சூரியன்) பூசித்த ஸ்தலம்.

விண்கொண்ட தூமதி சூடி நீடு விரிபுன் சடைதாழப்
பெண்கொண்ட மார்பில்வெண் ணீறு பூசிப் பேணார் பலிதேர்ந்து
கண்கொண்ட சாயலொ டேர்க வர்ந்த கள்வர்க் கிடம்போலும்
பண்கொண்ட வண்டினம் பாடி யாடும் பரிதி நியமமே.

## 186. திருப்பருப்பதம் என்பது ஸ்ரீசைலம்.

மல்லிகார்ச்சுனபுரம் என்பதுவும் இதுவே. கர்னூல் ஜில்லாவி லுள்ள நந்தியால் என்னும் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, வடகிழக்கே 60-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். நல்ல பாதை.

நந்திதேவர் பர்வத வடிவமாகிச் சிவபெருமானைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஸ்தலம்.

பருப்ப தப்பெயர்ச் சிலாதனற் பாலகன் பரம
னிருப்ப வோர்வரை யாவனென் றருந்தவ மியற்றிப்
பொருப்ப தாகியே ஈசனை முடியின்மேற் புனைந்த
திருப்ப ருப்பதத் தற்புதம் யாவையுந் தெரிந்தான்,—என்பது கந்தபுராணம்.

அங்கண்மா லுடைய ராய ஐவரா லாட்டு ணாதே
யுங்கண்மால் தீர வேண்டி லுள்ளத்தா லுள்கி யேத்துஞ்
செங்கண்மால் பரவி யேத்திச் சிவனென நின்ற செல்வர்
பைங்கண்வெள் ளேற தேறிப் பருப்பத நோக்கி னாரே.

## 187. திருப்பழனம்:

திருவையாற்றுக்குக் [50] கிழக்கே 2-மைல் தூரத்திலுள்ளது. இது சப்தஸ்தான க்ஷேத்திரங்களில் இரண்டாவது ஸ்தலம்.

"அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே",—

என அப்பூதியடிகளின் அடிமைத் திறத்தினை அப்பர் சுவாமிகளே வியந்தேத்தியுள்ள அருமைத் தேவாரப் பதிகத்தைக் கொண்டுள்ள ஸ்தலம் விஷ்ணு (வேணுகோபால சுவாமி) சந்நிதி ஒன்றிருக்கிறது. இவ்வூரில் வாழை விசேஷம்; தலத்துக்குக் கதலிவனம் என்றும் ஒரு பெயர். இதற்குச் சமீபத்திலுள்ள திங்களூரில் அப்பூதிநாயனருடைய பிள்ளை விஷந்தீண்டி இறக்க, அப்பர்சுவாமிகள் அதை "ஒன்று கொலாம்" என்னும் திருப்பதிகம் பாடி எழுப்பி யருளினர். திங்களூர் சந்திரன் பூசித்த தலம். சந்திரனுடைய கிரணங்கள் பங்குனி, புரட்டாசி இந்த 2-மாதங்களிற் பௌர்ணமியிலும் அதற்கு முன் பின் ஆகிய 2-தினங்களிலும் சுவாமிமேற் படுகின்றனவாம்.

வஞ்சித்தென் வளைகவர்ந்தான் வாரானே யாயிடினும்
பஞ்சிக்காற் சிறகன்னம் பரந்தார்க்கும் பழனத்தான்
அஞ்சிப்போய்க் கலிமெலிய அழலோம்பும் அப்பூதி
குஞ்சிப்பூ வாய்நின்ற சேவடியாய் கோடியையே.

## 188. திருப்பழுவூர்:

திருவையாற்றிலிருந்து [50] வடக்கே அரியலூருக்குப் போகும் பாதையில் 10-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

"அந்தணர்க ளானமலை யாளரவ ரேத்தும், பந்தமலிகின்ற பழுவூ ரரனை"

என்னுந் தேவாரங் கவனிக்கற்பாலது.

எண்ணுமொரெ ழுத்துமிசை யின்கிளவி தேர்வார்
கண்ணுமுத லாயகட வுட்கிடம தென்பர்
மண்ணின்மிசை யாடிமலை யாளர்தொழு தேத்திப்
பண்ணினொலி கொண்டுபயில் கின்றபழு வூரே.

## 189. பழையாறைவடதளி:

இது பழையாறை என்றும் வடதளி என்றும் இரண்டு ஸ்தலங்களாக இருக்கின்றது. பட்டீச்சுரத்திலிருந்து [180]கிழக்கே ½-மைல் சென்று வடதளி என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து ½-மைல் சென்று பம்பைப்படை என்னும் ஊரைச்சேர்ந்து, தெற்கே திரும்பி

திருமலைராயன் ஆற்றைக்கடந்து $\frac{1}{4}$-மைல் சென்றால் பழையாறையை அடையலாம். பழையனூர்-ஆலங்காட்டைப் பாடியிருப்பதுபோல இந்த இரண்டு ஸ்தலங்களையும் ஒரே பதிகத்திற் சேர்ந்துப் பாடியிருக்கிறது.

வடதளியிற் சுவாமி பெயர்–தர்மபுரீசுரர். தேவியார்–விமல நாயகி. இந்த ஸ்தலம் காமதேனுவின் புத்திரியாகிய விமலி என்பவளாற் பூசிக்கப்பட்டது. ஆலயம் ஒரு மேட்டின்மே லிருக்கிறது. இங்கு சுவாமி அம்மை தவிர வேறு விக்கிரகம் ஒன்றும் இல்லை. இவ்வாலயத்துக்குச் சமீபத்தில் துறையூர் - சிவப்பிரகாச சுவாமிகளுடைய சமாதியுள்ள கோயில் ஒன்றிருக்கிறது.

பழையாறை—சந்திரன் பூசித்த ஸ்தலம். அமர்நீதி நாயனார் வாழ்ந்திருந்த பதி.

காமதேனுவின் புத்திரிகளுட் பட்டி பூசித்தது பட்டீச்சுரம்; விமலி பூசித்தது பழையாறை வடதளி;சபளி பூசித்தது திருமேற்றளி-(கைலாச நாதர் - சபளநாயகி). நந்தினி பூசித்தது முழையூர் (பரசுநாதேசுரர் - ஞானம்பிகை).

> நீதி யைக்கெட நின்றம ணேயுணுஞ்
> சாதி யைக்கெடு மாசெய்த சங்கரன்
> ஆதி யைப்பழை யாறை வடதளிச்
> சோதி யைத்தொழு வார்துயர் தீருமே.

## 190. பள்ளியின்முக்கூடல்:

திருவாரூருக்கு [23] வடகிழக்கு 3 - மைல். திருவாரூரிலிருந்து கிழக்கே $1\frac{1}{2}$-மைல் சென்று கயாகரை என்னும் ஸ்தலத்தை யடைந்து, அங்கிருந்து வடக்கே $1\frac{1}{2}$-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். வண்டி போவதுகஷ்டம். கடைசியில் $\frac{1}{2}$-மைல் வயல்வழியே செல்லவேண்டும். திருவாரூருக்கு வடக்கே 4-மைலிலுள்ள வெட்டாறு என்னும் ஸ்டேஷனிலிருந்து தென்கிழக்கே 1-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

கோயில் சிறிது. திருக்குளம் கோயிலுக் கெதிரிலிருக்கிறது.

[கயாகரையை கேகரை என்று சொல்லுகிறார்கள். கேகரையிலிருக்கும் சிவலிங்கம் இராமர் பூசித்தது. கோயில் சிறிது. சிவலிங்கம் வெகு பளபளப்பா யிருக்கிறது. இவ்வாலயத்துக்கு மேற்பக்கத்தில் இராமசாமி கோயிலுமிருக்கிறது.]

பூதியனைப் பொன்வரையே போல்வான் தன்னைப்
புரிசடைமேற் புனல் கரந்த புநிதன் தன்னை
வேதியனை வெண்காடு மேயான் தன்னை
வெள்ளேற்றின் மேலானை விண்ணோர்க் கெல்லாம்
ஆதியனை யாதிரைநன் னாளான் தன்னை
யம்மானை மைம்மேவு கண்ணி யாளோர்
பாதியனைப் பராய்த்துறையிற் கூடலானைப்
பயிலாதே பாழேநா ளுழன்ற வாறே.

## 191. திருப்பறியலூர் என்பது பரசலூர்.

மாயூரம் ரெயில் ஸ்டேஷனிலிறங்கி வடகிழக்கு 4-மைல் தூரஞ் சென்று விளநகர் [257] என்னும் ஸ்தலத்தை அடைந்து, பின்னும் 2-மைல் தூரம் அதே பாதையிற்சென்று, அங்கே தெற்கே திரும்பி 1-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

அஷ்டவீரட்டத்திலொன்று. தக்கன் செய்த யாகத்துக்கு வந்திருந்த மாயன் முதலிய விண்ணவர்களின் தீமையைப் பறித்த ஸ்தலம்.

"படிங்கிளர் நுங்கள்தீமை பறி செய்தோ மித்தேத் தற்றால்
தயங்குமித் தானமென்றும் பறியலூரென் றொருபேர் சார்க."—மாயூரப் புராணம்.

வளங்கொண் மலர்மே லயனோடு வண்ணன்
றுளங்கு மனத்தார் தொழுத்தழ லாய்நின்று
ளிளங்கொம்ப ரோடோ ளிணைந்தும் பிணைந்தும்
விளங்குந் திருப்பறியல் வீரட்டத் தானே.

## 192. வன்பாத்தான் பனங்காட்டூர் என்பது திருப்பனங்காடு.

காஞ்சிபுரத்திலிருந்து [56] தெற்கே 4-மைல் சென்று ஐயன்குளம் என்னும் கிராமத்தை அடைந்து, அங்கிருந்து மேற்கே (ஆற்காடு) ஆறுகாட்டுக்குப் போகும் பாதையில் $3\frac{1}{2}$-மைல் சென்று அங்கு வடக்கே திரும்பி $\frac{3}{4}$-மைல் தூரஞ்சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். வழியில் வேகவதி ஆற்றையும் பாலாற்றையுங் கடக்க வேண்டும். நல்ல பாதை. வன்பாக்கம் என்னும் கிராமம் சமீபமாய் (மேற்கே $1\frac{1}{2}$-மைல் தூரத்தில்) இருக்கிறபடியால் இந்தத் தலத்துக்கு வன்பாத்தான் பனங்காட்டூர் என்னும் பெயருண்டாயிற்று.

இந்த ஸ்தல ஆலயத்தில் இரண்டு சந்நிதிக ளுண்டு. தெற்கிலிருப்பது அகஸ்தியர் பூசித்தது; சுவாமி-தாளபுரீசுரர்; தேவியார்-ஸ்தூலகோமளபதாம்பாள். வடக்கிலிருப்பது புலஸ்தியர் பூசித்தது; சுவாமி-கிருபாநாதேசுரர்; தேவியார் - கிருபாநாயகி.

டாகங்கை-தீர்த்தம். கோயில் மெத்த சிலமாயிருக்கிறது. ஆலயத்துக் கெதிரிலிருந்த இரண்டு பனைமரங்களும் விழுந்துவிட்டன. ஒரு சிறு பனங்கன்று மாத்திர மிருக்கிறது.

விடையின்மேல் வருவானை வேதத்தின் பொருளானை
யடையிலன் புடையானை யாவர்க்கு மறியொண்ணா
மடையில்வா ளைகள்பாயும் வன்பார்த்தான் பனங்காட்டூர்ச்
சடையிற்கங் கைதரித்தானைச் சாராதார் சார்வென்னே.

## 193. திருப்பனந்தாள்:

கும்பகோணத்துக்கு [97] வடகிழக்கு 10-மைல் தூரம். நல்ல பாதை. இவ்வூர் ஆலயத்துக்குத் தாடகேச்சுரம் என்று பெயர்.

கோயில் பெரிது. கோபுரங்களும் பெரியன. தாடகை யென்னும் ஒருமாதின் அன்புக்காகச் சாய்ந்திருந்த சிவலிங்கப் பெருமான் யானை, சேனை முதலியவைகள் கயிற்றைக் கட்டிக்கொண்டு இழுத்தும் நிமிராமற், குங்குலியக்கலய நாயனார் அக்கயிற்றைத் தம்முடைய கழுத்திற்கட்டி யிழுத்தவுடனே அவருடைய அன்புக்காக நிமிர்ந்தரு ளிய ஸ்தலம். பிராகாரத்தில் 2-ஆண் பனைமரங்கள் இருக்கின்றன.

சூழ்தரு வல்வினையு முட ரோன்றிய பல்பிணியும்
பாழ்பட வேண்டுதிரேன் மிக வேத்துமின் பாய்புனலும்
போழிள வெண்மதியும் மனல் பொங்கர வும்புனைந்த
தாழ்சடை யான்பனந்தாட் டிருத் தாடகை யீச்சுரமே.

## 194. திருப்பனையூர்:

திருவாரூரிலிருந்து [23] வடக்கே $6\frac{1}{2}$-மைல் தூரஞ்சென்று ஆண்டிப் பந்தல் என்னும்கிராமத்தைச் சேர்ந்து, அங்கிருந்து கிழக்கே 1-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். மேலே சொன்ன $6\frac{1}{2}$-மைல் தூரமும் நல்லபாதை. மிகுதி 1-மைலில் $\frac{1}{2}$-மைல் நல்லவழிதான். மற்ற $\frac{1}{2}$-மைலும் வயல்வழியே போகவேண்டும்.

சிவபெருமான் திருக்கூத்தோடு சுந்தரமூர்த்தி நாயனாருக்குக் காட்சி கொடுத்தருள, அவர் 'மாடமாளிகை' என்னுந் திருப்பதிகம் பாடித்துதித்த ஸ்தலம். திருப்பனையூருக்கு வடக்கே 3-மைலில் திருப் புகலூரும், [203] தென்மேற்கு $1\frac{1}{2}$-மைலில் திருவிழிமிழலையும் [261] இருக்கின்றன. அமிர்த புஷ்கரணி தீர்த்தம் கோயிலுக் கெதிரிலிருக் கிறது. கோயிலுக்குட் பிராகாரத்திற் பனைவிருக்ஷம் இரண்டு இருக் கின்றன. பர்ாசர முனிவர் பூஜைசெய்த தலம். கரிகால் சோழன் வளர்ந்த இடமாம். அவனுக்குப் பிள்ளையார் துணையிருந்தாராம். அதனாற் பிள்ளையாருக்குத் 'துணையிருந்த பிள்ளையார்' என்று பெயர்.

மாடமாளிகை கோபுரத்தொடு மண்டபம்வள ரும்வளர்பொழிற
பாடல்வண்டறையும் பழனத் திருப்பனையூர்த்
தோடுபெய்தொருகாதினிற்குழை தூங்கத்தொண்டர்கடுள்ளிப்பாடநின்
ருடுமாறுவல்லா ரவரே யழகியரே.

## 195. திருப்பாசூர்:

சென்னபட்டணத்துக்கு மேற்கு 26-மைலிலுள்ள திருவெவ்வுளூர் ஸ்டேஷனி லிறங்கி, வடக்கே $2\frac{1}{2}$-மைல் சென்று திருவெவ்வுளூர் க்ஷேத்திரத்தை அடைந்து அங்கிருந்து மேற்கே 2-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம். நல்ல பாதை. திருவெவ்வுளூர் ஸ்டேஷனுக்கடுத்த கடம்பத்தூர் ஸ்டேஷனி லிறங்கி வடக்கே $3\frac{1}{2}$-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை யடையலாம். சாதாரணபாதை.

சிவபெருமான் ஒரு மூங்கிலடியில் தோன்றியருளிய ஸ்தலம். சமணர்கள், கரிகால் சோழனுக்கு எதிரியான ஒரு குறும்ப ராஜனுக்கு உதவியாக, ஒரு குடத்தில்விட்டு சோழனிடம் அனுப்பின பெரும்பாம்பை அச்சோழனுக்கு உதவியாகச் சிவபெருமான் எடுத்து ஆட்டியருளிய ஸ்தலம். இதனைத் திருநாவுக்கரசு நாயனார் இத்தலத்துக்கு அருளிச்செய்த திருக்குறுந்தொகையில் 4-ஆவது செய்யுளில், "நீளரவந்தனைப், பற்றி யாட்டுவர் பாசூரடிகளே",-என்றும்,9-ஆவது செய்யுளில், 'தீயதோர், பாம்பும் ஆட்டுவர் பாசூ ரடிகளே',—என்றும், திருத்தாண்டகத்தில் 3-ஆவது செய்யுளிற், "படவரவொன்றது வாட்டிப் பாசூர்மேய, பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்த வாறே.",-என்றும் சிறப்பித்துக் கூறியிருக்கிறார்.*

*சாம்பர் பூசுவர் தாழ்சடை கட்டுவர்
ஓம்பன் மூதெரு தேற மொருவனூர்
தேம்பல் வெண்மதி சூடுவர் தீயதோர்
பாம்பு மாட்டுவர் பாசூ ரடிகளே.

## 196. திருப்பாச்சிலாச்சிராமம் என்பது திருவாசி.

திரிசிராப்பள்ளி மலையிலிருந்து வடக்கே 3-மைல் தூரஞ் சென்று திரு ஆனைக்கா[31]என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து வடமேற்கே 3-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் கொல்லிமழவன் என்னும் அரசனுடைய குமாரத்திக்கு முயலகன் என்னும் வியாதியைத் தீர்த்தருளிய ஸ்தலம்.

பொங்கிள நாகமோ ரேகவ டத்தோ டாமைவெண் ணூல்புனை கொன்றை
கொங்கிள மாலைபு னைந்தழ காய குழகர்கொ லாயிவ ரென்ன
வங்கிள மங்கையோர் பங்கினர் பாச்சி லாச்சிரா மத்துறை கின்ற
சங்கொளி வண்ணரோ தாழ்குழல் வாடச் சதிர்செய்வ தோவிவர் சார்வே.

## 197. திருப்பாண்டிக் கொடுமுடி:

இஃது இப்போது 'கொடுமுடி' என வழங்கி வருகிறது. ரெயில் ஸ்டேஷன். திரிசிராப்பள்ளிக்கு [132] மேற்கு 62-மைல்; கரூருக்கு [76] மேற்கு 17-மைல்; ஈரோட்டுக்குத் தென்கிழக்கு 23-மைல்.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் நமச்சிவாயத் திருப்பதிகம் பாடியருளிய ஸ்தலம்*. காவிரிதீரத்தி லுள்ளது. இதனைத் 'திரிமூர்த்தி ஸ்தலம்' என்று சொல்லுகிறார்கள். கோவில் பெரிது. ஸ்ரீ ரங்கநாதர் சந்நிதி பிரத்தியேகமாகக் கோயிலுக் குள் இருக்கிறது.

* மற்றுப்பற்றெனக் கின்றிநின் திருப் பாதமேமனம் பாவித்தேன்
பெற்றலும்பிறந் தேனினிப்பிற வாததன்மைவந் தெய்தினேன்
கற்றவர்தொழு தேத்துஞ்சீர்க்கறை யூரிற்பாண்டிக்கொடுமுடி
நற்றவாவுனை நான்மறக்கினுஞ் சொல்லுநா நமச்சிவாயவே.

## 198. பாதாளீச்சுரம்:

இது பாமணி யென வழங்கிவருகிறது; நீடாமங்கலம் ஸ்டேஷனுக்கு 8-மைல் தூரத்திலுள்ள ராஜமன்னார் கோயிலுக்கு வடக்கு 1½-மைல். பாதை நன்றாயில்லை.

பதஞ்சலிபோலப் பாம்புருவுள்ள தனஞ்சயருஷி பூசித்த ஸ்தலம். அம்முனிவருடைய உருவம் கோயிலிலிருக்கிறது.

விண்டலர் மத்தமொ டுமிளி ரும்மிள நாகம்வன்னி திகழ்
வண்டலர் கொன்றைநகு மதிபுல்குவார் சடையான்
விண்டவர் தம்புரமூன் றெரிசெய்துரை வேதநான்கு மவை
பண்டிசை பாடலினா னுறைகோயில் பாதாளே.

## .99. திருப்பாதிரிப்புலியூர்:

ரெயில் ஸ்டேஷன். கூடலூருக்கு வடக்கு 3-மைல் தூரம். கெடில நதியின் தென்கரையி லிருக்கிறது.

வியாக்கிரபாதர் பூசித்தமையின் இது வடபுலியூர் எனவும் சொல்லப்படும். முடக்காலுள்ள முயல் ரூபத்தைச் சாபத்தினாற் பெற்ற மங்கணர் என்னும் முனிவர் அவ்வுரு நீங்கப்பெற்ற ஸ்தலம்.

திகளைப் பாதிரிப்புலியூர்ப் புராணத்திலும், தேவாரத்திலுங்காண்க*. திருநாவுக்கரசு நாயனாரைச் சமணர்கள் கற்றூணிற் கட்டிக் கடலிற் றள்ளிவிட, அவர் 'சொற்றுணை வேதியன்" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகத்தைப் போதிக் கரையேறப்பெற்ற ஸ்தலம். அந்த இடம் 'கரையேறவிட்ட குப்பம்' என்று நாளைக்கும் சொல்லப்படுகிறது. நாயனார் கரையேறின பின்பு "ஈன்றாளுமாய்" என்னும் பதிகம்பாடிச் சுவாமியைத் துதித்துச் சிலநாள் எழுந்தருளியிருந்த ஸ்தலம்.

* முன்னநின்ற முடக்கால்முயற்கருள் செய்துநீள்
புன்னைநின்று கமழ் பாதிரிப்புலி யூருளான்
றன்னைநின்று வணங் குந்தனைநெடு மில்லிகள்
பின்னைநின்றபிணி யாக்கையைப்பெறு வார்களே.

## 200. திருப்பாம்புரம்:

பேரளம் ஸ்டேஷனி லிறங்கி மேற்கே $4\frac{1}{2}$–மைல் சென்றால் இத் தலத்தை அடையலாம். வழியில் 1–மைலில் மீயச்சூர் [234] இருக்கிறது;

கோயில் நிலமாயிருக்கிறது. நாகராஜன் பூஜை செய்த ஸ்தலம்; நாகராஜாவின் மூலவிக்கிரகம் உற்சவவிக்கிரகம் இரண்டும் இருக்கின்றன.

கடிபடு கமலத் தயனொடு மாலுங் காதலோ டடிமுடி தேடச்
செடிபடு வினைகள் தீர்த்தருள் செய்புந் தீவண்ண ரெம்முடைச் செல்வர்
முடியுடை யமரர் முனிகணத் தவர்கள் முறைமுறை யடிபணிந் தேத்தப்
படியது வாகப் பாவையுந் தாமும் பாம்புர நன்னக ராரே.

## 201. திருப்பாலைத்துறை:

கும்பகோணத்துக்குத் தெற்கேயுள்ள பாபநாசம் என்னும் ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடகிழக்கு 1–மைல்.

சிவபெருமான் தாருகாவனருஷிகள் அனுப்பிய புலியை யுரித்துத் தரித்தருளிய ஸ்தலம். அம்மையார் சந்நிதி பிரத்தியேகமாய்த் தென்னண்டை இருக்கிறது.

கவள மால்களிற் றின்னுரி போர்த்தவர்
தவள வெண்ணகை மங்கையோர் பங்கினர்
திவள வானவர் போற்றித் திசைதொழும்
பவள மேனியர் பாலைத் துறையரே.

**202. திருப்பாற்றுறை:**

திரு ஆனைக்காவிலிருந்து[31] கிழக்கு 5-மைல். மார்க்கண்டருஷி பூசிக்கும்பொழுது அபிஷேகத்துக்குப் பசும்பால் கிடையாமல் வருந்த சிவபெருமான் பால் பெருகும்படி அநுக்கிரகித்த ஸ்தலம்.

பூவுந் திங்கள் புனைந்த முடியினை
ஏவி னல்லா ரெயிலெய்தார்
பாலந் நீர்புனன் மல்கிய பாற்றுறை
யோவென் சிந்தை யொருவரே.

**203. திருப்புகலூர்:**

நன்னிலம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து கிழக்கே 4-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம் சாதாரணமான பாதை.

அக்கினி பூசித்த ஸ்தலம். பெரிய கோயில். பெரிய கோபுரம். தென்பக்கந் தவிர மற்ற பக்கங்களில் எல்லாம் கருங்கல்லினாற் கட்டிய அகழி இருக்கிறது. சுவாமியின் (கோணப்பிரானுடைய) உருவம் சற்று சாய்ந்திருக்கிறது. சந்திரசேகரர் சந்நிதி விசேஷம். அதற்கு நேராக அக்கினிபகவான் உருவம் இருக்கிறது.

திருநாவுக்கரசுநாயனார் முத்திபெற்ற ஸ்தலம். வாதாபி கணபதிக்குப் பக்கத்தில் அப்பர்சுவாமிகள் திருவுருவம் இருக்கிறது. முன்பிராகாரத்திற் கீழ்ப்பக்கத்திற் சுவாமி சிங்கரூபமாய் அப்பரை விழுங்குகிற பாவனை சிலையிற் காட்டப்பட்டிருக்கிறது. திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம் இவ்வாலயத்துக்குள் இருக்கிறது. சுவாமிக்குப்பலவிதபுஷ்பமாலை கட்டிக்கொடுக்குந் திருத்தொண்டு செய்து வந்த முருகநாயனாருடைய ஸ்தலம். சுந்தரமூர்த்திநாயனார் நித்திரை செய்யும்போது தலையின் கீழ் வைத்துக்கொண்டிருந்த செங்கற்களெல்லாம் செம்பொற்கற்களாயிருக்கக்கண்டு 'தம்மையே புகழ்ந்திச்சைபேசினும்' என்னுந் திருப்பதிகம்பாடி, சுவாமியைத் துதிசெய்த ஸ்தலம்.

இத்தலத்துத் தேவாரத்திற், 'புன்னைப் பொழிற்புகலூரண்ணல் செய்வன கேண்மின்களோ',—'புன்னைத் தாது பொழிற்புகலூரரை',—என்பதனால் ஸ்தலவிருக்ஷம் புன்னை என்பதும், 'கா நாலைந்துடைத், தோணற் பிரானை வலிதொலைத் தோன்றொல்லை நீர்ப்புகலூர்க், கோணப் பிரானைக் குறுகக் குறுகா கொடுவினையே',—என்பதனாற் சுவாமிபெயர் கோணப்பிரான் என்பதும், 'பெருந்தாழ் சடைமுடி மேற்பிறை சூடிக், கருந்தாழ் குழலியுந் தாமுங் கலந்து',—என்பதனால்

தேவியார் பெயர் கருந்தாழ்குழலி என்பதும், வர்த்தமானீச்சுரத்துப் பதிகத்தில் "தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையுங், கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன்செய் கோலம்",—என்பதனுல் முருகநாயனுருடைய திருப்பணியின் சிறப்பு இத்தன்மைத்து என்பதும் புலப்படுகின்றன.

அங்கமே பூண்டா யனலாடினு யாதிரையா யானிழலா யானே றூர்ந்தாய்
பங்கமொன்றில்லாத படர்சடையினுய் பாம்போடுதிங்கள் பகைதீர்த்தாண்டாய்
சங்கையொன்றின்றியேதேவர்வேண்டச் சமுத்திரத்தினஞ்சுண்டுசாவாமூவாச்
சிங்கமே யுன்னடிக்கே போதுகின்றேன் திருப்புகலூர் மேவிய தேவதேவே.

## 204. திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம் :

இவ்வாலயம் திருப்புகலூர் ஆலயத்துக்குள் வடபுறத்தி லிருக்கிறது. திருப்புகலூருக்குச் [203] சொல்லியிருப்பதைப் பார்க்க.

வர்த்தமானேசுரர் மூலலிங்கமாகிய அக்கினீசுரருக்கு அடுத்த வட பக்கத்தில் இருக்கிறார். வர்த்தமானேசுரர் சந்நிதியில் முருக நாயனுர் திருவுருவம் இருக்கிறது.

தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையுங்
கொண்டு கொண்டடி பரவிக் குறிப்பறி முருகன்செய் கோலங்
கண்டு கண்டுகண் குளிரக் களிபரந் தொளிமல்கு கள்ளார்
வண்டு பண்செயும் புகலூர் வர்த்தமா னீச்சுரத் தாரே.

## 205. திருப்புத்தூர் :

அறந்தாங்கி ரெயில் ஸ்டேஷனிலிருந்து 27-மைல் தூரம். பாதி தூரம் நல்ல வழி.

மதுரைக்குக் கிழக்கே 27-மைலிலுள்ள சிவகங்கை என்னும் ஊரைச்சேர்ந்து, அங்கிருந்து வடக்கே $16\frac{1}{2}$-மைல் சென்று, திருக்கோஷ்டியூர் என்னும் விஷ்ணுக்ஷேத்திரத்தையடைந்து, அங்கிருந்து வடக்கே $5\frac{1}{2}$-மைல் சென்றாலும் திருப்புத்தூரை அடையலாம்.

மானமதுரை ரெயில் ஸ்டேஷனுக்கு வடக்கு 11-மைலில் சிவகங்கை இருக்கிறது. திருப்புத்தூருக்கு வடமேற்கு 15-மைலில் பிரான்மலை என்று வழங்கும் கொடுங்குன்றமும் [111], திருப்புத்தூருக்குக் கிழக்கு 7-மைலில் குன்றக்குடி என்னும் சுப்பிரமணிய சுவாமி க்ஷேத்திரமும் இருக்கின்றன.

கோயில் பெரிது. லக்ஷ்மி பூசைசெய்த ஸ்தலம். வயிரவர் சந்நிதி விசேஷம். சபாபதி விக்கிரகமும் சிவகாமியம்மன் விக்கிரகமும்

சிலையிலிருக்கின்றன. விஷ்ணுவுக்கும் ஒரு சந்நிதி யிருக்கிறது கோயிலுக்கு வடக்கே ஸ்ரீதளி தீர்த்தமும் கிழக்கே சிவகங்கையும் இருக்கின்றன.

ஏடேறு மலர்க்கமலத் தயனு மாலு
மிந்திரனும் பணிந்தேத்த விருக்கின் றான்காண்
தோடேறு மலர்க்கடுக்கை வன்னி மத்தந்
துன்னியசெஞ் சடையான்காண் கேடர் சங்க
மாடேறி முத்தீனுங் கானல் வேலி
மறைக்காட்டு மாமணிகாண் வளங்கொண் மேதி
சேடேறி மடுப்படியுந் திருப்புத்தூரிற்
றிருத்தளியான் காணவனென் சிந்தை யானே.

## 206. திருப்புள்ளமங்கை என்பது பசுபதிகோயில்.

தஞ்சாவூருக்கு வடகிழக்கு 11-மைலிலுள்ள ஐயம்பேட்டை ரெயில் ஸ்டேஷனிலிறங்கி மேற்கே ½-மைல்சென்று சக்கரப்பள்ளி யென்னும் ஸ்தலத்தைச் சேர்ந்து அங்கிருந்து பின்னும் 1½-மைல் மேற்கே சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

தேவர்கள் அமுதம் கடைந்தபோது உண்டான விஷத்தைச் சிவ பெருமான் உண்டு திருமிடற்றில் அடக்கியருளிய ஸ்தலம்.

கறையார்மிட றுடையான்கமழ் கொன்றைச்சடை முடிமேற்
பொறையார்தரு கங்கைப்புன லுடையான்புள மங்கை
சிறையார்தரு களிவண்டறை பொழில்சூழ்திரு வாலந்
துறையானவ னறையார்கழல் தொழுமின்றுதி செய்தே.

## 207. புள்ளிருக்குவேளூர் என்பது வைத்தீசுரன் கோயில்.

ரெயில் ஸ்டேஷன்; சீகாழிக்குத் [88] தென்மேற்கு 3½-மைல்.

சம்பாதி-ஜடாயு, இருக்குவேதம், முருகக்கடவுள், சூரியன் இவர்கள் பூசித்த ஸ்தலம். 'புள்ளினார் பணி புள்ளிருக்கு வேளூர்,—'தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர், புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே',—என்பன தேவாரம். இந்தத்தல ஆலயத்துக்குள் இருக்கும் முத்துக்குமாரசுவாமி சந்நிதி மிகப் பிரபலமானது. கிருத்திகை தினங்களில் அடியார்கள் திரளாய்ச் செல்கிறார்கள்.

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடந்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே.

## 208. திருப்புறம்பயம்:

கும்பகோணத்துக்கு வடமேற்கு 4-மைலிலுள்ள திரு இன்னம்பர் [42] என்னும் ஸ்தலத்தை அடைந்து அங்கிருந்து வடக்கே சுமார் 2-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். புறம்பயத்துக்குத் தெற்கே மண்ணியாறும் வடக்கே கொள்ளிடமும் இருக்கின்றன.

பிரளயத்துக்குப் புறம்பாய் இருந்தமையாற் புறம்பயம் என்று பெயர் உண்டாயிற்று; (புறம்பு + அயம் = நீர்). ஒரு வணிக கன்னிகைக்குக் குறித்திருந்த புருஷன் பாம்பு கடித்து இறக்க, அவனைத் திருஞானசம்பந்த சுவாமிகள் எழுப்பியருளிய ஸ்தலம்.

"திறம்பய னுறும்பொரு டெரிந்துணரு நால்வர்க்
கறம்பய னுரைத்தனை புறம்பய மமர்ந்தோய்",—

என்னும் தேவாரத்தாலும், 'புறம்பய மதனி லறம்பல அருளியும்' என்னும் திருவாசகத்தாலும் சிவபிரான் இத்தலத்தில் நால்வர்க்கு அறத்தின் பயனை உணர்த்தினதாகத் தெரிகிறது*. செட்டிப் பெண்ணுக்குச் சாக்ஷி சொன்ன காரணத்தாற் சுவாமிக்குச் சாக்ஷிநாதர் என்று பெயர். புன்னைவனநாதர் என்றும் பெயர். புன்னைமரம் இருக்கிறது. விநாயகர் வெண்மைநிறம்; பிரளயங்காத்த பிள்ளையார் என்று பெயர். கோயிலுக்குக் கீழ்ப்புறத்தில் திருக்குளமிருக்கிறது. அதன் கரைமேல் ஒரு தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிருக்கிறது. கோயிலுக்கு விறகு கொண்டுவந்த ஒரு நீசனுக்கு சுவாமி அந்த ரூபமாய் வெளிப்பட்டு அநுக்கிரகம் செய்தாராம்.

* மறம்பய மலைந்தவர் மதிற்பரி சறுத்தனை
நிறம்பசுமை செம்மையொ டிசைந்துன தீருமை
திறம்பய னுறும்பொரு டெரிந்துணரு நால்வர்க்
கறம்பய னுரைத்தனை புறம்பயம மர்ந்தோய்.

## 209. புறவார்பனங்காட்டூர் என்பது பனையபுரம்.

விழுப்புரம் ஸ்டேஷனுக்கு வடக்கு 5½-மைல். நல்ல வழி.

இந்த ஸ்தலத்திற் பிரதி வருஷமும் சித்திரைமீ முதல் தேதி முதல் ஏழாந்தேதி வரையில் ஒவ்வொரு நாள் காலையிலும் சூரியன் உதயமாகும்போது அதன் கிரணம் முதலிற் சுவாமி மேலும் பின்பு தேவியார் மேலும் விழுகின்றது.

சுவாமி சிபிச் சக்கரவர்த்திக்குத் தரிசனங் கொடுத்தருளிய ஸ்தலம்.

விண்ணமர்ந்தன மும்மதில்களை வீழவெங்கணை யாலெய்தாய்விரி
பண்ணமர்ந்தொலிசேர் புறவார் பனங்காட்டூர்ப்
பெண்ணமர்ந்தொரு பாகமாகிய பிஞ்ஞகாபிறை சேர்நுதலிடைக்
கண்ணமர்ந்தவனே கலந்தார்க் கருளாயே.

## 210. திருப்புனவாயில்:

அறந்தாங்கி ரெயில்ஸ்டேஷனிலிருந்து சுமார் 30-மைல். வழியில் திருப்பெருந்துறை (ஆவிடையார்கோவில்), மீமிசல் என்னும் ஊர்கள் இருக்கின்றன. திருப்பெருந்துறைவரையும் (8-மைல்) நல்லவழி.

திரு ஆடானை [19] என்னும் ஸ்தலத்திலிருந்து வடக்கே 12-மைல். திருவாடானைக்குச் சொல்லியிருக்கும் வழியைப்பார்க்க [பக்கம்-51].

இத்தலத்திற்குப் பழம்பதி, விருத்தபுரி எனவும் பெயர் உண்டு.

"பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்டறாப் புனவாயிலே."—

என்பது தேவாரம். "கற்குன்றுந் தூறுங் கடுவெளியுங் கடற்கானல் வாய்ப், புற்கென்று தோன்றிடு மெம்பெருமான் புனவாயிலே" என்ற தேவாரத்தின் உண்மை இன்றும் பிரத்தியக்ஷமாய்க் காணலாகும். கோயில் பெரிது. நான்கு வேதங்களும் பூசித்த ஸ்தலம். நந்தியும் மூலலிங்கமும் ஆவிடையாரும் அதிக பெரிதாய் இருக்கின்றன. சுவாமிக்கு 3-முழ துணி வேண்டும்; ஆவிடையாருக்கு 30-முழ துணி வேண்டும்;'மூன்று முழமும் ஒரு சுற்று முப்பது முழமும் ஒரு சுற்று' என்று சொல்வது இந்தத் தலத்து சுவாமியைப் பற்றித்தான். லக்ஷ்மி தீர்த்தமும் பிரமதீர்த்தமுங் கோயிலுக்கெதிரிலிருக்கின்றன. பாண்டி 14-தலமும் திருப்புனவாயிலிலேயே இருப்பதாக ஐதிஹ்யம். ஊருக்குத் தெற்கில் பாம்பாறு (சர்ப்பநதி) ஓடுகிறது.

சித்த நீநினை யென்னொடு சூளறும் வைகலு
மத்த யானையி னீருரி போர்த்த மணாளனூர்
பத்தர் தாம்பலர் பாடிநின் றாடும் பழம்பதி
பொத்தி லாந்தைகள் பாட்டறாப்புன வாயிலே.

## 211. திருப்புன்கூர்:

வைத்தீசுரன்கோயில் [207] ரெயில் ஸ்டேஷனுக்கு மேற்கு 2-மைல்.

திருநாளைப்போவார் தம்மை நேரே தரிசித்து வணங்கும் பொருட்டு, சுவாமி தமக்கு முன்னிருந்த நந்திதேவரைச் சற்று விலகியிருக்கும்படி செய்தருளிய ஸ்தலம்.

சுந்தரமூர்த்தி நாயனாரும் ஏயர்கோன் கலிக்காம நாயனாரும் நண்புள்ளவர்களான பின்பு இருவருமாகச் சென்று வணங்கிய ஸ்தலம். கலிக்காம நாயனார் அநேகந் திருப்பணிகள் செய்த ஸ்தலம். கலிக்காமநாயனார் பொருட்டுச் சிவபெருமான் ஈராறுவேலி இருமுறை கொண்டு மழையின்றி உயிர்கள் வருந்திய காலத்து மழைபெய்வித்து உலகை உய்வித்த ஸ்தலம்.* இவ்வுண்மை இத்தலத்துத் தேவாரப் பதிகத்தில் "வையக முற்றும்" என்னும் இரண்டாவது செய்யுளானும், "ஏத நன்னில மீராறு வேலி யேயர்கோன்" என மூன்றும் செய்யுளில் உள்ள அடைமொழியானும், கோயிற்றிருப் பண்ணியர் விருத்தத்தில்—

> பொன்னம் பலத்துறை புண்ணிய னென்பர் புயன்மறந்த
> கன்னன்மை தீரப் புனிற்றுக் கலிக்காமற் கன்று புன்கூர்
> மன்னு மழைபொழிந் தீராறு வேலிகொண் டாங்கவற்கே
> பின்னும் பிழைதவிர்த் தீராறு வேலிகொள் பிஞ்ஞகனே.—

என நம்பியாண்டார் நம்பி கூறுதலானும் நன்கு விளங்கும்.

கலிக்காம நாயனாருடைய வாசஸ்தானமாகிய திருப்பெருமங்கலம் திருப்புன்கூருக்குச் சமீபத்திலிருக்கிறது.

*வையக முற்று மாமழை மறந்து வயலில் நீரிலை மாநிலந் தருகோம்
உய்யக் கொள்கமற் றெங்களை யென்ன வொளிகொள் வெண்முகி லாய்ப்பரந் தெங்கும்
பெய்யு மாமழைப் பெருவெள்ளந் தவிர்த்துப் பெயர்த்தும் பன்னிரு வேலிகொண் டருளுஞ்
செய்கை கண்டுநின் றிருவடி யடைந்தேன் செழும்பொ ழிற்றிருப் புன்கூரு ளானே.

## 212. திருப்பூந்துருத்தி :

தஞ்சாவூரிலிருந்து வடக்கே திருவையாற்றுக்குப் போகும் வழியில் 6-மைல் சென்று திருக்கண்டியூரை [68] அடைந்து, அங்கிருந்து மேற்கு 2-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். இதற்கு வடக்கு 1-மைலில் திருநெய்த்தானம் [174] இருக்கிறது.

சோழராஜா துருத்தியை வைத்துப் பூசிக்கச் செய்ததனால் திருப்பூந்துருத்தி என்று பெயர்வந்ததென்பர். பட்டீச்சுரத்திற் போல நந்திகள் விலகி இருக்கின்றன. முதலிலிருக்கும் நந்தி பெரிதாயும், அழகாயும் இருக்கிறது. அவை திருஞான சம்பந்த

சுவாமிகளுக்காக விலகினவாம். அப்பர் சுவாமிகள் ஒரு திருமடங் கட்டுவித்து பலவகைத் திருத்தாண்டகங்களும் திரு அங்கமாலை முதலிய திருப்பதிகங்களும் பாடிக் கொண்டிருந்த ஸ்தலம். பாண்டி நாட்டுக்குச் சென்று சமணரை வென்று திரும்பி வந்த திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள், அப்பர் சுவாமிகள் இங்கிருத்தலைக் கேள்வியுற்று வந்து அவருடன் சிலகாலம் இருந்தருளிய திருப்பதி. அப்பர்சுவாமிகள் இருந்த மடம் என்று ஒரு மடத்தை இன்றுங் காட்டுகிறார்கள். அது இடிந்து கிடக்கிறது. சப்த ஸ்தானங்களில் ஆறுவது ஸ்தலம். தேவேந்திரனும் காசிபரும் பூசித்த ஸ்தலம்.

அருகடை மாலையுந் தானுடை யானழ காலமைந்த
உருவுடை மங்கையுந் தன்னொரு பாலுல காயுநின்றான்
பொருபடை வேலினன் வில்லினன் பூந்துருத் தியுறையும்
திருவுடைத் தேச மதியனை யானடி போற்றுவதே.

## 213. திருப்பூவணம் :

ரெயில் ஸ்டேஷன். மதுரைக்குக் கிழக்கு 12-மைல் தூரம்.

பொன்னனையாள் என்னுந் தாசிக்காக சுவாமி சித்தராயெழுந் தருளி வந்து இரசவாதஞ் செய்துகொடுத்த பொன்னைக்கொண்டு அவள் சுவாமியின் திருவுருவஞ் செய்வித்து மகிழ்ந்த ஸ்தலம். தமிழ்நாட்டு மூவேந்தராகிய 'தென்னர் சேரர் சோழர்' ஆகிய இவர்கள் பூசித்து வணங்கின ஸ்தலம்*. பிரமன் பூசித்த ஸ்தலம்.

“ நான் மறையோன் கழலே, சென்று பேணி யேத்த நின்ற தேவர்பிரா னிடமாம்”,—என்பது தேவாரம்.

*அறையார் புனலு மாமலரு மாடர வார்சடைமேற்
குறையார் மதியஞ் சூடி மாதோர் கூறுடை யானிடமா
முறையால் முடிசேர் தென்னர் சேரர் சோழர்க டாம்வணங்குந்
திறையா ரொளிசேர் செம்மை யோங்கு தென்றிருப் பூவணமே.

## 214. திருப்பூவனூர் :

தஞ்சாவூருக்குக் கிழக்கே 18½-மைலிலுள்ள நீடாமங்கலம் ரெயில்ஸ்டேஷனி லிறங்கித் தென்மேற்கு ராஜமன்னார்கோயிலுக்குப் போகும் வழியில் 2-மைல் சென்று பாமணி என்னும் ஆற்றைக் கடந்தால், இந்தத் தலத்தை அடையலாம்; இது பாமணி ஆற்றின் மேல்கரையில் இருக்கிறது.

சுகமுனி முதலாயினோர் புஷ்பவனம் வைத்து சுவாமியைப் பூசித்து முத்திபெற்ற ஸ்தலம்.

ஆவின் மேவிய வைந்தமர்ந் தாடுவான்
தூவெண் ணீறுது தைந்தசெம் மேனியான்
மேவ நூல்விரி வெண்ணியின் றென்கரைப்
பூவ னூர்புகு வார்வினை போகுமே.

**215.** பெண்ணாகடம் : (திருக்கடந்தைநகர்).

விருத்தாசலத்துக்குத் தென்மேற்கு 11-மைல். நல்ல பாதை. திருமுதுகுன்றத்துக்குச்[237]சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

தேவகன்னியர், காமதேனு, வெள்ளையானை இவர்கள் பூசித்த படியாற் பெண்ணாகடம் என்ற பெயர் வந்தது. இந்தத் தலத்தி லுள்ள ஆலயத்துக்குத் தூங்கானை மாடம் என்று பெயர். கலிக்கம்ப நாயனாருடைய ஸ்தலம். அப்பர் சுவாமிகள் "பொன்னார் திருவடிக் குன்றுண்டு விண்ணப்பம்" என்னுந் திருப்பதிகம் பாடித் தம்முடைய தோளின்மேற் சூலக்குறியும் இடபக்குறியும் பொறித் தருளப் பெற்ற ஸ்தலம் *

*பொன்னார் திருவடிக் குன்றுண்டு விண்ணப்பம் போற்றிசெய்யும்
என்னாவி காப்பதற் கிச்சையுண் டேலிருங் கூற்றகல
மின்னாரு மூவிலைச் சூலமென் மேற்பொறி மேவுகொண்டல்
துன்னார் கடந்தையுட் டூங்கானை மாடச் சுடர்க்கொழுந்தே.

**216.** திருப்பெரும்புலியூர்:

திருவையாற்றுக்கு [50] மேற்கு 2½-மைல். வழியில் 1-மைல் தூரத்தில் திருநெய்த்தானம் [174] இருக்கிறது.

வியாக்கிரபாதருஷி பூசித்த ஸ்தலம். சுவாமி யிருக்கும் இடத் தில் தாமரைபோல் வட்டமாய்க் கற்கள் போடப்பட் டிருக்கின்றன.

மண்ணுமோர் பாக முடையார் மாலுமோர் பாக முடையார்
விண்ணுமோர் பாக முடையார் வேத முடைய விமலர்
கண்ணுமோர் பாக முடையார் கங்கை சடையிற் கரந்தார்
பெண்ணுமோர் பாக முடையார் பெரும்புலி யூர்பிரி யாரே.

**217.** பெருவேளூர் என்பது காட்டூர் ஐயன்பேட்டை.

தலையாலங்காட்டிலிருந்து [146] கிழக்கு 3-மைல். திருவாரூரி லிருந்து [23] மேற்கே 7-மைல் தூரமுள்ள திருக்கரவீரம் அல்லது

க்ரையபுரம் [71] என்னும் ஸ்தலத்தை யடைந்து, அங்கிருந்து வட மேற்கு 1½-மைல் சென்றால், இந்த ஸ்தலத்தை யடையலாம்.

கௌதமருஷி முதலியோர் பூசித்த ஸ்தலம்.

கருமானின் உரியுடையர் கரிகாடர் இமவானூர்
மருமானூர் இவரென்று மடவாளோ டுடனாவர்
பொருமான விடையூர்வ துடையார்வெண் பொடிப்பூசும்
பெருமானூர் பிஞ்ஞகனூர் பேருவேளூர் பிரியாரே.

## 218. பேணுபெருந்துறை :

கும்பகோணத்துக்குத் [97] தென்கிழக்கு சுமார் 7-மைல். திருநறையூருக்குக் [161] கிழக்கு 1-மைல்.

சிவசக்தி, பிரமன் முதலியோர் பூசித்த ஸ்தலம். சுப்பிரமணிய சுவாமிக்கு மூகைத்தன்மை நீங்கிய ஸ்தலம். திருக்கடம்பந்துறையி லும் இந்த ஐதிஹ்யம் உண்டு. மங்கள தீர்த்தமும் வன்னி விருக்ஷ மும் கோயிலுக்கெதிரி லிருக்கின்றன.

பைம்மா நாகம் பன்மலர்க் கொன்றை பன்றிவெண் கொம்பொன்று பூண்டு
செம்மாந் தையம் பெய்கென்று சொல்லிச் செய்தொழில் பேணி யோர்செல்வ
ரம்மா னேக்கி யந்தளிர் மேனி யரிவையோர் பாக மமர்ந்த
பெம்மா னல்கிய தொல்புக ழாளர் பேணு பெருந்துறை யாரே.

## 219. பேரெயில் :

இஃது ஓகைப்பேரையூர் என வழங்கி வருகிறது.

திருவாரூருக்கு [23] மேற்கிலுள்ள குழிக்கரை ஸ்டேஷனி லிறங்கித் தெற்கே வயல் வழியே சுமார் 3-மைல் சென்றால் இந்த ஸ்தல மிருக்கிறது. வண்டிப் பாதையே சென்றால் 6-மைல் தூர மிருக்கும்.

நாட்டியத்தான்குடி [166] ரெயில்ஸ்டேஷனி லிறங்கி, மேற்கே 5-மைல் சென்று வடபாதிமங்கலம் என்னும் ஊரைச் சேர்ந்து, அங்கிருந்து வடக்கே ஒருமைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம். செம்மையான பாதையில்லை.

ஊருக்குத் தெற்கே ¼-மைல் தூரத்தில் வெள்ளையாறு ஓடு கிறது. கோயிலுக்கெதிரிற் கீழ்ப்பக்கத்தில் அக்கினி தீர்த்தம் இருக்கிறது. கோயில் சிறிது. சபாபதி விக்கிரகம் வெகு அழகா யிருக்கிறது.

சோரிவிப் பார்மழை சூழ்கதிர்த் திங்களை
விரிவிப் பார்வெயிற் பட்ட விளங்கொளி
எரிவிப் பார்தணிப் பாமெரப் பொருளையும்
பிரிவிப் பாரவர் பேரெயி லாளரே.

## **220**. திருப்பைஞ்ஞீலி:

திரிசிராப்பள்ளியி லிருந்து [132] வடக்கே 4-மைல் சென்று கொள்ளிடத்தைக் கடந்து 8-மைல் கிழக்கே சென்றால் இந்தத் தலத்தை அடையலாம். கொள்ளிடத்துக்குப்பாலங்கட்டியிருக்கிறது.

பசியினால் வருத்தமுற்று வந்த அப்பர் சுவாமிகளுக்குச் சிவபெருமான் கட்டமுது கொடுத்தருளிய தடாகமுந் தோட்டமும் இந்தத் தலத்துக்குத் தெற்கே $\frac{3}{4}$-மைல் தூரத்திலிருக்கின்றன.

ஒன்றி மாலும் பிரமனுந் தம்மிலே
நின்ற சூழ லறிவரி யானிடம்
சென்று பாரிட மேத்து பைஞ் ஞீலியுள்
என்று மேவி யிருந்த அடிகளே.

## **221**. திருமங்கலக்குடி:

திருவிடை மருதூர் [34] ரெயில் ஸ்டேஷனி லிருந்து வடகிழக்கு $3\frac{1}{2}$-மைல். வழியில் $2\frac{1}{2}$-மைலில் தென்குரங்காடுதுறை [102-ரெயில் ஸ்டேஷன்] இருக்கிறது.

மாகாளி, சூரியன், விஷ்ணு, பிரமன், அகஸ்தியர் இவர்கள் பூசித்த ஸ்தலம். இதனைத் திருநாவுக்கரசு நாயனாரது தேவாரத்தில்,

மங்க லக்குடி யீசனை மாகாளி
வெங்கதிர்ச் செல்வன் விண்ணொடு மண்ணுநேர்
சங்கு சக்கர தாரி சதுமுக
னங்க கத்திய னுமர்ச்சித் தாரன்றே,—

என வருதலால் அறிக. கோயிலுக்கெதிரில் திருக்குளமிருக்கிறது.

அரசனிடத்தில் தண்டலாளரா யிருந்த சிவபக்தர் ஒருவர் அரசனுடைய பணத்தைக் கொண்டு ஆலயத் திருப்பணி செய்ததை அரசன் தெரிந்து அவரை அழைப்பிக்க, அவர் அரசனது ஆக்ஞைக்குப் பயந்து உயிர் துறந்துவிட்டார்; அரசன் அவருடைய சரீரத்தைத் திருமங்கலக்குடிக்கு அப்பாற் கொண்டு போகும்படி கட்டளையிட்டான்; அந்த சரீரம் திருவியலூருக்கு வர, அத் தண்டலாள

ருடைய மனைவியார் வேண்டிக்கொள்ளத் திருமங்கலக்குடியில் வீற்றிருந்தருளும் மங்கள நாயகியாரின் திருவருளால் அவர் உயிர்த்தெழுந்தார்.

சீரி னார்மணி யும்மகிழ் சந்துஞ் செறிவரை
வாரி நீர்வரு பொன்னி வடமங்க லக்குடி
நீரின் மாமுநி வன்னெடுங் கைகொடு நீர்தனைப்
பூரித் தாட்டி யர்ச்சிக்க விருந்த புராணனே.

## 222. திருமணஞ்சேரி :

மாயூரத்துக்கடுத்த குற்றாலம் [150] ரெயில் ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து வடகிழக்கு $\frac{3}{4}$-மைல் சென்று திருத்துருத்தி என்கிற குற்றாலத்தை அடைந்து, அங்கிருந்து வடகிழக்கு 2-மைல் சென்று திருவேள்விக்குடியை [271] அடைந்து, அங்கிருந்து வடக்கு $1\frac{1}{2}$-மைல்சென்று எதிர்கொள்பாடி [46] என்னும் ஸ்தலத்தை அடைந்து, அங்கிருந்து கிழக்கு $\frac{1}{4}$-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தைச் சேரலாம்.

மன்மதன் பூசித்த ஸ்தலம். வைசியகுலத்திற் பிறந்த நங்கைநாத்திகளிருவரும் ஒருங்கே கருப்பமுற்றபோது அவர்கள் தமக்குப் பிறக்கும் குழந்தைகளை ஒருவர்க்கொருவர் சம்பந்தஞ்செய்து கொள்ளுகிறதென்று உறுதிசெய்து கொண்டார்கள். பின்பு ஒருத்தி பெற்றது ஆமையாயிருந்தபடியால் மற்றவள் தன் பெண்ணைக் கொடேன் என்று சொன்னாள். அந்த ஆமை சிவபெருமானைப் பூசித்து, அவரால், குறித்த பெண்ணை மணஞ்செய்யப் பெற்று, ஆமை யுரு நீங்கி இத்தலத்தில் மானிடவுருவம் பெற்றது.

பட்ட நெற்றியர் பாய்புலித் தோலினர்
நட்ட நின்று நவில்பவர் நாடொறும்
சிட்டர் வாழ்திரு வார்மணஞ் சேரியெம்
வட்ட வார்சடை யார்வண்ணம் வாழ்த்துமே.

## 223. திருமண்ணிப்படிக்கரை என்பது இலுப்பைப்பட்டு.

வைத்தீசுரன் கோயில் [207] ரெயில் ஸ்டேஷனிலிறங்கி மேற்கே 2-மைல் சென்று திருப்புன்கூரை [211] அடைந்து, மறுபடி மேற்கே 3-மைல் சென்று திருவாளொளி புற்றூரைச் [253] சேர்ந்து, அங்கிருந்து மேற்கே 1-மைல் சென்றால் இந்தத்தலத்தை யடையலாம்.

சிவபெருமான் ஆலகால விஷத்தை யருந்தியபோது, உமா தேவியார் அவருடைய கண்டத்தைப் பிடிக்க, அவர் அவ்விஷக் கறையைத் தமது கண்டத்திற் காட்டியருளிய ஸ்தலம்.

முன்னவ னெங்கள் பிரான் முதல் காண்பரி தாய பிரான்
சென்னியி லெங்கள் பிரான் திரு நீலமி டற்றெம் பிரான்
மன்னிய எங்கள் பிரான் மறை நான்குங்கல் லால்நிழற் கீழ்ப்
பன்னிய எங்கள் பிரான் பழ மண்ணிப் படிக்கரையே.

**224**. திருமயிலாடுதுறை என்பது மாயூரம்.

ரெயில் ஸ்டேஷன். காவிரியின் தென்கரையி லிருக்கிறது.

பார்வதிதேவியார் மயிலாயிருந்து சிவபெருமானைப் பூசித்த ஸ்தலம். இந்த க்ஷேத்திரத்திற் காவிரிநதியில் துலாமாசமாகிய ஐப்பசி மாதத்திற் செய்யும் ஸ்நாநம் மிகவும் விசேஷம்.

வெஞ்சினக்கடுங் காலன் விரைகிலா
னஞ்சி றப்பும் பிறப்பு மறுக்கலா
மஞ்சன் மாமயி லாடு துறை யுறை
யஞ்சொ லாளுமை பங்க னருளிலே.

**225**. மயிலாப்பூர் :

சென்னபட்டணத்துக்குத் தெற்கே 4-மைல் தூரம்.

பார்வதி தேவியார் மயிலாயிருந்து பூசித்த ஸ்தலம். வாயிலார் நாயனார் திருவவதாரஞ் செய்த ஸ்தலம். அரவுகடித்து இறந்து தகனமாய்ச் சாம்பலும் எலும்புமாயிருந்த (சிவநேச செட்டியாருடைய) அருமைப் புதல்வியைத் திருஞான சம்பந்தமூர்த்திநாய[illegible] பூம்பாவைத் திருப்பதிகம்பாடி உயிர்ப்பித்த ஸ்தலம்.*

உயர்வொப்பிலாத திருக்குறளைச் செய்தருளிய தெய்[illegible] புலமைத் திருவள்ளுவநாயனார் எழுந்தருளியிருந்த ஸ்தலம்.

மேற்குப் பார்த்த சந்நிதி. பிராகாரத்திற் சம்பந்த சுவாமியின் திருவுருவமும் பூம்பாவையின் திருவுருவமும் இருக்கின்றன. திருக்குளம் மேற்கிலிருக்கிறது.

*மட்டிட்ட புன்னையங் கானன் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சுரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பி னுருத்திர பல்கணத்தார்க்
கட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.

## 226. திருமயேந்திரப்பள்ளி:

சிதம்பரத்துக்குத் [122] தெற்கே $4\frac{1}{2}$-மைல் தூரத்திலுள்ள கொள்ளிடம் என்னும் ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து கிழக்கே 3-மைல் சென்று ஆச்சாபுரத்தை [159] அடைந்து, அப்பால் வட கிழக்கில் 4-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

சந்திரன், சூரியன், பிரமன், இந்திரன் ஆகிய இவர்கள் வழி பட்ட ஸ்தலம்.*

*சந்திரன் கதிரவன் றகுபுக ழயனொடு
மிந்திரன் வழிபட விருந்தவெம் மிறையவன்
மந்திரம் மறைவளர் மயேந்திரப் பள்ளியுள்
அந்தமில் லழகனை யடிபணிந் துய்ம்மினே.

## 227. திருமருகல்:

நன்னிலம் ரெயில் ஸ்டேஷனி லிருந்து கிழக்கே 4-மைல் சென்று திருப்புகலூரை [203] யடைந்து, அங்கிருந்து தென்கிழக்கே $3\frac{1}{2}$-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தைஅடையலாம். இதற்கு வடகிழக்கு 1-மைலில் சாத்தமங்கை [129] என்னும் ஸ்தலம் இருக்கின்றது.

விஷம் தீண்டி யிறந்த செட்டிப்பிள்ளையைத் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர் உயிர்ப்பித்தருளிய ஸ்தலம். கிழக்குப் பார்த்த சந்நிதி. எதிரில் திருக்குளம். தேவியாருக்கு வெள்ளிக் கவசம் போடுகிறார்கள். அம்மன் சந்நிதிக்கு நேரே "விஷந்தீர்த்த பிள்ளையார்" என்றொரு விக்கினேசுரர் வீதியில் வீற்றிருக்கிறார்.

சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையார் குவளை மலரும் மருகல்
உடையாய் தகுமோ விவளுண் மெலிவே.

## 228. திருமழபாடி:

திருவையாற்றுக்கு [50] மேற்கு 1-மைல் தூரத்திலுள்ள திரு நெய்த்தானத்திலிருந்து [174] வடமேற்கு 2-மைல் தூரம். இடையிற் கொள்ளிட நதி ஓடுகின்றது.

திருமாலும், தேவேந்திரனும் பூசித்த ஸ்தலம்.

"மாலினுர் வழிபடு மாமழ பாடியே",—என்பது தேவாரம்.

இந்தத் தலத்திற் பங்குனி மாதத்தில் நந்திதேவருக்குத் திருக் கலியாணம் நடக்கிறது. அப்போது திருவையாற்றிலிருந்து ஐயாற் றப்பரும், நந்திதேவரும் வருகிறார்கள். கணபதி-சுந்தரகணபதி. சோமாஸ்கந்த மூர்த்தி சிலையிலிருக்கிறது. ஸ்தல விருக்ஷமாகிய பனை பிராகாரத்தி லிருக்கிறது.

அலையடுத்த பெருங்கடனஞ் சமுதா வுண்டு
  வமரர்கடந் தலைகாத்த வையர் செம்பொற்
சிலையெடுத்து மாநாக நெருப்புக் கோத்துத்
  திரிபுரங்க ளெரியிட்ட செல்வர் போலும்
நிலையடுத்த பசும்பொன்னான் முத்தா ணீண்ட
  நிரைவயிரப் பலகையாற் குலையார்த் துற்ற
மலையடுத்த மழுபாடி வயிரத் தூணே
  யென்றென்றே நானரற்றி நைகின் றேனே.

**229**. திருமறைக்காடு என்பது வேதாரணியம்.

நாகபட்டினத்துக்குத்[165] தெற்கு 30-மைல். சாதாரணமான பாதை. திருத்தருப்பூண்டி ரெயில் ஸ்டேஷனிலிருந்து தென் கிழக்கு 22-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம். இதுவும் சாதாரணமான பாதை.

சப்த விடங்க ஸ்தலங்களி லொன்று. தியாகராஜருக் கெதிரிற் சுந்தரர் பரவையாருடன் இருக்கிறார். வேதங்கள் பூசித்துத்* திருக் காப்புச்செய்த கதவைத் திருநாவுக்கரசு சுவாமிகளும் திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளும் முறையே திறக்கவும் அடைக்கவும் பாடியருளிய ஸ்தலம்.

கண்ணினா லுமைக் காணக் கதவினைத்
திண்ண மாகத் திறந்தருள் செய்ம்மினே,—
இதுநன்கிறை வைத்தருள் செய்க எனக்குன்
கதவந்திருக் காப்புக்கொள் ளுங்கருத் தாலே,—என்பன தேவாரம்.

சேரமான் பெருமாளுயனார் சுந்தரமூர்த்தி நாயனாருடன் சென்று சுவாமி தரிசனஞ் செய்து பணிந்த ஸ்தலம். சுவாமிக்குப் பின்பக்கத்திற் சுவாமியும் அம்மையும் கலியாணகோலமாய் நிற்கிறார்கள். தக்ஷிணாமூர்த்திக்கு நான்கு திருமுகங்களிருக்கின்றன. ஸ்தல விநாயகர் — சிந்தாமணி கணபதி. வெளிப் பிராகாரத்தில் வீரஹத்தி விநாயகர்சந்நிதி இருக்கிறது. "வேதாரணியவிளக்கழகு"

என ஓர் உலக வழக்குளது. இந்தத் தலத்தில் துர்க்கை யம்மையும் மிக பிரபலம்.

ஆலயத்துள்ள தீப நெய்யை ஓர் எலி வந்து உண்ணும்பொழுது அச்சுடர் அதன் மூக்கிற் பட்டது. அப்போது அது தன் மூக்கை எடுத்துக்கொள்ள, தீபம் பிரகாசமா யெரிந்தது. தீபம் மங்கும்படியான சமயத்து எலி யிப்படிச் செய்தமையாற் சுவாமி அதற்கு மூவுலகும் ஆளும்படி பேரருள் புரிந்தார். அதன்படி அவ்வெலி மறுபிறப்பில் மாவலிச் சக்கிரவர்த்தியாய்ப் பிறந்து அரசாண்டது. இதனை அப்பர் சுவாமிகள் திருக்குறுக்கைக்கு அருளிச்செய்த திருநேரிசையில் எட்டாவது செய்யுளில்,

நிறைமறைக் காடு தன்னி னீண்டெரி தீபந் தன்னைக்
கறைநிறத் தெலிதன் மூக்குச் சுட்டிடக் கனன்று தூண்ட
நிறைகடல் மண்ணும் விண்ணும் நீண்டவா னுலகு மெல்லாங்
குறைவறக் கொடுப்பர் போலுங் குறுக்கைவீ ரட்ட னாரே.—

என்று சிறப்பித்திருக்கிறார்.

மறையடி வழுத்திய மறைவனத் தொருநாண்
மணிச்சுடர் நறுநெய் கவர்மதிக் கருப்பைக்
கிருவகை யேழெனுந் திருவுல கனைத்துங்
கொடுத்தவன்.— என்பது கல்லாடம். [96].

பலகாலங்கள் வேதங்கள் பாதங்கள் போற்றி
மலரால்வழி பாடுசெய் மாமறைக் காடா
வுலகேழுடை யாய்கடை தோறுமுன் னென்கொ
றலைசேர்பலி கொண்டதி லுண்டது தானே.

## 230. மாகறல் :

காஞ்சிபுரத்துக்குத் [56] தெற்கே 10-மைல். சாதாரணமான பாதை. வழியில் வேகவதி யாற்றையும் பாலாற்றையுங் கடக்க வேண்டும்.

இந்த ஸ்தலத்துக்குத் தெற்கே ½-மைலிற் சேயாறு ஓடுகிறது. தேவேந்திரன் பூசித்த ஸ்தலம்.

விங்குவிளை கழனிமிகு கடைசியர்கள் பாடல்விளை யாடலரவ
மங்குலொடு நீள்கொடிகண் மாடமலி நீடுபொழின் மாகறலுளான்
கொங்குவிரி கொன்றையொடு கங்கைவளர் திங்களணி செஞ்சடையினான்
செங்கண்விடை யண்ணலடி சேர்பவர்க டீவினைக டீருமுடனே.

## 231. திருமாணிகுழி:

திருப்பாதிரிப்புலியூர் [199] ரெயில் ஸ்டேஷனிலிறங்கி, அங்கிருந்து மேற்கே 2½-மைல் சென்று 'திருவஹீந்திரபுரம்' என்னும் விஷ்ணுக்ஷேத்திரத்தை யடைந்து, அங்குள்ள பெருமாள்கோயிலின் தென்புறத்திலிருக்கும் கேபர்மலை யோரமாகச் செல்லுங் கொடிவழியே 1-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை யடையலாம்.

விஷ்ணு வாமனவதாரஞ் செய்தபொழுது சிவபெருமானைப் பூசித்த ஸ்தலம்.*

*நீத்தநிய மத்தொழில னாகிநெடு மால்குறள னாகிமிகவுஞ்
சித்தமதொ ருக்கிவழி பாடுசெய நின்றசிவ லோகனிடமாங்
கொத்தலர்ம லர்ப்பொழிலி னீடுகுல மஞ்ஞைநட மாடலதுகண்
டொத்தவரி வண்டுகளு லாவியிசை பாடுதவி மாணிகுழியே.

## 232. திருமாந்துறை.

திரிசிராப்பள்ளியிலிருந்து [132] வடக்கு 3-மைல் சென்று திருஆனைக்கா [31] என்னும் ஸ்தலத்தை அடைந்து அங்கிருந்து வடகிழக்கு 10-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை யடையலாம்.

கண்ணுவமுநிவர் பூசித்த ஸ்தலம்.

இதற்குக் கிழக்கு 6-மைலில் அன்பிலாலந்துறையும் [16] தென்மேற்கு 4-மைலில் திருப்பாற்றுறையும் [202] இருக்கின்றன.

செம்பொ னார்தரு வேங்கையு ஞாழலுஞ் செருந்திசெண் பகமானைக்
கொம்பு மாரமு மாதவி சுரபுன்னை குருந்தலர் போந்துந்தி
யம்பொ னேர்வரு காவிரி வடகரை மாந்துறை யுறைகின்ற
வெம்பி ரானிமை யோர்தொழு பைங்கழ லேத்துதல் செய்வோமே.

## 233. திருமாற்பேறு:

காஞ்சீபுரத்திலிருந்து ரெயில் மார்க்கமாய் வடக்கே பளூர் வரையில் (9-மைல் தூரம்) சென்று, அங்கிருந்து தென்மேற்காய் 2½-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம் இந்த இரண்டரை மைல் தூரமும் வண்டி சாதாரணமாய்ப் போகும்.

காஞ்சீபுரத்திலிருந்து வடமேற்காய்க்கொடிவழியே சென்றால் திருமாற்பேறு 7-மைல் தூரந்தானிருக்கும். ஆனால் இந்தவழி மழைக்காலத்தில் மெத்த சங்கடமாயிருக்கும்.

ஸம்ஸ்கிருதத்தில் இந்தத் தலத்துக்கு 'ஹரிச்சக்ரபுரம்' என்று பெயர். குபன் என்னும் அரசன்பொருட்டு மகாவிஷ்ணு ததீசி முனிவருடன் போர்செய்யத், தமது சக்கிரம் அம்முனிவருடைய வஜ்ர சரீரத்திற்பட்டு வாய் மடிந்துவிட்டபடியால் வேறு சக்கிரம் பெற யோசித்து, சலந்தரனைக்கொன்ற சக்கிரம் சிவபெருமானிடத்தி லிருப்பதை யறிந்து, அதைப் பெறும் பொருட்டு விஷ்ணுமூர்த்தி இந்தத் தலத்துக்கு வந்து, சிவபெருமானைப் பிரதிதினமும் ஆயிரந் தாமரை மலர்களைக்கொண்டு அர்ச்சித்து வந்தார். பரமசிவன் அவருடைய பக்தியின் திறத்தைக் காணும்பொருட்டு ஒருநாள் ஒரு மலரை மறைத்தருள, மகாவிஷ்ணு சஹஸ்ரநாம அர்ச்சனை செய்யும்போது ஒரு திருநாமத்துக்குத் தாமரைமலர் குறைவுபடுதலைக் கண்டு வருந்தி, தமது கண்ணையே யிடந்துசாத்திப் பூஜையை நிறைவேற்றினர். அப்போது பரமசிவன் பிரசன்னமாகி மகாவிஷ்ணுவுக்குச் 'சுதரிசனம்' என்னும் சக்கிரத்தையுங் கண்ணையிடந்து அர்ச்சித்த காரணத்தினற் 'பதுமாக்ஷன்' என்னும் பெயரையுங் கொடுத்தருளி, இந்தத் தலத்தில் ஒரு க்ஷணப்பொழுது வதிந்தவர்க்கும் முத்தியளிக்கவேண்டும் என்று மகாவிஷ்ணு கேட்டுக்கொண்டபடி அநுக்கிரகமுஞ் செய்து மறைந்தருளினர்*. சோமனும் பூசித்த ஸ்தலம். "மன்னி மாலொடு சோமன் பணிசெயு, மன்னு மாற்பேற் றடிகளை", —யென்பது தேவாரம். விக்கிரகங்கள் வெகு அழகாயிருக்கின்றன.

*பொருமாற் றின்படை வேண்டிநற் பூம்புனல்
வருமாற் றின்மலர் கொண்டு வழிபடுங்
கருமாற் கின்னருள் செய்தவன் காண்டகு
திருமாற் பேறுதொ ழவினை தேயுமே.

## **234.** திருமீயச்சூர் :

பேரளம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து மேற்கு 1-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை யடையலாம்.

பெரிய கோபுரம். கிழக்குப் பார்த்த சந்நிதி. சூரியன் பூசித்த ஸ்தலம். சூரியன் சுவாமியையும் தேவியாரையும் யானைமேல் வைத்துப் பூஜைசெய்தானாம். கோயில் விமானம் யானை உட்கார்ந்திருப்பதுபோ லிருக்கிறது. தேவியாரும் உட்கார்ந்தவண்ணமா யிருக்கிறார்.

**காயச் செவ்விக் காமற் காய்ந்து கங்கையைப்
பாயப் படர்புன் சடையிற் பதித்த பரமேட்டி
மாயச் சூரன் றறுத்த மைந்தன் றாதைதன்
மீயச் சூரைத் தொழுதும் வினையை வீட்டுமே.**

## 235. திருமீயச்சூர் இளங்கோயில் :

மீயச்சூர் [234] ஆலயத்திலுள்ள சுவாமி சந்நிதிக்குப் பக்கத்தில் வடபுறமாயிருக்கிறது. ஆலயம் சிறிது. காளி பூசித்த ஸ்தலம்.

**தோற்றுங் கோயிலுந் தோன்றிய கோயிலும்
வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையாற்
கேற்றங் கோயில்கண் டீளங் கோயிலே.**

## 236. திருமுண்டீச்சுரம் என்பது கிராமம்.

திருவெண்ணெய்நல்லூருக்குக் [266] கிழக்கு 3-மைல். திருவெண்ணெய் நல்லூருக்குச் சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

பிரமாவும் தேவேந்திரனும் பூசித்த ஸ்தலம். கோயில் சிறிது. கோபுரம் இல்லை.

**உரிந்தவுடை யார்துவரா லுடம்பை மூடி யுழிதருமவ் வூமரவ
ருணரா வண்ணம்
பரிந்தவன்காண் பனிவரைமீப் பண்ட மெல்லாம் பரித்துடனே நிரந்துவரு
பாய்நீர்ப் பெண்ணை
நிரந்துவரு மிருகரையுந் தடவா வோடி நின்மலனை வலங்கொண்டு
நீள நோக்கித்
திரிந்துலவு திருமுண்டீச் சுரத்து மேய சிவலோகன் காணவனென்
சிந்தை யானே**

## 237. திருமுதுகுன்றம் என்பது விருத்தாசலம்.

கூடலூருக்குத் தென்மேற்கு 35-மைல் தூரம். நல்ல வழி. மத்தியிற் குறிஞ்சிப்பாடி யென்னும் ஊர் இருக்கிறது.

சிதம்பரம் ரெயில்ஸ்டேஷனிலிருந்து 28-மைல் தூரம். வழியில் வெள்ளாற்றைக் கடக்கவேண்டும். ஆற்றுக்குப் பாலம் இல்லை.

சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் பரவையாரின் பொருட்டுப் பொன் தரும்படி சுவாமியை வேண்டின ஸ்தலம்.

விருத்தகாசி யென்று சொல்லப்படும் விசேஷமான ஸ்தலம். இங்கு உயிர்விடும் பிராணிகளுக்கெல்லாம் பார்வதிதேவியார் தமது வஸ்திரத்தினால் வீசி இளைப்பாற்ற, சிவபெருமான் பஞ்சாக்ஷரோப தேசஞ் செய்து அப்பிராணிகளைத் தமதுருவமாக்கும் அரும்பதி யாதலாற் காசியினுஞ் சிறந்தது. இச்சிறப்பைக் கந்தபுராணம் வழிநடைப் படலத்தில்,

தூசினு லம்மை வீசத் தொடையின்மேற் கிடத்தித் துஞ்சு
மாசிலா உயிர்கட் கெல்லா மஞ்செழுத் தியல்பு கூறி
யீசனே தனது கோல மீந்திடு மியல்பா லந்தக்
காசியின் விழுமி தான முதுகுன்ற வரையுங் கண்டான்.—

எனக் கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் கூறுகின்றார்.

*நேடியோ னுன்முகனு மிர வியொடு மிந்திரனும்
முடியால் வந்திறைஞ்ச முது குன்றம மர்ந்தவனே
படியா ரும்மியலாள் பா வையிவள் தன்முகப்பே
யடிகேள் தந்தருளா யடி யேனிட்ட ளங்கெடவே.

## 238. திருமுருகன்பூண்டி :

ஈரோட்டிலிருந்து ரெயில்வழியாய் மேற்கே திருப்பூர் வரையில் 32-மைல் சென்று அங்கிறங்கி வடக்கே அவிநாசிக்குப் போம் வழியில் 5-மைல் தூரஞ் சென்றால் இந்த ஸ்தலத்தை யடையலாம். அவிநாசிக்குத் [12] தென்மேற்கு 3-மைல் தூரம்.

முருகக்கடவுள் பூசித்த ஸ்தலம். சேரமான் பெருமாணயனார் கொடுத்த திரவியங்களை யெடுப்பித்துக்கொண்டு சுந்தரமூர்த்தி நாயனார் திருவாரூருக்குச் செல்லுகையிற் சுவாமி பூதர்களை வேடர்களாக்கி அனுப்பி அத் திரவியங்களைப் பறிக்கச்செய்து, பின்பு நாயனார் பதிகம்பாடித் துதிக்க, அவைகளை மீட்டுங் கொடுத்தருளிய ஸ்தலம்.

கோயிலுக்கு வெளியில் பிள்ளையார் கோயில் ஒன்றிருக்கிறது. அதற்கெதிரில் ஒரு பாறையிற் சிறுகுழி ஒன்றிருக்கிறது. அதில் 12-வருஷத்துக் கொருவிசை ஜலம் பொங்குவதாகச் சொல்லுகிறார்கள்

கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவலாமை சொல்லித்
திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண் டாறலைக்குமிடம்
முடுகு நாறிய வடுகர் வாழ் முருகன் பூண்டிமா நகர்வா
யிடுகு நுண்ணிடை மங்கை தன்னொடு மெத்துக்கிங்கிருந்தீ ரெம்பிரானிரே.

**239.** வடதிருமுல்லைவாயில் :

சென்னபட்டணத்துக்கு மேற்கு 13-மைலிலுள்ள ஆவடி ரெயில் ஸ்டேஷனி லிறங்கி அங்கிருந்து வடகிழக்கு 2½-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை அடையலாம். சாதாரணமான பாதை.

சுவாமி சந்நிதியில் இரண்டு எருக்கந்தூண்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. சுப்பிரமணியசுவாமி பூசித்த ஸ்தலம். தொண்டைமான் சக்கிரவர்த்தி அநுக்கிரகம் பெற்ற திருப்பதி.*

*சொல்லரும் புகழான் தொண்டைமான் களிற்றைச்
சூழ்கொடி முல்லையாற் கட்டிட்
டெல்லையி லின்பம் அவன்பெற வெளிப்பட்
டருளிய இறைவனே யென்று
நல்லவர் பரவுந் திருமுல்லை வாயில்
நாதனே நரைவிடை யேறீ
பல்கலைப் பொருளே படுதுயர் களையாய்
பாசுப தாபரஞ் சுடரே.

**240.** தென்திருமுல்லைவாயில்:

சீகாழிக்குக் [88] கிழக்கு 5-மைல்; நல்லவழி. இது கடலோரத்தி லிருக்கிறது.

தேவேந்திரனும் சுதர்மனும் பூசித்த ஸ்தலம்.

வரைவந் தெடுத்த வலிவா ளரக்கன் முடிபத்து மிற்று நெரிய
வுரைவந்த பொன்னி னுருவந்த மேனி யுமைபங்க னெங்கள் பரனூர்
வரைவந்த சங்கொ டகிலுந்தி வந்து மிளிர்கின்ற பொன்னி வடபாற்
றிரைவந்து வந்து செறிதேற லாடு திருமுல்லை வாயி லிதுவே.

**241.** திருமூக்கீச்சுரம் என்பது உறையூர்.

திரிசிராப்பள்ளிக்கு [132] மேற்கு 1-மைல். பிரமா வந்து பூசிக்கும்போது சிவபெருமான் வேளைக்கொரு வர்ணமாக வீற்றிருக்கக்கண்டு அவருக்குப் பஞ்சவர்ணநாதேசுரர் என்று பெயர் கொடுத்த ஸ்தலம். புகழ்ச்சோழநாயனருடைய ஸ்தலம். மூவேந்தரு சேர்ந்து தொழுத திருப்பதி.†

†நீருளா ரும்மலர் மேலுறை வானெடு மாலுமாய்ச்
சீருளா ருங்கழ றேடமெய்த் தீத்திர ளாயினன்
சீரினா லங்கொளிர் தென்னவன் செம்பியன் வில்லவன்
சேரு மூக்கீச்சுரத் தடிகள்செய் கின்றதோர் செம்மையே.

## 242. திருவக்கரை :

விழுப்புரம் ரெயில் ஸ்டேஷனிலிருந்து வடக்கு 5½-மைல் சென்று, புறவார் பனங்காட்டூர் [209]என்னும் ஸ்தலத்தையடைந்து, அங்கிருந்து கிழக்கு 8-மைல் சென்று கூனிச்சம்பட்டு என்னும் கிராமத்தை யடைந்து, அங்கு வடக்கே திரும்பி 1-மைல் சென்று கொடுக்கூர் ஆற்றைக் கடந்து, அப்பால் ½-மைல் சென்றால் திருவக்கரையை அடையலாம். விழுப்புரத்திலிருந்து கூனிச்சம்பட்டுவரையில் (13½-மைல்) செம்மையான பாதையிருக்கிறது. கூனிச்சம்பட்டிலிருந்து திருவக்கரை வரையில் (1½-மைல்) சாதாரண வழி.

வக்கிராசூரன் பூசித்த ஸ்தலம்.

சந்திர சேகரனே யரு ளாயென்று தண்விசும்பி
லிந்திர னும்முதலா விமை யோர்கள் தொழுதிறைஞ்ச
வந்தா மூவெயிலு மன லாய்விழ வோரம்பினால்
மந்தர மேருவில்லா வளைத் தானிடம் வக்கரையே.

## 243. வடுகூர்:

புதுச்சேரிக்கு மேற்கு 10-மைலிலுள்ள சின்னபாபு சமுத்திரம் ஸ்டேஷனி லிறங்கி மேற்கே 2-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை யடையலாம்.

இதற்கு ஆண்டார்கோயில் என்று பெயர் வழங்குகிறது.

வடுகேனாகிய வைரவர் பூசித்த ஸ்தலம்.

இந்த ஸ்தலத்துக்குத் தென்மேற்கு 1-மைல் தூரத்தில் திருத்துறையூர் [151] இருக்கிறது.

சுடுகூ டெரிமாலை யணிவர் சுடர்வேலர்
கொடுகூர் மழுவாளொன் றுடையர் விடையூர்வர்
கடுகூர் பசிகாமங் கவலை பிணியில்லார்
வடுகூர் புனல்சூழ்ந்த வடுகூ ரடிகளே.

## 244. திருவலஞ்சுழி :

கும்பகோணத்துக்கு [97] மேற்கு 4-மைல். நல்ல பாதை.

தேவேந்திரன் பூசித்தஸ்தலம். தலத்துக்கு [illegible]கில் அரசலாறு என்று வழங்கும் நதி ஓடுகிறது. கோயில் பெரிது. விநாயகர்- வெள்ளை விநாயகர். அமுதம் கடைந்த காலத்தில் இவ்விநாயகரைப் பூசித்ததால் அமுதம் திரண்டதாயும், தேவேந்திரன் இந்த விநாயகரை பூசித்ததாயும், அவன் திருவலஞ்சுழிக்கு வந்தகாலத்தில்

இவ்விநாயகர் அந்தத்தலத்தில் நின்றுவிட்டதாயும் சொல்லுகிறார்கள். பிரமோற்சவம் முதலிய விநாயகருக்குத்தான் நடக்கின்றன. விநாயகரைத் தீண்டக்கூடாதாம். காவிரிபிலத்திற் சென்றுவிட்டதாயும் அது வெளிப்படு நிமித்தம் ஏரண்டமுநி என்பவர் தம்மைப் பலியாகக் கொடுத்ததாயும், பின்பு காவிரி மேலேவந்து வலமாகச் சுழித்துக்கொண்டு சென்றதாயும் அக்காரணத்தால் ஊருக்குத் திருவலஞ்சுழி என்று பெயர் வந்ததாயும் சொல்லுகிறார்கள். ஏரண்ட முநிவருடைய உருவமும் கோயிலி லிருக்கிறது. அவருக்குப் பின்பக்கத்தில் வலஞ்சுழிநாதர் அல்லது தக்ஷிணாவர்த்தர் என்னும் சிவலிங்கப்பெருமான் வீற்றிருக்கின்றார்.

> பூச நீர்பொழி யும்புனற் பொன்னியிற் பன்மலர்
> வாச நீர்குடை வாரிடர் தீர்க்கும் வலஞ்சுழித்
> தேச நீர்திரு நீர்சிறு மான்மறி யீர்சொலீ
> ரேச வெண்டலை யிற்பலி கொள்வதி லாமையே.

**245.** <u>திருவலம்புரம்</u> என்பது பெரும்பள்ளம்.

சீகாழியிலிருந்து [88] தென்கிழக்காய்க் காவிரிப்பூம்பட்டினத்துக்குப் [87] போகும்வழியில் 7-மைல் சென்று திருவெண்காட்டைச் [263] சேர்ந்து, பின்னும் அந்தவழியில் $1\frac{1}{4}$-மைல் சென்று, அங்கு வழியைவிட்டு மேற்கே $\frac{1}{4}$-மைல்சென்றால் இத்தலத்தை யடையலாம். இதற்குத் தென்மேற்கு $1\frac{1}{4}$-மைலில் தலைச்சங்காடு [145]இருக்கிறது.

விஷ்ணு பூசித்து வலம்புரிச் சங்கு பெற்ற ஸ்தலம்.

திருஞானசம்பந்தசுவாமிகளுடன் அப்பர் சுவாமிகள் தலங்கள் தோறுந் தரிசித்துச் சென்றபொழுது சிவபெருமான் அப்பர்சுவாமிகளைத் தாமே இத்தலத்துக்கு வரவழைத்துத் தரிசனந்தந்த ஸ்தலம். "பண்மலிந்த மொழியவரும் யானுமெல்லாம் பணிந்திறைஞ்சித் தம்முடைய பின்பின் செல்ல, மண்மலிந்த வயல்புடைசூழ் மாடவீதி வலம்புரமே புக்கங்கே மன்னினாரே",—"வாவா எனவுரைத்து மாயம்பேசி வலம்புரமே புக்கங்கே மன்னினாரே",—என்பன தேவாரம்.

> மூவாத மூக்[illegible]ாம் புரையிற் சாத்தி மூவருரு வாய முதல்வ ரிந்நாட்
> கோவாத வெரிகணையைச் சிலைமேற் கோத்த குழகனார் குளிர் கொன்றை சூடி யிங்கே
> போவாரைக் கண்டடியேன் பின்பின் செல்லப் புறக்கணித்துத் தம்முடைய பூதஞ் சூழ
> வாவா வெனவுரைத்து மாயம் பேசி வலம்புரமே புக்கங்கே மன்னினாரே.

**246.** திருவலிதாயம் என்பது பாடி.

சென்னபட்டணத்துக்கு மேற்கு 6-மைலிலுள்ள வில்லிவாக்கம் (கொன்னூர்) ரெயில்ஸ்டேஷனி லிறங்கித் தென்மேற்கே கொடி வழியாய் 2-மைல் சென்றால் இத்தலத்தை அடையலாம்.

பாரத்துவாஜர், பிருஹஸ்பதி, அநுமார் முதலியோர் பூசித்த ஸ்தலம். கோயில் சிறிது. அதிலுள்ள கிணற்றுத் தண்ணீர் நன்றா யிருக்கிறது.

ஐய னொய்யனணி யன்பிணி யில்லவ ரென்றுந் தொழுதேத்தச்
செய்யன் வெய்யபடை யேந்தவல் லான்றிரு மாதோ டுறைகோயில்
வையம் வந்துபணி யப்பிணி தீர்த்துயர் கின்ற வலிதாய
முய்யும் வண்ணநினை மின்னினைந் தால்வினை தீருந் நலமாமே.

**247.** வலிவலம்:

திருவாரூருக்குத் [23] தென்கிழக்கு 6-மைல். இதற்கு வடக்கு 2-மைல் தூரத்திற் [84] கன்றாப்பூர் இருக்கின்றது.

சூரியனும், காரணருஷியும், கரிக்குருவியும் பூசித்த ஸ்தலம். நல்லூரிற் [158] போலக் கட்டுமலைமேற் சுவாமி சந்நிதி இருக்கிறது. கோயிலைச்சுற்றிக் கிழக்குப் பக்கந்தவிர மற்றெல்லாப்பக்கங்களிலும் மாலையிட்டதுபோல ஓடை யொன்று இருக்கின்றது.

நல்லான்கா ணன்மறைக ளாயி னான்கா
ணம்பன்கா ணணுகாதார் புரமூன் றெய்த
வில்லான்காண் விண்ணவர்க்கு மேலா னான்காண்
மெல்லியலாள் பாகன்காண் வேத வேள்விச்
சொல்லான்காண் சுடர்மூன்று மாயி னான்காண்
தொண்டாகிப் பணிவார்க்குத் தொல்வா னீய
வல்லான்காண் வானவர்கள் வணங்கி யேத்தும்
வலிவலந்தான் காணவனென் மனத்துளானே.

**248.** திருவல்லம்:

இஃது இப்பொழுது திருவலம் என்று சொல்லப்படுகிறது.

ரெயில் ஸ்டேஷன். ஆறுகாடு ரெயில் ஸ்டேஷனுக்கு மேற்கு 8-மைல் தூரத்தில், நீவா என்னும் நதியின் மேற்கரையி லிருக்கிறது.

நவக்கிரகங்களும் வல்லாளனென்னும் அரசனும் பூசித்தஸ்தலம்.

எரித்தவன் முப்புர மெரியின் மூழ்கத்
தரித்தவன் கங்கையைத் தாழ்சடைமேல்
விரித்தவன் வேதங்கள் வேறுவேறு
தெரித்தவ னுறைவிடந் திருவல்லமே.

**249**. திருவன்னியூர் :

திருவீழிமிழலைக்கு [261] வடமேற்கு 2-மைல்; சாதாரண பாதை. திருவீழிமிழலைக்குச் சொல்லியிருக்கும் வழியைப் பார்க்க.

அக்கினி பூசித்த ஸ்தலம். கோயில் மிகவும் சிறிது.

> ஞானங் காட்டுவர் நன்னெறி காட்டுவர்
> தானங் காட்டுவர் தம்மடைந் தார்க்கெல்லாம்
> தானங் காட்டித்தன் றாளடைந் தார்கட்கு
> வானங் காட்டுவர் போல்வன்னி யூரரே.

**250**. திருவாஞ்சியம்:

நன்னிலம் ரெயில்ஸ்டேஷனுக்கு மேற்கு 6½-மைல். ஸ்டேஷனிலிருந்து போம்வழியில் 1½-மைல் தூரத்தில் திருக்கொண்டீச்சுரமும் [113], அப்பால் 1½-மைல் தூரத்தில் நன்னிலமும் [163] இருக்கின்றன. திருவாரூர் ஸ்டேஷனிலிறங்கி வடமேற்கு கும்பகோணம் போகிற வழியில் 11-மைல் சென்றாலும் இந்த ஸ்தலத்தை அடையலாம்.

திருவாஞ்சியம் புத்தாறு என்னும் நதியின் வடகரையிலிருக்கிறது. விஷ்ணுமூர்த்தி சிவபெருமானைப் பூசித்துத் தம்மை விட்டுப் பிரிந்துபோன லக்ஷ்மியை படையப்பெற்ற ஸ்தலம். திருவாஞ்சியம்— திருவை (விஷ்ணு) வாஞ்சித்த இடம். கோயில் பெரிது. சந்தன விருக்ஷம் பிராகாரத்திலிருக்கிறது. குப்தகங்கை தீர்த்தம் கோயிலுக்கு வடக்கே இருக்கிறது. கார்த்திகைமீ ஞாயிற்றுக் கிழமைகளில் இத்தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்வது விசேஷம். திருவாஞ்சியம் மிகவும் விசேஷமான ஸ்தலம். இங்கு இறப்பவர்களுக்கு இயமவாதனை யில்லையாம். கோயிலில் இயமனுக்கு ஒரு சந்நிதி இருக்கிறது. காசிக்குச் சமானமாகச் சொல்லப்படுந் தென்னாட்டு ஸ்தலங்கள் ஆறனுள் ஒன்று.

> அங்க மாறு மருமறை நான்குடன்
> தங்கு வேள்வியர் தாம்பயி லுந்நகர்
> செங்கண் மாலிட மார்திரு வாஞ்சியம்
> நு வார்நம்ம மார்க்க மரரே.

**251**. வாட்போக்கி :

இஃது இரத்தினகிரி என வழங்கி வருகிறது. திரிசிராப்பள்ளிக்கு மேற்கு 20-மைலிலுள்ள குழித்தலை ரெயில் ஸ்டேஷனிலிறங்கி வடமேற்கு 5-மைல் தூரஞ்சென்றால் இந்த ஸ்தலத்தை யடையலாம்.

கோயில் மலைமேலிருக்கிறது. வழியில் திருக்கடம்பந்துறை[61] யிருக்கிறது. இந்திரன், சயந்தன், வாயு, ஆதித்தன், ஆதிசேடன், அகத்தியர் முதலியோர் பூசித்த ஸ்தலம். ஆரிய தேசத்தரசன் மாணிக்கம் வேண்டி ஸ்தலங்கள்தோறுஞ் சென்றுங் கிடையாமல் இங்குவர, சிவபெருமான் ஒரு நீர்த்தொட்டியைக் காட்டி அதைக் காவிரி ஜலத்தினால் நிரப்பும்படிச் சொல்ல, அவ்வாறு செய்தும் அத்தொட்டி நிறையாமலிருக்க, அரசன் கோபங்கொண்டு உடைவாளையுருவி ஓச்ச நினைக்க, சிவபெருமான் அவ்வாளைப் போக்கிவிட்டு இரத்தினத்தைக் காண்பித்தருளினார். அரசன் அதை விரும்பாது விட்டுச் சிவபணிவிடை ஒன்றையே செய்து முத்திபெற்ற ஸ்தலம். சிவபெருமான் வாளைப் போக்கிவிட்டபடியால் இந்த ஸ்தலத்துக்குத் திருவாட்போக்கி யென்னும் பெயர் உண்டாயிற்று.

வந்திவ் வாறு வளைத்தெழு தூதுவர்
உந்தி யோடி நரகத் திடாமுனம்
அந்தி யின்னொளி தாங்கும்வாட் போக்கியார்
சிந்தி யாவெழு வார்வினை தீர்ப்பரே.

## 252. திருவாய்மூர்

திருவாரூருக்குத் தென்கிழக்கு 15-மைல். திருக்கோளிலியிலிருந்து [126] தென்கிழக்காய் 3-மைல் சென்றாலும் இந்த க்ஷேத்திரத்தை யடையலாம். சாதாரண பாதை.

சப்தவிடங்க ஸ்தலங்களுள் ஒன்று. சூரியன் பூசித்த ஸ்தலம். கோயில் கிழக்குப் பார்த்தது. எதிரிற் சூரியதீர்த்தம்.

திருநாவுக்கரசு நாயனார் வேதாரணியத்தி லிருந்தபொழுது பரமசிவன் அவருக்குத் தோன்றியருளித் திருவாய்மூருக்கு வரும்படி கட்டளையிட,

எங்கே யென்னை யிருந்திடந் தேடிக்கொண்
டங்கே வந்தடை யாளம் அருளினார்
தெங்கே தோன்றுந் திருவாய்மூர்ச் செல்வனார்
அங்கே வாவென்று போனார் அதென்கொலோ.—

என்று பாடிக்கொண்டு செல்லும்பொழுது அவருக்குப் பின் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரும் வர இருவருங் கூடிக்கொண்டு சென்று தரிசித்த ஸ்தலம்.

திறக்கப் பாடிய என்னினுஞ் செந்தமிழ்
உறைப்புப்பாடி யடைப்பித்தா ருண்ணின்றார்
மறைக்க வல்லரோ தம்மைத் திருவாய்மூர்ப்
பிறைக்கொள் செஞ்சடை யாரிவர் பித்தரே—

என்னுந் தேவாரம் ஈண்டுணரற்பாலது.

பாலின் மொழியாளோர் பாகங் கண்டேன்
பதினெண் கணமும் பணியக் கண்டே
னீல நிறமுண்ட கண்டங் கண்டே
னெற்றி நுதல்கண்டேன் பெற்றங் கண்டேன்
காலைக் கதிர்செய் மதியங் கண்டேன்
கரந்தை திருமுடிமேற் றோன்றக் கண்டேன்
மாலைச் சடையு முடியுங் கண்டேன்
வாய்மூ ரடிகளைநான் கண்ட வாறே.

## 253. திருவாளொளிபுற்றூர் :

வைத்தீசுரன்கோயில் [207] ரெயில் ஸ்டேஷனி லிறங்கி மேற்கு 2-மைல் சென்று திருப்புன்கூர்[211] என்னும் ஸ்தலத்தை அடைந்து பின்னும் மேற்கே 3-மைல் சென்றால் இந்த ஸ்தலத்தை யடையலாம்.

விஷ்ணுமூர்த்தி மாணிக்கத்தை வைத்துப் பூசித்த ஸ்தலம். அதனால் ஸ்தலத்துக்கு அரதனபுரம் எனவும் பெயருண்டு. வண்டு பூசித்த ஸ்தலம். சுவாமி விஜயனுடைய கைவாளை ஒரு புற்றில் ஒளித்து வைத்த ஸ்தலம். அக்காரணத்தால் வாள் ஒளி புற்றூர் என்னும் பெயர் வந்தது. "உன் கரவாள், நின்ற வாகையி னயற் புற்றேஒளித்தனன்",—என்பது ஸ்தலபுராணம்.

"திருவி னுயக னாகிய மாலுக் கருள்கள் செய்திடுந் தேவர்பிரானை",— "வண்டுவாழ் பதியுடையார் வாளொளிபுற் றூருளாரே",—"விசயற்கருள் செய்வான்",—எனத் தேவாரத்தில் வருவன கவனிக்கற்பாலன.

திருவி னுயக னாகிய மாலுக் கருள்கள் செய்திடுந் தேவர் பிரானை
யுருவி னானையொன் றுவறி வொண்ணு மூர்த்தி யைவிச யற்கருள் செய்வான்
செருவி லேந்தியோர் கேழற்பின் சென்று செங்கண் வேடனு
யென்னொடும் வந்து
மருவி னான்றனை வாளொளி புற்றூர் மாணிக் கத்தைமறந்
தென்னினைக் கேனே.

## 254. திருவான்மியூர் :

சென்னபட்டணத்துக்குத் தெற்கு 5-மைலிலுள்ள சைதாப் பேட்டை ரெயில் ஸ்டேஷனிலிறங்கி அங்கிருந்து தென்கிழக்கு

